**புத்திசாகரர்** :—ராஜ ராஜேச்வரா! நமது நாட்டிற்கு இவ்வளவு கீர்த்தியையும் பிரக்கியாதியையுங் கொண்டுவந்த தமது குமாரன் போஜனது குணங்களைத்தாமே அறிந்திருக்கின்றீர்! ஆகலின் யான் அதைப்பற்றி புகழ்ந்துபேசுவது அநாவசியம். தாம் இப்பொழுதே தக்கமரியாதையுடன் அடியேங்களோடு எதிர் சென்று அவனை யழைத்து வருதல் அழகு! அன்றியும் அவனது பிதா சிந்துல மகா ராஜர் நாடாகிய இத் தாரா ராஜ்ஜியத்தையும் இப்பொழுதே அவனுக்கு ஒப்புவிப்பது தமக்கு தர்மம்! இதுவே தமது குலத்திற்கும் கீர்த்திக்கும் சிறந்த மேன்மையைவிளைவிக்கும். மேலும் தமது தமயனார் சிந்துலமஹாராஜர் இறந்துபோகும்பொழுது தமக்குரைத்தவசனங்களைத்தாமிப்பொழுது கவனிக்கவேண்டும். "எனது பிரியமுள்ள தம்பீ! யான் இன்னும் சற்று நேரந்தான் ஜீவித்திருப்பேன், இப்பொழுது உன்னிடத்தில் யான் ஒப்புவிக்கும் பொருளைப்பாதுகாப்பாய் என்று நம்புகின்ற என்னை மண்ணாசையாலாயினும் பொன்னாசையாலாயினும் நீதுரோகம் செய்வாயாகில் சர்வநியந்தாவாகிய பரமேசுவரன் உன்னைத்தண்டிப்பானென்பது நிச்சயம்! எனது குலதீபமாகிய போஜனையடையயான் எவ்வளவு தவஞ்செய்தேனோ அஃது உனக்கே தெரியும். அவனுக்குத் தக்கவயது வந்து முடிசூட்டுமுன்னரே எனக்கு அந்தியகாலம் நேரிட்டுவிட்டது. ஆகலின், என்செல்வனுக்காக நீயே யிவ்விராஜ்ஜியத்தை யரசாண்டுவந்து போஜனுக்குத் தக்கவயது வந்தவுடன் ஒரு தகுந்த ராஜகன்னிகையையும் மணம் புரிவித்து இவ்விராஜ்ஜியத்தையும் ஒப்புவித்துவிடுவாயென்று பூர்ணமாய் நம்புகின்றேன்!"—ராஜசசாங்கா! தாமிவ்வசனங்களை இச்சமயத்திற்றான் நினைக்கவேண்டும்! இப்பொழுது போஜனுந் தக்க வயதுவந்து டகைவரும் புகழத்தக்க சாமர்த்தியமுள்ளவனாயினன். இம்மங்களகரமான சமயத்திலேயே போஜனுக்குத் தாம் முடிசூட்டுவீராயின் தமது கீர்த்திக்கு நிகரிரா!

* "சாதல்வந் தடுத்த காலுந்
தனக்கொரு சாத லின்றிப்
பூதல மிருக்குங் காறும்
புகழுடம் பிருக்கு மந்தக்
கோதறு புகழின் யாக்கை
கொடையினாற் செல்வங் கூர
வாழ்தலை யுடையா ரன்றே
வானமும் வணங்கு நீரார்!" (சஉ)

ஆகலின், இப்பொழுதே போஜனை எதிர்சென்று நகருக்கழை த்துவந்து, அவனுக்கு இவ்விராஜ்ஜியத்தையுந்தந்து, தமது புகழ் பூமியெங்கும் விளங்க, எம்மையும் மற்றைய பிரஜைகளை யுஞ் சந்தோஷிக்கச் செய்வீரென மிகவும் வணக்கமாய்ப் பிரா ர்த்திக்கின்றேம்.

சபை:—மஹாராஜா! தாங்கள் அப்படியே செய்வீரெ னப் பிரார்த்திக்கின்றோம்.

முஞ்ஜ:—(ஒன்றுந்தோன்றமற் சற்றுநேரம் பேசாமலிருந்து, பற்களை நறநற வென்று கடித்துக் கோபத்துடன் சபையோரைச் சுற்றி நோக்கி) சபையோர் காள்! என்ன சொன்னீர்கள்? இதை யெமக்கெடுத்துரைக் கவோ இன்றுகூடினீர்கள்! இவையெல்லாம் புத்திசாகரரு டைய கலகமோ?

தர்ம மாயிது காறு முங்களைத்
தாங்கி வந்ததன் லாபமோ
மர்ம மாமுபமை மாய வார்த்தையின்
மாய்க்கி நீர்மதி யீனாகாள்!
சர்ம மென்றுமைக் கையெடுக்கினிற்
சாகு வீர்விஷ மேறியே
துர்ம னோரத மாடி கட்டிடிற்
றூங்கு வீர்விழுந் திங்ஙனே! (கங)

* பிள்ளையார் புராணம்.

**புத்தி:**—மஹாராஜா ! நீதியை யெடுத்துரைத்தனன். தாம் அதைக்கொண்டாற் கொள்ளுங்கள், விட்டால் விடுங்கள் ! யான் எனது கடமையை நிறைவேற்றினேன். இனித் தம்முடைய சித்தம்.

* "அன்புறு மறத்தி னெலடுக்கு மின்பமே
யின்பெனத் தக்கதா லேனை யின்பெலாந்
துன்பமும் பழியையுந் தோற்று மாதலா
லன்புறு மறத்தினை மறப்பிற் கேடுறாம்." (கச)

**முஞ்ஜ:**—(பெருமூச்செறிந்து) **பத்திரநாராயணரே !** நீருமென்ன ? அவர்களுடனே சேர்ந்துகொண்டீர் போலும் ?

**பத்திரநாராயணர்:**—இராஜராஜேந்திரா ! யாது மறிந்த தமக்கு யான் என்ன கூறப்போகிறேன் ? இப்பதினொறு வருஷகாலமாய்த் தாங்கள் இவ்விராஜ்ஜியத்தை இறையளவேனும் முறைவழுவாது பரிபாலித்து வந்தீர் ! இன்னும்,

திணையும் விடாதிச் செல்வ மெல்லாம்
இச்சை யாலிங் கிருந்தனு பவித்தல்
எச்சிலை யருந்து மிழிவே யன்றோ ?
மிகப்பெரும் போஜன் தகப்பன் மூப்பாய்
இருந்து மரசைத் துறந்தில னென்றே
உலகம் நவின்றிடில் நலமோ வுரைப்பீர் ? (கரு)

**ஹரி:**—யாதுமறிந்த நீதிமன்னா ! அடியேன் என்ன உரைக்கப்போகின்றனன் ! தாம் **போஜகுமாரரைப்** புதல்வராயடைந்த பாக்கியமே பாக்கியம் ! தாமும் அருமைப்புதல்வருக்கு உரியனவெல்லாம் திருந்தச்செய்தீர் ! தம்முடைய அநுக்கிரகத்தாலேயே அவரும் மகா சுத்தவீரரென்னும் பெயரைப் பெற்றனர். இனிப் **போஜ**குமாரருடைய கிருதஞ்யைக்கு அளவிராது !

* பிள்ளையார் புராணம்.

வத்ஸ:—மஹாராஜா ! போஜகுமாரருடைய குணத்தை யும் பராக்கிரமத்தையும் அறியாதவர் யாவர்? அவரது வெற்றியைக் கேட்டது முதல் நாடு நகரத்தார் யாவரும் அவரிடத்தில் மிகவும் அன்புவைத்திருக்கின்றனர். ஆஹா ! போஜகுமாரரா ! மஹான் ! என்ன வீரியம் ! என்ன விநயம் ! என்ன பெருமை ! என்ன பொறுமை ! என்ன ஜீவகாருண்ணியம் ! என்ன சமதாபுத்தி ! என்ன கல்யாணகுணம் ! மகா சத்தியவாதி ! மகாபராக்கிரமசாலி ! சகல வித்தைகளையுமுணர்ந்தவர் ! சகல தர்மங்களையுமறிந்தவர் ! வருணன் வீரியத்தில் ! தூராதரம் தைரியத்தில் ! பிருகஸ்பதி புத்தியில் ! ஸ்ரீய:பதி சக்தியில் ! ஆஹா ! பெருமையிற் புரந்தரன்! பொறுமையிற் பூதேவதை! கோபத்திற் காலாந்தகன்! பிரதாபத்திற் பரமேசுவரன் ! மன்மதனும் அவரது அழகைக் கண்டால் வெட்கங்கொண்டோடுவான் ! ஆஹ்லாதத்தைக் கொடுப்பதில் அமிர்தகலைகளால் நிறைந்த பூர்ணசந்திரனுமவனுக்கு நிகரல்லன்! ஆதித்தியனைப்போல்தேஜஸ்வீ! அச்வநீதேவரைப்போல் ஓஜஸ்வீ ! அவர் சிறுபாலகராயிருப்பினும் அவரிடத்தில் எனக்குப் பெரியோர்களிடத்தில் உண்டாவதுபோற் பகுமான புத்தியுண்டாகின்றது. இராஜேசுவரா ! அவர் தம்மைச் சொந்தப் பிதாவைப்போலவே நினைத்திருக்கின்றனர் ! அவரை யரசனாகக்கொள்ள யார்தாம் விரும்பார் ?

ஹரி :—அம்மகாபுருஷனுடைய குணாதிசயங்களை வர்ணிக்க ஆதிசேஷனாலு மாகாது ! கொடுப்பதிற் குபேரன் ! நடப்பதிற் குமாரன் ! யயாதியைப் போலுதாரன்! சிபிசக்கிரவர்த்தியைப்போற் கம்பீரன்! அவரைப் பதியாயடைய யார்தாம் விரும்பார் !

முஞ்ஜ:—(சிந்தித்துக்கொண்டே, ஆன்மகதமாய்) சரி! இப்பொழுது இவர்களுடைய வேண்டுகோளுக்கு விரோதமாய்ப் பேசுவதிற் பிரயோஜனமில்லை. நாமும் சம்மதிக்கத்தான் வேண்டும் ! (பிரகாசமாய்) சபையோர்காள் ! உங்கள் வேண்டுகோளுக்கு யாம்

மிகவும் மெய்ச்சுகின்றோம். யாமும் சீக்கிரத்திலேயே போஜனுக்கு முடிசூட்டத் தீர்மானித்திருக்கின்றோம்.

**சபை:**—மிகவுஞ் சந்தோஷம்! மஹாராஜா! மிகவுஞ் சந்தோஷம்!

**வத்ஸ:**—மன்னர் மன்னவா! இன்னொரு விஷயத்தைப் பற்றி யான் கூறத்தவறிவிட்டனன். நமது இளவரசருடன் கூட யுத்தத்திற்குச்சென்ற அவரது பிராணநேசர் காளிதாசருக்கும் நாம் தக்க மரியாதை செய்யவேண்டும். அவரை என்னவோ சாமானியராக நினைத்திருந்தோம். அவரை இந்நாட்டிற்கு ஓர் சிறந்த ஆபரணமென்றே கொள்ளல்வேண்டும்!

* "நல்லவுந் தீயவு நாடி நாயகற்
கெல்லையின் மருத்துவ னியல்பி னெண்ணுவார்
ஒல்லைவந் துறுவன வுற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென வுதவுஞ் சூழ்ச்சியார்!"()

அவர் தம்முயிர்க்குறுதி சற்றுமெண்ணுடல் நம்மிளவரசரையே ஒருமுறை பகைவரிடத்தினின்றுங் காப்பாற்றினர். ஆதலால், அவருக்குச் செய்யும் மரியாதை நம் போஜருக்கும் அதிக திருப்திகரமாகவே யிருக்கும்.

**பத்தி:**—ஆம்! மஹாராஜா! அவருக்குத்தக்க மரியாதை செய்தல் நியாயமே! அவருக்குத்தெரியாத இராஜநீதி யொன்றுமில்லை. அவரைப் போஜகுமாரருடைய வெளியிற்சஞ்சரிக்கும் பிராணனென்றே கொள்ளவேண்டும்.

**முஞ்ஜ:**—ஆ! அதற்கென்ன? அப்படியே செய்வோம்.

**சபை:**—எல்லாம் தம்முடைய கடாக்ஷமே!

**முஞ்ஜ:**—(வெறுப்புடன், எழுந்து) சபையோர்காள்! யாம் அவசரமாய் வெளியிற் செல்லவேண்டியிருத்தலால் விடைதரல் வேண்டும். புத்திசாகரரே! யாம் போய்வருகின்றோம். (கோபமாய்ப் பரிவாரத்துடன் நிஷ்கிரமித்தல்).

* கம்பராமாயணம்.

ஹரி:—(யாவருஞ்செல்ல நீலகண்டரை நோக்கி) நீலகண்டரே! பார்த்தீரா! நாமின்று நினைத்தவெண்ணஞ் சுலபமாய் முடிந்துவிட்டது.

நீல:—இன்னும் முற்றும் பார்ப்போம்! மகாராஜாஅவர்கள் போன அவசரத்தைப்பார்த்தால் எனக்குச் சங்கையுண்டாகின்றது. எதற்கும் தனிமைய பேசுவோம். (யாவரும் நிஷ்கிரமித்தல்.)

## இரண்டாங் களம்.

இடம்-தாரைநகர்: முஞ்ஜராஜனரண்மனையில் ஓர் அறை.

(முஞ்ஜராஜன் ஆசனத்திலிருந்தபடி பிரவேசித்தல்.)

முஞ்ஜராஜன்:—(சிந்தித்துக்கொண்டு) ஆ ஆ! இன்று நாம் என்ன பெருமோசம் போனோம்! அப்பாதகன் புத்திசாகரன் வார்த்தையைக் கேட்டல்லவோ போஜனுக்கு இத் தாராராஜ்ஜியத்தை ஒப்புவித்துவிடுவதாகச் சபையிற்கூறி வந்தோம். இப்பதினாறு வருஷகாலமாய் இவ்விராஜ்ஜிய சுகங்களையெல்லா மனுபவித்துவிட்டு இப்பொழுதிவ்வரசாட்சியைத் துறப்பதென்றால் எங்ஙனம் கூடும்?—இன்று திடீரென்று பிரஜைகள் போஜனுக்கு இராஜ்ஜியத்தை ஒப்புவிக்கும்படிநம்மைக்கேட்டதென்னே? இதுவரை அவர்களை ஜாக்கிரதையாகத்தானே பரிபாலித்து வந்தோம்! இதுகாறு மவர்களும் கீழ்ப்படிந்தே வந்தனர்களே!—(யோசித்து) சீ! எல்லாம் நாம் செய்த பிழையே! போஜனை யுத்தத்திற்கு அனுப்பியதனாலன்றோ அவனது குணாதிசயங்கள் பிரஜைகளுக்குத் தெரியவந்தன! யாதேனும் ஒரு காரியத்தைச் செய்யத்தொடங்கினால் முன்னரே அதன் பயனை யறிந்து செய்யவேண்டும்.

உசிதமித னைச்செய்த லுசிதமீ தல்லவென்
றற்றுநோக் கிடல்வேண்டு முத்தமர்கள்,
பிசகியொரு தொழிலையும் பெரியோர்கள்செய்யார்கள்
பின்வரும் பயனைமுன் பிரித்திடாமல்,
பசுவென நடப்பவர் பகுத்தறிவு தான்கெடப்
பரதேசி யாவர்கள் படித்திருந்தும்,
நிசிதமாஞ் சல்லியம தென்னவோ ராது செயல்
நிலையைக் குலைக்குமே நித்தகாலம்! (கஎ)

இதுவுமன்றி, நாம் அரசனயிருப்பதனாற் பயத்தினால் ஒரு வேளை நம்மிடத்தில் அன்புள்ளவர்கள்போற் குடிகள் நடித்து வந்திருக்கக்கூடும். எப்படியிருப்பினும் இச்செங்கோல் நம்மை விட்டு நீங்குமாயின் பிரஜைகள் முன்போல் நம்மை மதிப்பார்கள் என்று யாம் நம்பவில்லை. நாமுயிரோடிருந்தும் மரித்தவருக்கொப்பாவோம்!

பிணியிலா வுடல மஃதே,
பிழையிலாப் பெயரு மஃதே!
அணியுமா பரண மஃதே,
அயர்விலா வழகு மஃதே!
பணமெனுஞ் சூடு நீங்கிற்
பாரினிற் புத்தி மானுங்
கணத்திலே முற்றும் வேறாய்க்
காண்பதும் விந்தை யந்தோ! (கஅ)

ஆகையால், எப்படியாயினு மிந்நாடு நம்மைவிட்டு நீங்காவண்ணம் தக்க உபாயஞ்செய்யவேண்டும்!—(ஆலோசித்துக்கொண்டிருந்தல்.)

(பிரவேசித்து.)

**மதநமாலிநி**:—(கைகூப்பி) மஹாராஜா! யாரோ ஒரு யதீந்திரர் தங்களைக்காணும்பொருட்டு வெளியிற் காத்துக் கொண்டிருக்கின்றார்.

**முஞ்ஜ** :—அப்படியா! சீக்கிரம் அழைத்துவா!

**மதந**:—அப்படியே மஹாராஜா! (வெளியில் நிஷ்கிரமித்தல்.)

**முஞ்ஜ** :—இவர் யாவராயிருக்கக்கூடும்? நம்மிடத்தில் இச்சமயத்தில் வருவதற்குக் காரணமென்ன? இப்பதினாறு வருஷகாலமாய் நம்மிடத்தில் ஒரு சந்நியாசியும் வந்ததில்லையே! அந்தோ! நாம் இராஜ்ஜியத்தை ஸ்திரப்படுத்துவோமாவென்று யோசிக்கும் பொழுதே குறுக்கே யதீந்திரர் ஒருவர் முளைத்தனரே! நமதெண்ணம் நிறைவேறுமோ?

(பிரவேசித்து)

**சாரதாநந்தர்**:—(கடவுளைத்தோத்திரஞ்செய்துகொண்டே.)

(க) இராகம் - பிலகரி: தாளம் - ஆதி.

பல்லவி.

ஸ்மரணைசெய்மனமே - ஸ்மராரிபுவையென்றும்,
துரிதமயதருணை - திரிசூலிசனை!

அநுபல்லவி.

அருட்பெருங்கடலினை - அன்பருக்கிஷ்டனை,
பரமபுருஷனைஸ்ரீ - பார்வதிநாதனை! (ஸ்மரணை)

சரணங்கள்.

வானவர் பணிவோனை - வாக்குத்தந்தருள்வோனை
ஞானிகட்கிறைவனை - ஞானசுரூபனை! (ஸ்மரணை)

சோதிக்குட்சோதியாய் - சுடருக்குட்சுடருமாய்
ஆதியந்தமிலாத - ஆநந்த மூர்த்தியை! (ஸ்மரணை)

**முஞ்ஜ**.—(சோகம்). ஆஹா! இவருடைய தேஜஸ்ஸே தேஜஸ்ஸு!

கைதயில் தண்ட கமண்டலுக்கள், இடையிற்
காவிக் கனைவேஷ்டியும்,
மையில் பஸ்ம விலேபமும், களமதில்
மாசற்ற ருத்ராக்ஷமும்;

பொய்யா மிவ்வுல கத்தைவிட் டிவர் அஹோ!
பூண்டிங்கு சந்யாசமும்,
மெய்யாம் சங்கர னென்னவே வருகிறார்
விச்வேசனைப்போற்றியே! (கக)

(ஆசனத்தைவிட்டெழுந்திருத்தல்).

சார:—(அரசனருகிற்சென்று) ராஜனே! நினக்கு மங்களமுண்டாகுக!

மூஞ்ஜ:—அடிகாள்! வந்தனம்! (வந்தனஞ்செய்தல்).

சார:—நாராயண! நாராயண!!—பெருக நின்வாழ்வு!

மூஞ்ஜ:—சுவாமி! தாங்கள் இவ்வாசனத்தில் எழுந்தருளவேண்டும்!

சார:—(ஆசனத்திலுட்கார்ந்து) நீரும் நும் ஆசனத்தில் வீற்றிருப்பீர்!—நாராயண! நாராயண!!

மூஞ்ஜ:—(உட்கார்ந்து) சுவாமீ! தாங்கள் எங்கிருந்து வருகின்றீர்கள்?

சார:—ராஜனே! எம்போன்றவர்களுக்கு நாடேது நகரேது?

* 'வீடேதது வாசலேது விஷயமேது வேந்தனே!
மாடுமக்கள் மனைவியேது மற்றுமாவ தேதுகாண்!
நாடுபெற்ற நடுவர்கையி லோலைவந் தழைத்திடி
லோடுபெற்ற தவ்விலைப்பொருதுகளுமிவ்வுடல்!'

யதிகளான எம்போன்றவர்கள் எங்கிருப்பினுமென்ன? இவ்வுலகத்தில் நடக்கும் சகலவிஷயங்களும் எமது ஞானதிருஷ்டிக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.

மூஞ்ஜ:—தங்கள் திருநாமதேய மென்னோ?

* சிவவாக்கியர் பாடல்.

சார:—எம்மை இவ்வாச்சிரமத்தில் சாரதாநந்தரெனச் சொல்லுவார்கள். எமக்குப் பூர்வாச்சிரமத்தில் வராஹமிஹிரன் என்று பெயர்.—நாராயண! நாராயண! (சபமாலையைப் புரட்டுதல்.)

முஞ்ஜ:—(ஆன்மகதமாய்) ஓ ஓ! ஜோதிஷசாஸ்த்ரபாரங்கதரான வராஹமிஹிரரா! இவரைச் சர்வஞ்யரென்றே கூறுவார்கள்!

வராஹ மிஹிரர் வரருசி முதலியோர்
நரேந்த்ர சபையின் நவமணி யல்லரோ!
சராச ரங்களின் சாதக மனைத்தும்
தெரிந்து ரைத்த தீமா னிவரே! (உக)

ஆகலின், இவரைக்கேட்டால் நமதெண்ணம் முடியுமோ அல்லவோ தெரிந்துகொள்ளலாம். (பிரகாசமாய்) சுவாமீ! தாங்கள் அடியேனை நாடிவந்த காரியம் யாதோ? உரைத்திடில் அடியேன் செய்யக் காத்துக்கொண்டிருக்கின்றேன்! தனம் வேண்டுமானாலும் அல்லது எதுவேண்டுமானாலும் கேட்கலாம்!

சார:—(அரசனது முகக்குறியை யுணர்ந்து, ஆன்மகதமாய்) இவ்வரசன் துராசையினாற் பரசொத்தை யபகரிக்க நினைத்திருக்கின்றனன். இப்பாதகனிடத்தில் திரவியம் வாங்கிச்சென்றால் நாமும் கிருதார்த்தராய் விடுவோம், இவ் வியாசபௌர்ணமியும் கிருதார்த்தமாய் விடும். நல்லது! வந்ததற்கு உண்மையைக் கூறிவிட்டுச் செல்வோம். (பிரகாசமாய்) ராஜனே! எம்போன்றவர்களுக்கு ஒரு காரியமு முளதோ? (பாடுதல்.)

(ச) இராகம் - காபி - தாளம் - சாப்பு.

பல்லவி.

காரியமுளதோ - காமனைத்தீத்தவன்
சரணடைந்தவர்க் - கவனிதனிலே!

அநுபல்லவி.

துரிதவிநாசனைத் - தூயவர்க்கிறைவனை
இரவும் பகலும் - இதயத்திற் கொள்வோர்க்கு! (காரி)

சரணங்கள்.

ஸ்ரீகுரகபோலனை - முநிஜநபாலனை
அசமதிலணிபவர்க் - கன்புடனித்தமும்! (காரி)

சமதமகருணை - சம்பூர்ணர்களாய்
விமலனையென்றும் - விஷயமாச்கொள்வோர்க்கு! (காரி)

அரசே! எம்போன்ற துறவிகள் வருவது லோகாநுக்கிரகார்த்தமே!

ஸ்ரீஜ:—சுவாமி! அடியேன் ஒருவிஷயமறிய விரும்புகின்றேன்.

சார:—ஏதோ தெரிந்தமட்டுங் கூறுகின்றோம். எந்த விஷயந் தெரிந்துகொள்ளவேண்டுமென்றாலும் கேட்கலாம்.

ஸ்ரீஜ:—அப்படியாயின், நான் இப்போது எண்ணியிருப்பதை உணர்ந்துரைப்பீர்களோ?

சார:—ஆ ஆ! கூடியவரை யுணர்ந்துரைக்கின்றேன். (சற்றுநேரம் கண்களை மூடி யோகநிஷ்டையிலிருப்பதுபோல் நடித்து ஒருபெருமூச்சுடன் கண்களைத் துடைத்துக்கொண்டு) நாராயணா! நாராயணா!!—ராஜனே!

* "இருப்பது பொய்! போவதுமெய்!
யாதிருந்து மென்னும்?
எவரிருந்து மென்செய்வார்?
எமன்வருங்காற் றேடும்
பொருள்கொடுத்துப் பிழைப்பாயோ
தமரையனுப் புவையோ?
பொய்புரைத்தாற் சென்றிடுமோ?
பிற்கணத்தே வருவேன்

* அநுபவானந்த தீபிகை.

உருக்கம்வையு மையாவென்
றழுதும்விடு வாரோ?
ஊட்டிவளர்த் திடுமுடம்பி
னொடுகொடுபோ காரோ?
செருக்கெதுவோ நிலையில்லாப்
பொருட்கழுவாய் வேந்தே!
சீச்சீநீ யறிந்துகெட்டாற்
செப்புவர்யா ருனக்கே!" (உஉ)

முஞ்ஜ:—(திடுக்கென்று பயந்து மெதுவாய் தனக்குட் சமாதானஞ் செய்து கொண்டு) சுவாமி! நெஞ்சத்து மிக்கதனை முகமே காட்டுமென்பார்கள்! ஆயினும் இன்னும் வேறேதாயினும் ரகசியமான விஷயம் எடுத்துரைப்பின் தம்மைச் சர்வஞ்யர் என்றேகொள்ளுவேன்.

சார:—ராஜனே! நீர் எம்மை ஸர்வஞ்யரென்றாலும் ஸர்வஞ்யராகோம், அப்படிக்கொள்ளாவிடினும் மூடராகோம்! இயற்கையிற்றானே இரண்டுபடாத பூரணவின்பமானவராய்ச் சகலபுவனங்களையும் படைத்தளித்தழிக்க வல்லவரான உண்மைக்கடவுள் ஒருவரே ஸர்வஞ்யர்! அவர்தாம் சகலப்பிராணிகளின் மனத்திலு மிருப்பதை யெல்லாம் நன்று அறியவல்லர்! யாமும் அவரது அநுக்கிரகத்தாற் சிற்சிலவிஷயங்களை அறிந்து கூறவல்லோம். ஆயினும் தமக்கு வருத்தமுண்டாகக்கூடுமென்று சொல்ல அஞ்சுகின்றோம்!

முஞ்ஜ:—(சிந்தித்துக்கொண்டே, ஆன்மகதமாய்) நமக்கு வருத்தத்தைத்தரத்தக்கது யாதிருக்கக்கூடும்? எதற்கும் தெரிந்திருந்தாற் புருஷப்பிரயத்தனத்தினால் ஒரு வேளை கேடுசம்பவிக்கினும் தக்க உபாயஞ்செய்து அதை நீக்கிக்கொள்ளலாம்! (பிரகாசமாய்) சுவாமீ! யாதொரு பயமுமின்றி மொழியலாம்.

சார:—ராஜனே! அப்படியாயிற் கேட்கலாம்! தாமிப்பொழுதுன்னியது இரண்டுவிஷயங்களைப்பற்றியே: ஒன்று

ஸ்திரீயின் மணத்தைக் குறித்தது, மற்றொன்று புருஷன் வதை யைக்குறித்தது. இவ்விருவரும் தம் பந்துக்களே !

மூஞ்ஜ:—(பயந்து, வணக்கத்துடன்) ஆம் ! எண்ணியவிஷயங் கள் எவ்வாறு முடியுமோ? அதை உரைப்பீர் !

சார:—அரசே ! சொல்கின்றேன், கேளும் ! ஸ்திரீயைக் குறித்தது பயன்படும்; மற்றதிற் பயனில்லை !

மூஞ்ஜ:—சுவாமீ ! தாங்கள் இரண்டாவது விஷயத்தை ப்பற்றிக் கூறியது அடியேன் மனத்திற்குச் செம்மையாய்ப் புலப்படவில்லை. ஒரு பிரார்த்தனைக்குத் தாங்கள் உத்தரமளிக்க வேண்டும் ! எனக்குப்பின் இத் தாராராஜ்ஜியத்தை யார் ஆளுவர்?

சார:—(ஆன்மகதமாய்) இப்பாதகன் தனதெண்ணம் முடியு மாவென்று ஐயப்பட்டு வினவுகின்றனன்! நாமும் கூடமாகவே விடையளிப்போம். (பிரகாசமாய்) இதுவும் அவ்விரண்டாவது விஷயத்தைப்பற்றியதுதான். மறுபடியுஞ்சொல்லுகின்றேன். உமக்குப்பின் போஜன் இம் மாளவதேசம் முழுதும்ஆளுவன்.

மூஞ்ஜ:—(சந்தோஷமுள்ளவன் போல் நடித்து) எல்லாம் தங்கள் ஆசிர்வாதமே !

சார:—ராஜனே ! இன்னும்கேளும் போஜனது யோக ரீதியை !

ஐம்பதுமைந் தாண்டு மறுமாத மூன்றுநாள்
இம்மா நிலமுழுதும் இன்னரசு செய்வானால்! (உரு)

மூஞ்ஜ:—மிகவுஞ் சந்தோஷம் ! அடியேன் மீது தமது கிருபா நோக்க மிருக்கவேண்டும்.

சார:—எமது கிருபா நோக்கமிருந்தென் ? ஈசனூர் அருள் இருக்கவேண்டும். அதுவுந் துறப்பெனுந்தெப்பமே துணை யெனக்கொண்ட எம்போன்றவர்களுக்கே அடையற்பாலதா

யின் காம குரோத லோப மோஹ மத மாச்சரியங்களாகிற பெருமுதலைகளாற் சங்குலமான பிறப்பெனும் பெருங்கடலில் மூழ்கி நிற்கும் நம்போன்ற அரசர்கள் வாழ்ந்திருக்கவேண்டுமாயின் தெய்வத்தினிடத்திலும் தர்மத்தினிடத்திலும் பூர்ணமான சிரத்தையிருக்கவேண்டும்.

முஞ்ஜ:—(தன் கழுத்திலணிந்திருந்த முத்துமாலையைக்கழற்றி) சுவாமீ! தாங்கள் இதை அங்கீகரித்து எம்மை அநுக்கிரகிக்கவேண்டும். (முத்துமாலையை நீட்டல்)

சார:—(அதைத்தடுத்து) ராஜனே! ஜபமாலை யணிந்திருக்கும் எம்போன்ற துறவிகட்கு அரசர்கள் அணிந்துகொள்ளத் தக்கதான இம்முத்துமாலையாற் பயன் யாது? தமக்கேயிருக்கட்டு மிவ்வாபரணம்! ஆயினும் உடது நன்மையை நீர் உண்மையாய் நாடுவீராயின் இதை மாத்திரம் கவனித்து நடந்துகொள்வீர்!

* "தானத்திற் குறித்து மன்று
தானினைந் தீயிற் சால
வினத்தி லுய்க்க நிற்கு
மெச்சத்தை யிழக்கப் பண்ணு
மானத்தை யழிக்குந் துய்க்கின்
மாற்றலர்க் கடிமை யாக்கு
மூனத்தீ நரகத் துய்க்கும்
பிறர்பொரு ளுவக்கின் வேந்தே!" (உச)

நல்லது நமக்கு அநுஷ்டான காலமாய்விட்டது; போய்வருகின்றோம்! (கொஞ்சதூரம் பரிக்கிரமித்து ஆன்மகதமாய்)

* சாந்தி புராணம்.

* "கற்பூரப் பாத்திகட்டிக் கத்தூரி
எருப்போட்டுக் கமழ்நீர் பாய்ச்சிப்
பொற்பூர வுள்ளியினை விதைத்தாலு
மதன்குணத்தைப் பொருந்தக் காட்டும்;
சொற்பேதை யருக்கறிவிங் கினிதாக
வருமெனவே சொல்லி னாலு
நற்போதம் வாராதாங் கவர்குணமே
மேலாக நடக்குந் தானே!" (உ௫)

இதுவரை வாராதபுத்தி இனி நம் சொற்களால் வரப்போகின்றதா? எது நடக்கவேண்டியதோ அது நடக்கத்தான் நடக்கும்! (சிஷ்கிரமித்தல்)

முஞ்ஜ :—(எழுந்து உலாவிக்கொண்டே) ஆ ஆ! நம்முடைய எண்ணம் ஒன்றும் நிறைவேறாதுபோலும்! என் செய்வோம்? சும்மா இருப்பின் இராஜ்ஜியத்தை ஸ்திரப்படுத்துவது எங்ஙனம்? (பாடுதல்.)

(௭) இராகம் - அடாணா : தாளம், ரூபகம்.

பல்லவி.

சும்மாவிருந்தால் - சுகம்வருமோ?

அநுபல்லவி.

சும்மாவிருந்தாலினி - யெம்மாத்திரஞ்சுகமும்
இம்மாநுடப்புவியில் - நம்மாலடைவதுண்டோ!(சும்மா)

சரணங்கள்.

எல்லாந்தெய்வீகமெனச் - சொல்லுவோரெவரேனும்
வெல்லா ரொருபொருளும் - நல்லா ரவர் உளரோ? (சும்மா)

தன்னால் முடியுமதை - முன்னாற் செய்மனிதற்கே
என்னாளுந் தினைமண்ணும் - பொன்னாய்க்குவியுமது! (சும்மா)

* விவேகசிந்தாமணி.

ஆகலின், நாம் தக்கயோசனைசெய்யவேண்டும். உனக்குப்பின் போஜன் ஆளுவனென்றார்! "உனக்குப்பின்?" அப்படியெனில் என்ன பொருள்? நாமிறந்தபிறகா?—சீ சீ! அப்படியிராது. மேலும் இதனிற் பயனில்லை என்றுரைத்தார்! இதற்கென்ன செய்வது? (ஆசனத்தில் உட்கார்ந்து சற்று நேரம் யோசித்து) போஜன் உயிருடனிருப்பினன்றோ இவ்விராஜ்ஜியத்தை யாளப்போகின்றனன்? அவனைத் தொலைத்துவிட்டாலோ?—சி சி! என்ன எண்ணங்கொண்டோம்! ஒரு தீங்குமறியாவப்பாலகனையோ நாம் கொல்வது? ஐயோ! நம்மிடத்திலும் தன்பிதாவினிடத்திலிருப்பதுபோல் அன்பு பாராட்டி வருகின்றனனே! மேலும் எந்தமையனார் இறந்துபோகும்பொழுது இவனை எம்மிடத்தில் நம்பி ஒப்புவித்தனரே! அப்படியிருக்க எவ்வளவு கொடிய துரோகம் புரியநினைந்தோம்!—(யோசித்து) ஆனாற்போஜன் உயிருடனுள்ளளவும் நமக்கிந்நாடு நிலையாது. அவனே நியாயமாய் இவ்விராஜ்ஜியத்திற் குரியவன்! நமது பிரஜைகளும் அவனது வெற்றியைக் கேட்டதுமுதல் அவனே அரசனாக வரவேண்டுமென்று விரும்புகின்றனர்கள்! நாமும் இராஜ்ஜியத்தைப் போஜனுக்கு ஒப்புவித்து விடுவதாகச் சபையில் வாக்குக்கொடுத்து வந்தோம்! இதற்கென்ன செய்யலாம்? தர்மசங்கடமாயல்லவோ முடிந்துவிட்டது!—(சற்று நேரந்தலைமீது கரத்தைவைத்து யோசித்து ஆசனத்தைவிட்டெழுந்து) சீ! ஒரு சுவற்பத்திற்கஞ்சினால் மகத்தான நஷ்டம் நேரிடும்! துணிந்து ஒரு காரியத்தைத் தொடங்கினாலன்றி நாமிதுகாறும் பிழைத்த பிழைப்பெல்லாம் வீணாய்விடும். ஆகலின், எவ்விதமுயற்சியினாலாவது போஜனைத்தொலைத்துவிடுவதேநலம்.—நல்லது! 'மாளவதேசம் முழுதும் போஜன் ஆளுவன்' என்றனரே! அஃதெப்படி? மாளவதேசத்தின் ஒரு பிரிவாகிய உஜ்ஜயினீராஜ்ஜியம் நம்மைச் சேர்ந்ததன்றே! விக்கிரமார்க்கனுடைய சந்ததியில் வந்தவனான ஆதித்தியவர்மனன்றோ அதையாளுகின்றனன்! ஒருகால் இவ்வாறு சம்பவிக்குமோ? நம் தமயனாரும் ஆதித்தியவர்மனும் பாலிய

சிநேகிதர்களாவரே! ஒருவேளை அதுபற்றித் தனது குமாரத்தியைப் போஜனுக்கு மணஞ்செய்வித்து, பிள்ளையில்லாமையினால் இராஜ்ஜியத்தையும் அவனுக்கே கொடுப்பனோ? எவ்வழி செல்லினும் சங்கடமாயிருக்கின்றதே! (சிந்தித்துக்கொண்டே யுட்கார்ந்து) ஆகலின் அவனை எவ்விதம்தொலைப்பது?— (எழுந்து) சீ! தன்முயற்சியா லாகாத காரியமென்ன இருக்கின்றது?

* "உள்ளமுடை யான்முயற்சி செய்யவொரு நாளே
வெள்ளநிதி வீழும்வினை யாதுதனி னில்லை,
தொள்ளையுணர் வின்னவர்கள் சொல்லின்மட நிற்பி
னொள்ளுநருக் கேக்கமுத்தம் போலவினி தன்றே!" ()

எதற்கும் நாமிப்படிச் செய்வோம்! அவரும் ஸ்திரீயின் மணத்தைக்குறித்த விஷயம் நிறைவேறு மென்றுரைத்தனர். நமது சகோதரி சாருமதியின் மகள் விலாசவதியைப் போஜனுக்கு மணஞ்செய்விப்போம்! அன்றி வேறொருஇராஜகன்னிகையைப் போஜனுக்கு விவாகம் செய்வித்தால், அப்பெண்ணைச்சேர்ந்தவரசர்கள் போஜனுக்கு இவ்விராஜ்ஜியம் கிடைக்கும்படி முயலுவார்கள்.—ஒரு வேளை இச்சம்பந்தம் நமது குலாசாரத்திற்கு விரோதமென்பார்களோ! ஆயினுமென்னை? நம் சகோதரி நாம் சொல்லுகிறபடி நடப்பாளென்றே நம்புகின்றேன்!— ஆனால் அப் புத்திசாகரன் இச்சம்பந்தத்திற்குச் சம்மதியானே. அவன் முன்னரேதகுந்த ராஜகன்னிகையை விசாரித்துப் போஜனுக்கு மணஞ்செய்விக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருந்தான். போஜனும் ஐந்துவயது முதல் அவனிடத்திலேயே வித்தியாப்பியாசம் செய்துகொண்டிருப்பதனால் அவனது வார்த்தையைத்தான் கேட்பனென்பதிற் சந்தேகமில்லை. ஆயினுமந்த யதீசுவரர்வாக்குத் தப்புமா? அதையுந்தான் பார்த்துவிடுவோம்!

* சீவகசிந்தாமணி.

* "விடாது தனுவிற் செயுமுயற்சி
மேன்மேற் பொருளை மிகவளர்க்குங்

கெடாது சுற்று நட்பினர்தங்
கிளையுந் தாங்கு மியாவர்க்குந்

தடாத வுபகா ரமும்புரியுந்
தடந்தா மரையா ளையுஞ்சேர்க்கும்

படாத வூழ்வந் திடுகாலும்
பயனே விளைக்கும் பழியின்றாம்." (உஎ)

ஆகலின், இதுவே சரியான யோசனை! எப்படியாகிலும் விலாஸவதியைப் போஜனுக்கு மணம்புரிவித்துச் சமயம் பார்த்து அவள் மூலமாகவே ஒருவருக்குந்தெரியாமல் அவனைத் தொலைத்தல் வேண்டும். பாவபுண்ணியங்களை நோக்கின் நாம் மேற்கொண்டகாரியம் முடியாது! இப்பொழுதே நம் சகோதரியினிடம்சென்று, அவளது சம்மதத்தைப்பெறுவோம்! (ஆசனத்தை விட்டெழுந்து நோக்கி) ஆ! நாம் கும்பிடப்போன தெய்வங் குறுக்கேவந்தாற்போல் நமது சகோதரியே மதநமாலிநியுடன் என்னவோ பேசிக்கொண்டிதோ வருகின்றாள். இதுவே நாம் நினைத்த காரியங்கைகூடுமென்பதைக் குறிப்பிக்கின்றது!

(மேற்குறித்தபடி **மதநமாலிநியுடன்** பரபரப்பாகச் **சாருமதி** பிரவேசித்தல்.)

**மதநமாலிநி**:—அம்மணி! இப்படி வாருங்கள்! மஹாராஜாஅவர்கள் இதோவிருக்கின்றார்கள்!

**சாருமதி**:—அடி! மதநமாலிநி! அந்தச் சன்னியாசிகள் இங்கே வந்தபொழுது எங்கள் அண்ணாவைக் கண்டார்களா?

**மதந**:—ஆம் ஆம்! அம்மணி! நான் தான் அவரை மஹாராஜாஅவர்களிடம் அழைத்துச் சென்றேன்.

---

* பிள்ளையார் புராணம்.

சாரு :—என்னவோ ? நீ சொல்வதெல்லாம் எனக்கு உண்மையாகத் தோன்றவில்லை.

முஞ்ஜ:—(சாருமதியின் முகத்தை உற்று நோக்கி, ஆன்மகதமாய்) ஆ ஆ! இஃதென்ன ? இவள் ஒருவாறு பயம்மேலிட்டவள்போற் காணப்படுகின்றாள் ! ஒருவேளை யிவள் குழந்தை விலாஸவதிக்கு ஏதாகினும் தேக அசௌக்கியமோ ? யாதுபற்றி இவள் இவ்வளவு பரபரப்புடன் வருகின்றாள் ?

சாரு:—(முஞ்சன் அருகிற்சென்று) அண்ணா ! இதென்ன தாங்கள் பராமுகமாயிருக்கின்றீர்கள் ? 'இப்பாவியின் கிருகத்துக்கு ஏன்வந்தோம்' என்று சொல்லிக்கொண்டே ஒரு பெரிய யதீந்திரர் நமது அரண்மனையினின்றும் போகின்றாராமே ! அவரைத் தாங்கள் பார்த்துப் பிக்ஷாவந்தனஞ் செய்யவில்லையோ? வந்தயதிகளை வணங்கிச் சென்றழைத்து விருந்து செய்வியாவிடில் வீடு நசித்துவிடுமென்பார்களே !

*"நீத்தவ ராதியோர் நெருப்பு யிர்த்திடிற்
காத்திடுங் கடவுளுங் கலங்கு மாதலால்,
ஏத்துவ தேகட னென்று மேநமக்
காத்தர்கள் பொறுப்பரென் றவம தித்திடேல்"!()

என்று பெரியோர்கள் சாற்றுவதைத் தாம் கேட்டதில்லையோ?

முஞ்ஜ :—(ஆன்மகதமாய்) ஆ ஆ ! நமது அவசரத்தில் அந்த யதீந்திரருக்குப் பிக்ஷை சொல்லக்கூட மறந்துவிட்டோம் ! நல்லது ! இப்பொழுது நடத்தவேண்டிய காரியத்தைக் கருதுவோம். (பிரகாசமாய்) சாருமதீ ! என்ன வீணாய்ப் பயப்படுகின்றாய் ? அந்த யதீசுவரரைத்தான் நான் பார்த்தேனே! அவருக்குத்தக்கமரியாதைகளையுஞ் செய்தேன் ! இம் முத்துமாலையை

* பிள்ளையார் புராணம்.

யும் அவருக்குக்கொடுக்கப்போனேன்! அதற்கவர் 'யாம்துறவியாவேம், அஃது எமக்கெதற்கு?' என்று மறுத்து விட்டார்! மற்றைப்படி வேறு விசேஷமொன்றுமில்லையே! அவர் யாரைப்பற்றிச்சொல்லிப்போயினரோ? அது தெரியாமல் வீணாய்க் கலங்குகின்றாயே!

சாரு:—என்னவோ? என் மனத்திற்குச் சஞ்சலமாகத்தானிருக்கிறது. நமது அரண்மனைவாயிலிலிருந்து இப்படியவர் சொல்லிக்கொண்டு போவானேன்? இருக்கட்டும். அவர்களுக்குப் பிக்ஷாவந்தனஞ் செய்தீர்களோ அன்றோ?—

முஞ்ஜ:—அதிருக்கட்டும்! நம் **போஜன் பௌலகேசியை** யுத்தத்தில்வென்று திரும்பிவருகின்றானே தெரியுமோ?

சாரு:—நம்மருமையண்ணாவின் குழந்தை **போஜனா!** மந்திரியாரிடம் வித்தியாப்பியாசம் செய்துகொண்டிருந்தானே! பாலகனாயிற்றே! அவன் ஏன் யுத்தத்திற்குச் சென்றான்?

முஞ்ஜ:—பாலகனென்ன? அவனுக்கும் பதினெட்டு வயது நிரம்பியது! தானேதான் யுத்தத்திற்குப் போகவேண்டுமென்று சென்றான்! அதற்கென்ன? இப்பொழுது பகைவரையெல்லாம் வெற்றிகொண்டு திரும்பினனே!

சாரு:—அப்படியாயின், நம் கண்மணி இப்பொழுதெங்கேயிருக்கின்றான்? அவனைப்பார்த்து வெகு நாளாயின. யுத்தத்தில் யாதொரு காயமுமின்றி க்ஷேமமாய் வந்து சேர்ந்தானோ?

முஞ்ஜ:—நம் **போஜனுக்கு** க்ஷேமத்துக்கென்ன குறை? நமது நகரத்திற்கருகிற் சேனைகளுடன் இறங்கி யிருக்கின்றானாம். இப்பொழுது அவனை மரியாதையுடன் நகரத்துக்குள் அழைத்து வரப்போகின்றேன். இன்னொரு யோசனையுந் தோன்றியது.

சாரு:—அஃதென்ன? அவனுக்கு இச்சமயத்திலேயே பட்டங்கட்டப் போகின்றீர்களோ?

மூஞ்ஜ:—அதுதான் ஒன்றிருக்கின்றதே! அதற்கு முன் இச்சுபசமயத்திலேயே அவனுக்கொரு தக்க கன்னிகையை மணஞ்செய்விக்கலாமென்று நினைத்திருக்கின்றேன்! அவனுக்கும் விவாகோசிதமான வயது வந்துவிட்டதன்றோ!

சாரு:—ஆம்! அண்ணா! அப்படிச் செய்தால் மிகவும் அழகாயிருக்கும்.—ஆனாற் சரியான ராஜகன்னிகை அகப்பட்டிருக்கிறாளோ? போஜனுடைய அழகுக்கும் புத்திக்கும் பராக்கிரமத்துக்கும் தக்க வதூ எங்கே கிடைக்கப்போகிறாள்?

மூஞ்ஜ:—(நகைத்து) நம் குழந்தை விலாஸவதியைப் போஜனுக்குக் கொடுத்தாலென்ன?

சாரு:—விலாஸவதியையா! நன்றாயிருக்கிறது! இப்படிப் பட்ட சம்பந்தம் நம் குலத்திலேயே வழக்கமில்லையே! மாமன் மகளை மணந்தால் மானங்கெட்டு மாய்வரென்று மொழிவார்களே! அவனுக்கு வேறே எந்த ராஜகன்னிகையையாவது பார்த்து மணஞ்செய்யவேண்டும்!

மூஞ்ஜ:—அடி பேதாய்! யாராகினும் வாய்க்கொழுப்பாய் ஏதாவது சொல்லிவிட்டால் அதையெல்லாம் ஸ்மிருதிவசனம்போல் நம்புகின்றனையே! மாமன் மகளை மணக்கக்கூடாதென்று எந்த சாஸ்திரத்திற் சொல்லியிருக்கின்றது?

சாரு:—இல்லை அண்ணா! சாஸ்திரங்களுக்கு விரோதமாய் இல்லாமற்போனபோதிலும் நமது குலாசாரத்திற்கு ஒத்திருக்க வேண்டாமா? (பாடுதல்).

(௬) இராகம் - தோடி. தாளம். சாப்பு

பல்லவி.

குலதர்மமும் - விடலாகுமோ!

அநுபல்லவி.

குலம்விளங்குவது - குடிமையல்லவா
நலம்தருவதும் - நல்வழக்கமன்றோ! (குல)

சரணம்.

தூயவம்சமேனும் - தொல்லறத்தைவிடில்
நேயமார்க்கம்விட்டு - நீங்குவரே மாதர்!
காயசுத்தியில்லாக் - காமுகிகளாகிக்
காபுநரகிற்பின் - கலங்கிவீழ்வரன்றோ! (குல)

முஞ்ஜ :—(கோபத்துடன்) ஆமாம்! குலாசாரம் உனக்கொருத்திக்குத்தான் தெரியும் போலும்! உன்குழந்தைக்கும் போஜனைக்காட்டினுஞ் சிறந்தவரன் கிடைக்கமாட்டானா? ஐயோ பாவம் என்னை நம்பியிருக்கின்றாயே யென்று உன் குழந்தையின் நலத்துக்காகச் சொன்னேன்! ஆ ஆ! உனக்கினியிதைப் பார்க்கினு முயர்ந்த சம்பந்தம் கிடைத்துவிடும்!

சாரு :—இல்லை அண்ணா! நானொன்று சொன்னால் நீங்களொன்று நினைத்துக்கொள்ளுகிறீர்கள்! போஜனுந் தக்கவரன் அல்லனென்று சொல்வேனா? நம் விலாஸவதிக்கு அவனைவிட உயர்ந்த வரன் எங்கே கிடைப்பன்? அப்படிக்கொத்த சம்பந்தங்கூடுமாகில், அதைப்பார்க்கினு மதிக சந்தோஷத்தைத் தரத்தக்கது வேறொன்றிருக்கப்போகின்றதோ? ஆயினும் நம் குலவழக்கத்திற்கு ஒத்திருக்கவில்லையே என்று அஞ்சினேன்! உங்களுக்கெட்படி யுக்தமாய்த்தோன்றுகிறதோ அப்படியே செய்யுங்கள். உம்முடைய இஷ்டத்துக்கு அந்நியதாவாய் நானொருபோதும் நடப்பவளல்லேன்.

முஞ்ஜ :—சாருமதீ! இப்படிச் செய்வதில் யாதோர் ஆக்ஷேபமுமிருக்கமாட்டாது. உன்னுடைய கணவனார் சூரஸேந மஹாராஜர் உயிருடனிருந்திருப்பாராயின் உடனே இச்சம்பந்தத்திற்கு வெகுசந்தோஷத்துடன் சம்மதித்திருப்பார்! மேலும்

இச்சம்பந்தம் உனக்கும் உன்குழந்தைக்கும் மேன்மையைத் தந்து, நன்மையைவிளைக்குமென்று, இப்பொழுது வந்திருந்த அந்த யதீசுவரரே சொல்லிப்போயினர்! இது சரியான சம்பந்த மென்பதில் நீ கொஞ்சமேனுஞ் சந்தேகப்படவேண்டியதில்லை! என்ன ? இச்சம்பந்தம் உனக்குச் சம்மதந்தானா ? பின்னால் என்னுடைய கட்டாயத்துக்குச் செய்ததாகக் கூறவேண்டாம்!

சாரு :—என்ன அண்ணா! இப்படிச்சொல்லுகிறீர்கள் ? கரும்புதின்னவுங்கூலியா? தேவாமுதத்தைக்கொடுத்துத் தேவையா என்று கேட்பது போலன்றோ இருக்கின்றது. எனக்குப் பூர்ணசம்மதம்! இப்படிக்கொத்த கணவன் கிடைக்க விலாஸவதி கொடுத்துவைக்கவேண்டுமே!

முஞ்ஜ :—அப்படியாயின், சீக்கிரம் விலாஸவதிக்கிதைத் தெரிவித்து மேலே என்ன செய்யவேண்டுமோ அவையெல்லாம் முன்னதாகவே செய்துகொள்! நான் போஜனை நகரத்திற்கழைத்துவந்ததும் அதே கோலமாய்மணக்கோலத்தையும் நடத்திவிடலாமென்று யோசித்திருக்கின்றேன். உன் கணவனூர் நாட்டிலிருந்து ஏதாகினும் சீர் வரவழைக்க வேண்டுமென்றாலும் அதையும் முன்னதாகவே வரவழைத்துக்கொள்.

சாரு:—அப்படியே செய்கின்றேன் அண்ணா! (இரண்டடி பரிக்கிரமித்து கால்தடுக்க,ஆன்மகதமாய்) ஐயோ!என்னநேரிடுமோதெரியவில்லையே! விலாஸவதிக்குஇந்நற்செய்தியைச்சொல்லலாமென்றுபோகும்பொழுதே கால் தடுக்கின்றதே! அந்தோ! இப்புதிய சம்பந்தம் நன்மையை விளைக்குமோ? நம் குலத்தில் இதுவரை இப்படிக்கொத்த வழக்கமில்லையே! இதைச் சொன்னால் அண்ணாவுக்கு வாராத கோபமெல்லாம் வருகின்றது. இதைச் செய்யாவிடில் வீணாய் என் அண்ணாவின் கோபத்துக்குப் பாத்திரையாவேன். எதற்கு ஈசுவரசங்கற்ப மெப்படியிருக்கின்றதோ அப்படித் தானே முடியப்போகின்றது! ஈசா! உன்னையே நம்பினேன்! (நிஷ்கிரமித்தல்)

முஞ்ஜ:—மதநமாலிநீ ! நீயும் நம் சகோதரியுடன் சென்று இவ்விவாகம் சீக்கிரத்தில் நடக்குமாறு முயற்சி செய்யவேண்டும்.

மதந:—ஆ ஆ ! உத்தரவுப்படியே ! (நிஷ்கிரமித்தல்)

முஞ்ஜ:—இவளுடைய சம்மதம் எப்படியுங்கிடைக்குமென்றே நினைத்தேன். அப்படியே சுலபமாய்க் கிடைத்துவிட்டது. அப்பாதகன் புத்திசாகரனுடைய சம்மதம் எப்படிக் கிடைக்குமோ தெரியவில்லையே ! அவன் சம்மதித்துவிட்டாற் போஜனுடைய சம்மதமுங் கிடைத்துவிட்டது போலவே ! பார்ப்போம், அந்த யோகீசுவரர் தாம் சொன்னரே இச்சம்பந்தங் கூடுமென்று ! பிரயாசை யெடுத்துக்கொண்டாற் பயன் படாமற் போகாது !

* "மடியொன் றுளதேல் வல்விரைந்து
வருக்குந் தொழிலை நீடிக்குங்
கடியு மறவி துயில்விளைக்குங்
கலதி தனைச்சேர்த் திடும்பகைவர்க்
கடிமை புகுத்துங் குடிகெடுக்கு
மதனை விடுப்பி னுண்மையினுங்
கொடிமை யிடத்தும் வேறுளவாங்
குற்றம் பலவுமொழிக்குமே !" (உ௯)

ஆகலின், நயவஞ்சகம் பேசியாயினும் புத்திசாகரனுடைய சம்மதத்தையும் சம்பாதிப்போம். இதுவே அவனிடஞ்செல்வதற்குச் சரியானதருணம். (நாலடி பரிக்கிரமித்துத் திரும்பி) சீ! என்ன புத்தியீனம் ! என்ன புத்தியீனம்!! யானை தன்தலையின்மீது தானே மண்ணைவாரி யிறைத்துக்கொள்வதுபோலன்றோ இருக்கின்

* பிள்ளையார் புராணம்.

றது நாம் செய்யப்புகுங்காரியம்! இவ் விலாஸவதியை நாமே மணந்து பூபாளநாட்டுக் கரசனுவோ மென்றெண்ணியிருந் தோமே! இப்பொழுது அவளைப் போஜனுக்கு மணஞ்செய் விப்பதனால், போஜனல்லவோ அவளுடைய தந்தையின் ராஜ்ஜியத்துக்குரியனுவான்! இதற்கென்ன செய்வது? நமக்குநாமே கேடு விளைத்துக்கொண்டோமே! (ஆசனத்திற் சற்றுவீற்றிருந்தபடி யோசித்து) சரி! இச்சமயத்தில் நமது காரியங்கைகூடு வதற்காகப் போஜனுக்கே இவளைமணஞ்செய்விப்போம். பிறகு இவள் மூலமாகவே போஜனைக்கொன்று, இவளையும் மணந்து பூபாளநாட்டிற்கு மரசனுவோம். இதுவே தக்கயோசனை! (எழுந்து நிஷ்கிரமித்தல்).

## முதல் அங்கம்

முற்றிற்று.





# இரண்டாம் அங்கம்.

## முதற் களம்.

இடம்.— தாரைநகர்: ஒரு ராஜவீதி.

(**காளிதாசன், பவபூதி** என்னுமிரண்டு சஹபாடிகளுடன் **போஜன்** பிரவேசித்தல்)

**போஜன்:**—நண்பர்காள்! நாம் இன்று வாசித்த கிரந்தம் மனத்திற்கு எவ்வளவு ஆநந்தத்தையும் உத்சாகத்தையுங் கொடுக்கின்றது! காவ்யமென்றால் எல்லாம் ஸ்ரீவால்மீகிராமாயணம் ஆகுமோ?

அமரரெலா மடிபணியு மிராம காதை
　　ஆதியினா ரதமுனிவர் சொற்ற காதை
கமலபவ ரருள்புரிந்தே யுரைத்த காதை
　　கம்பீர மாம்பெரிய காவ்ய காதை
சமரசசித் தாநந்தத்தின் சத்ய காதை
　　சாதுக்கள் மிகப்போற்றும் புண்ய காதை
அமுதரசம் பொழியுமொரு திவ்ய காதை
　　ஆதிகவி வான்மீகி வகுத்த காதை! (க)

**காளிதாசன்:**—ஆமாம்! வால்மீகியின்திறம் இனி யாருக்குண்டாகும்? அவருடைய வாக்கே வாக்கு! அவர் இயற்றிய காவ்யத்தின் மகிமையை யெடுத்துரைக்க அவரே யல்லது ஸரஸ்வதி யொருத்திதான் ஸமர்த்தை!

சொன்னயம்பொருணயம்சொற்றசொற்றொடர்நயம்
நன்னடை நவரசம் நல்லணி நிரம்பிய
வின்னயம் பொருந்திய வீரரா மன்கதை
உன்னிய தெலாந்தரு மோங்கிய தாருவே! (உ)

போஜ:—ஆன்மகோடிகளுக்கு அசாத்தியமானதொன்று மில்லை என்னும் பழமொழிக்கு இச்சிறந்த காவ்யமே பெரிய நிதர்சனம். பாருங்கள்!

கணிகொண்ட மூவுலகினைத்தையும் வென்றுளோன்
காலனும் வெருவுவீரன்
கார்மிடற் றண்ணன்முதன் மூவரு மடங்கிடக்
கருதுமர சாட்சிபுரிவோன்
மணிகொண்ட கடலெனுங் காப்புடை யிலங்கையா
மாட்சிசேர் பதிவாழ்பவன்
மற்கொண்ட திண்புயக் கிரிகொண்டு கைலாய
மாமலை பெயர்த்தசூரன்
அணிகொண்ட வித்துணைச் சீர்கொண்ட பகைவனும்,
அன்றடவி வாழ்க்கை யுற்றோன்
அரியசா தலிதனைத் தேடிமெலி வெய்திநோன்
அழிவா னரப்படையினோன்
பணிகொண்ட தயரதன் றனயனாற் கொல்லுண்ட
பகரருங் கதையைநோக்கிற்
பாருளோ ரெவரேனு மனவலிமை யொன்றினாற்
பலவினை முடித்திடுவரே! (ங)

பவபூதி:—இராஜ குமாரா! நீ சொல்வது உண்மையே! ஆயினுமிப்பழமொழிக்கு ஸ்ரீஅகஸ்திய பகவானுடைய சரித்திரமே சரியான அத்தாட்சி!

கும்பத் திடைப்பிறந் தூற்றுளோ னன்னையின்
கொங்கையமு துண்ணுதவன்
கோரமாங் காட்டிடைக் காயிலை பறித்துண்டு
கொல்பசி தணித்துவாழ்ந்தோன்
வெம்புங் கடுங்கதிர்க் கும்பனிக் கும்புகுதும்
வீடொன்று மில்லாமலே
மேலாடை யின்றிமர வுரிதொடுத் துக்கானம்
வீடெனக் கொண்டுநின்றோன்
பங்கப் படுந்துயர் மெலிந்துளா னாயினும்
படுகடற் புனலையெல்லாம்
பரிந்தொரு கரத்திடைக் கொண்டருந் திச்சுகம்
பகர்வலா ரிக்களித்த
துங்கப் பெருங்கதை யறிந்துமீளா மாகையாற்
றொல்புவியின் மனவலிமையாற்
றொட்டுமுடி யாவினையு முள்ளதோ வில்லையே
சூழ்ந்துற நினைந்திடிலரோ ! (ச)

**போஜ:**—சகே காளிதாசா ! இவ்விஷயத்தைப்பற்றி நீ என்ன சொல்லுகின்றாய் ?

**காளி:**—நண்பர்காள் ! நீவிர் கூறுமுதாரணங்களெல்லாம் என் மனத்திற்கு ருசிக்கவில்லை, இராமரோ மகாதேஜஸ்வீ ! அகஸ்தியரோ மகாதபஸ்வீ ! இத்தன்மையானவர்கள் உதவியின்றி ஒரு காரியத்தைச் சாதிப்பது ஆச்சரியமன்று. இந்த லோகோக்திக்குச் சரியான நிதர்சனம் மன்மதனுடைய விக்கிரமமே ! பாருங்கள் !

கையினிற் பிடித்த வில்லினைக் காணிற்
கணுவுடை முறிதருங் கரும்பே!
காதலைத் தூண்ட விடப்படு மம்போ
கரும்பிர சங்கள்சூழ் மலரே !

செய்யவின் ஞேஞ வடுக்குற நிமிர்ந்த
சிறந்தமென் சிறகுடைச் சுரும்பே!
சேனையோ சேலைத் திருத்துமை விழிச்செந்
துவரிதழ்த் தெரிவையர் தாமே!
மெய்யுற விளங்கும் வெண்குடை தானே
விசும்பிடை யெழுதரு நிலவே!
விளம்புமித் தகையன் மன்மத னென்பான்
வீறுகோ ளுருவிலா னேனும்
துய்யவா னுள்ளோர் மண்ணுளோர் யாரும்
தோல்விகொண் டோடிடச் செய்வன்!
துகளற நினைக்கின் முயலுவோர்க் கரிய
தொடர்வினை தானுமொன் றுளதோ! (ரு)

**போஜ.**—சகே! நன்குரைத்தாய்! உனது திறமே திறம்!—நமது ஆசாரியர் புத்திசாகரரும் வெளியிற்சென்றனர். நாம் இவ்வஸ்தமன சமயத்தில் எங்கே செல்வோம்?

**காளி:**—இதோ! இவ்விராஜ மார்க்கத்தைப்பார்த்தாயா? இப்பொழுது எவ்வளவு ரமணீயமாயிருக்கின்றது!

* "பத்தி மாட மணிக்கொடி பானுவின்
மெய்த்த ழும்புறத் தைவர வெங்கதிர்
கைத்த லங்களிற் காளிந்தி யைம்மடி
வைத்தி ருந்துதா லாட்டுதன் மானுமே!" (சா)

ஆகலின் இவ்வழியே செல்வோம்!

**பவ:**—ஆம்! இராஜகுமாரா! அவ்விடமே செல்வோம்!

**போஜ:**—நண்பர்காள்! இவ்வஸ்தமன சமயத்தின் அழகைப்பார்த்தீர்களா?

* நைடதம்.

* "புதைத்த காரிருட் படமொழித்
திக்துணைப் போது
முதித்த கீழ்த்திசை மகட்புணர்ந்
தாயென வூடிக்
கொதித்து மேற்றிசை யணங்கலத்
தகப்பதங் கொடுமே
லுதைத்த தாலெனச் சிவந்தது
வெய்யவ னுடலம்!" (௭)

பவ:—இராஜகுமாரா! நன்று வர்ணித்தனை! இச்சந்திரோதயத்தின் அழகைப்பார்!

$ "சரிந்தவெங் கதிரோன் வீழத்
தாரபதி சந்தி செய்யப்
புரிந்தசிந் தையனுப் போகப்
பூங்குழன் மடவார் தம்மைப்
பிரிந்தவர்க் கால மாகிப்
பிரிவிலோர்க் கமிழ்த மாகி
விரிந்தவெண் ணிலவை வீசி
வெண்மதி தோன்ற லுற்றான்!" (அ)

போஜ:—காளிதாசா! நீயுமிந்தச் சந்தியாகாலத்தை வர்ணிப்பாய்?

காளி:—சகே! அப்படியே வர்ணிக்கின்றேன் கேண்மோ!

விசன முள்ளவன் வித்தை போலர
விந்தசோலை யொடுங்கவுஞ்

சுசனரன்னிய நாட்டுவாழ்வென
வண்டுகெண்மிக சேரவும்

---

* நைடதம் $ கம்பராமாயணம்.

அசன லோபியி னர்த்தம்போல்விழி
நிஷ்ப்ரயோஜன மாகவும்
அசலை யைக்கொடு மன்னர்போலிருள்
காணதோவதை செய்வதே ! (கூ)

**போஜ:**—காளிதாசா ! உன் புத்தியின் சாமர்த்தியமே சாமர்த்தியம்! கொடிய அரசனைப்போல் இருள்பூமியைப் பாதிக்கின்றதென்று நீ வர்ணித்தது மிகவுஞ்சரியே ! அவ்வாறு பிரஜைகளை வருத்தியதனுலன்றோ அப் பௌலகேசியும் மடிந்தனன் !

**காளி:**—ஆமாம் ! பிறர் நாட்டின்கணுள்ள பிழைகள் புலப்படுமேயன்றித் தந்நாட்டில் நடக்குமக்கிரமங்கள் தெரியுமா? உனது சிறிய தந்தையார் ஆண்டுவருமிந்நாடு இப்போது எந்நிலையிலுளதென்று நீ யறிந்தாயோ ?

**போஜ:**—என் தந்தையார் ஆண்டாலென்ன ? வேறு யாராண்டாலென்ன? அக்கிரமமாய் நடக்குமரசர்களைக் கொலை செய்தல்கூடத் தோஷமன்று !

* "குற்றம் புரியா திருந்துபிறர்
குற்றங் களைக சிறிதேனும்
குற்றம் புரியிற் சிற்றெறிவைக்
குவையை யழிக்கு மாறேபோற்
பற்றும் பெருவாழ் வினையழிக்கும்
பகைவர்க் காக்க மிகப்பெருக்கு
முற்றும் பெருநோ யுழப்பிக்கு
முனியா ரானு முனிவிக்கும்!" (கo)

**பவ :**—நீயுரைத்தது மிகவும் சரியே !

* பிள்ளையார் பிராணம்.

* 'நஞ்ச மன்னவ னைந்நலித் தாலது
வஞ்ச மன்று மநுவழக் காகுமால்.' (கக)

**காளி:**—இராஜகுமாரா! அந்த எட்டுநியாயமெல்லாம் பிறருக்கு உபதேசிக்கும்பொழுதுதான்! ஸ்வானுஷ்டானத்தில் எல்லோரும் வழவழாத் தான்!—அது போகட்டும்! அதோ பார்த்தையா!

உதித்துமறை போழ்திலே
யுணவுகொண் டிதோமாடுகள்
மதித்துமடி பாலையும்
வடியவிட்டுச் செல்கின்றதும்,
பதைத்திளைய கன்றுகள்
பழமைகொண் டுதன்தாயுடன்
குதித்து விளையாடலும்
குழலிசைத் தனும் நேர்த்தியே! (கஉ)

**போஜன்:**—ஆம்! வெகு ரமணீயமாகவே யிருக்கின்றது

தங்கியேபிணைமுஞ் சேய்கடாங்கியே
கொங்கை யோவெனக் குடங்களேந்தியே,
வங்கி யோசைபட மறுகு தன்னிலே
யங்கனு மணிகள் போதல் அந்தமே! (கங)

**காளி.**—ஆம்! பிள்ளைகளின் அருமை பெற்றவர்களுக்கன்றோ தெரியும். (மறைவாய்) ஆ ஆ! இராஜகுமாரா! இப்பொழுது உன் பிதா உயிருடனிருப்பாராயின் நீ எங்களைப் போல் இப்படிப் பரதேசியாய்த் திரிவாயா? ஐயோ! அந்தப் பாவி முஞ்ஜன்—

---

* கம்ப ராமாயணம்.

**போஜ.**—என்ன ! காளிதாசா ! மறைவாய் உனக்குள் ஏதோ சொல்லிக் கொள்கின்றனை ? யான் கேட்கப்படாத் ரகசியமோ ?

**காளி.**—அப்படி யொன்றுமில்லையே ! இராஜகுமாரா ! அதோ பார் ! இரண்டு ஸ்திரீகளை இரண்டு புருஷர்கள் மடக்கிக்கொண்டு பூஜை செய்கின்றார்கள் !

**போஜ.**—(உற்று நோக்கி) என்ன காளிதாசா ! எல்லாம் உனக்கு வேடிக்கையாயிருக்கின்றது. எவர்களோ இரண்டு மகாபாதகர்கள் யமகிங்கரர்கள்போல் அப்பெண்மணிகளை மடக்கிக்கொண்டு அநியாயமாய் வருத்து கின்றார்கள் ! அவர்களைப் பூஜை செய்கின்றார்கள் என்கின்றாயே !

**காளி :**—இந்நகரில் அதுவும் ஒரு பூஜைதான் ! அதை வேறுவிதமாய்க் கொள்ளில் இராஜத்துரோகத்திற்காளாவோம்.

**போஜ:**—இவர்கள் யாவரோ ? இப்பெண்களின் கணவர்களோ ?

**காளி.**—பாவம் ! இப்பெண்மணிகளின் கணவர்களா ? ஹரி ! ஹரி ! !

**போஜ.**—பின் யாவர் இப்பாதகர்கள் ? இக்கணமே இவர்களைத் தொலைத்துவருகின்றேன்.

**காளி.**—இவர்கள்தாம் உன் சிறிய தந்தையார் முஞ்ஜ மஹாராஜா அவர்களது பிரதான சேவகர்கள் !

**போஜ.**—என்ன ! இவ்வளவு கொடுமையா என் சிறிய தந்தையார் ஆண்டுவருந் தலைநகரில் நடக்கின்றது ?

**காளி.**—(சிறிது நகைத்து) இதை யொரு கொடுமையென்று சொல்கின்றனையே ! இதனை எவ்வளவோ சிறந்த மரியாதையென்றல்லவோ கொள்ளல்வேண்டும் !

**போஜ.**—இவ்வளவு அக்கிரமங்களையும் பார்த்து என் சிறிய தந்தையார் கேளாமலிருக்கின்றாரா?

**காளி.**—அப்பா! அவரா யிருப்பின் இந்நேரம் இப்பெண்மணிகளின் பிராணன் பறந்தோடியிருக்குமே!

**போஜ.**—(கோபத்துடன்) என்ன காளிதாசா! பெரியோர்களைப் பழிக்கின்றனை?

**காளி.**—பழித்தால் உன்னைப் பழிக்கவேண்டும்! யான் ஒருபோதும் பெரியோரைப் பழியேன்!

* "குரவரைப் பெரியரைக் கூறு மாகமம்
விரவுறு மறைகளை மேத கும்படி
பரவுத லலதவர் பாங்கர் நிந்தனை
கரவுற வுளத்தினுங் கருதொ ணாததே!" (சச)

**போஜ.**—என்ன! காளிதாசா! நீ சொல்வதெல்லாம் விந்தையாயிருக்கின்றன. என்னை எதற்காகப் பழிக்கவேண்டுமென்கின்றனை?

**காளி.**—நீ இவ்விரண்டு வருஷங்களுக்கு முன்னரே இவ்விராஜ்ஜியத்தின் பட்டத்திற்கு வந்திருக்கவேண்டுமே! உன்னுடைய கடமையன்றோ பிரஜைகளுக்கு யாதொரு தீங்கும் வாராமல் அவர்களைப் பரிபாலிப்பது?

* "உரைசெயு மறத்தி னாற்றா
லொருகுடை நிழற்ற முந்நீர்த்
தரைமுழு தாள வேண்டிற்
றகைபெறு மமைச்சு நாடு
புரையறு மரணே மிக்க
பொருள்படை நட்பென் றாறும்
வரைசெயப் படாத யாக்கை
யுறுப்பென மதித்துக் கோடி!" (சரு)

* பிள்ளையார் புராணம்.

**போஜ.**—இது விந்தையினும் விந்தையே! என் சிறிய தகப்பனார் ஆண்டுவரும்பொழுது யான் எப்படி இவ்விராஜ்ஜிய த்தின் பட்டத்துக்கு வரக்கூடும்?

**காளி.**—ஆயின்! நீ படித்திருக்கும் சாஸ்திரங்களிற்பிதா வின் சொத்துக்குப் புத்திரனிருக்கும்பொழுது பிராதாதான் பாத்தியஸ்தனென்று படித்தாய்போலும்?

**போஜ.**—இல்லை! புத்திரன் தான் முக்கிய பாத்தியதை யுள்ளவன்! ஆயினும் என் சிற்றப்பன் சொத்துக்கு யான் எப்படி உரியவனாவேன்?

**காளி.**—ஆம்! அவருடைய சொத்தாயிருப்பின், நீ சொ ல்வது வாஸ்தவமே!

**போஜ.**—பின் யாருடையது இத் தாரா ராஜ்ஜியம்?

**காளி:**—உன் பிதா சிந்துலமஹாராஜருடையது! அவர் இறந்து போகுங்காலையில் நீ ஐந்துவயதுப் பாலகனாயிருந்த னையாம்! அதுபற்றியே உன் பிதா உனக்கு வயது வருமளவும் இவ்விராஜ்ஜியத்தைப் பரிபாலித்துவரும்படி உன் சிறியதந்தை யாரிடத்தில் ஒப்புவித்தனராம்!

**போஜ:**—என்ன! என் பிதா ஆண்டுவந்த ராஜ்ஜியமா இது?

**காளி:**—ஆம்! அதைப்பற்றித் தான் இவ்வக்கிரமங்களுக் கெல்லாம் உன்னையே பழிக்கவேண்டுமென்று யான் கூறி னேன்!

**போஜ:**—(சிந்தித்து) என் சிறிய தந்தையார் எதற்காகஇவ் விராஜ்ஜியத்தை யின்னுமெனக்கு ஒப்புவிக்கவில்லையோ?

**காளி:**—அது விஷயம் உனக்கும் அவருக்குந்தாம் தெரியவேண்டும். அக்கிரமத்தையே அறநெறியாய்க் கொள் ளில் எம்போன்ற பிரஜைகள் என் செய்வார்கள்?

போஜ:—நல்லது ! இவ்விஷயங்களெல்லா முனக்கெப்படித் தெரியும் ?

காளி:—இது விஷயம் உன்னையன்றி மற்ற யாவருக்குந் தெரிந்ததே !

போஜ:—நமது ஆசாரியர் புத்திசாகரருக்குத் தெரியுமா?

காளி:—என்ன ! ராஜகுமாரா ! அப்படிக் கேட்கின்றாயே? அவர் உன் பிதாவுக்குப் பிராணசிநேகிதராவரே! அதுபற்றியே தான் உன் பிதா உன்னை அவரிடத்தில் ஒப்புவித்தனராம் !

போஜ:—இவை யெல்லாமெனக் கெங்ஙனம் தெரியும்? யாராயினும் இவ்விஷயங்களை என்னுடன் சொல்லியிருந்தாலன்றோ ? நமது ஆசாரியரும் உரைத்திலர்! நீ சொல்வனவெல்லாம் எனக்குப் புதுமையாகவே யிருக்கின்றன.

காளி:—நல்லது ! இப்பொழுதாயினுந் தெரிந்துகொண்டனையே ! நீ யினிச் செய்வதைப்பார்ப்போமே !

போஜ:—(ஆன்மகதமாய்) ஆ ஆ ! இதுவரை நம் நிலைமை நமக்கே தெரிந்ததில்லை ! என் பிதாவுக்கு அவ்வளவு பிராணநேசரென்று சொல்லின அக்கிழவரும் சொன்னரில்லை. (உதட்டைக் கடித்துக்கொண்டு). ஐயோ ! இவராதீனத்தில் இன்னுமெத்தனைநாள் இருக்கவேண்டுமோ ? இன்றே எனது குருகுலவாசத்தை முடித்தேன் ! இன்றே எனது படிப்பையும் விடுத்தேன் !—(வியாகித்துப் பெருமூச்செறிந்து) ஆ ஆ ! யான் மிகக்கொடியன் ! மிகக்கொடியன் !! என் சொந்த அத்தை மகளையே மணந்து, இரண்டுவருஷகாலமாகியும், பரமத்துரோகியான யான் இக்கிழவருடைய துர்ப்போதனையைக் கேட்டுக்கொண்டு அவள் முகத்தையும் பார்த்திலனே ! ஐயோ ! அப்பேதை என்னைப்பற்றி யாது நினைப்பள்? என் அத்தை சாருமதிதான் என்ன வருந்துவள் ?

* "வருவாய்க் கியைய வாழ்தலுறு
மறுவில் கற்பின் மனையாள்போற்
பொருள்யா வுளவா மதுவன்றிப்
புகழும் பயனு மிகவுண்டாங்
கருதா ரெதிரே யிமிலேற்றுக்
காமர் நடையு முறுமதனு
லொருவா தவனோ டுவப்புறவே
யுற்று வாழ்த லறனாகும்!" (கசு)

இனி எப்படியாயினும் இக்கிழவரிடத்தினின்றும் சுவாதீனம் பெறல் வேண்டும்! (பிரகாசமாய்) நண்பர்காள்! யான் இப்பட்டணத்தை நாளைக்காலையிற் சுற்றிப்பார்க்க நினைத்திருக்கின்றனன்! நீவிருமெம்முடன் வருவீர்களா?

இருவரும்:—மிகவுஞ் சந்தோஷம்! அப்படியே வருகின்றோம்!

போஜ:—சகே! காளிதாசா! யானின்றே குருகுலவாசத்தை முடிக்க நினைத்திருக்கின்றேன்.—நமது ஆசிரியர் எப்படி எண்ணினாலும் சரி—

காளி:—அது நியாயமே! நமது ஆசிரியருமிதற்குச் சம்மதிப்பாரென்றே நம்புகின்றேன்!

பவ:—நண்பா! இதோ நமது ஆசிரியரும் வருகின்றார்! நாம் வீட்டுக்குப்போவோம் வருக!

காளி:—ஆம்! என்னவோ யோசனை பண்ணிக்கொண்டு வருகின்றார்! (போசனை நோக்கி) இராஜகுமாரா! நாங்கள் போய்வருகின்றோம். நமது ஆசிரியரும் இதோ வருகின்றார்! அவர் சொல்லைமாத்திரம் நீ அவமதியாதே!

* பிள்ளையார் புராணம்.

*"தந்தைசொன் மறுப்பவர்க டாயுரை தடுப்போ
ரந்தமறு தேசிகர்த மாணையை யிகந்தோர்
வந்தனைசெய் வேதநெறி மாறினர்கண் மாறாச்
செந்தழல வாயநிர யத்தினிடை சேர்வார்!" ()

(இருவரும் நிஷ்கிரமித்தல்).

**போஜ:**—சரி ! இவர்களும் போய்விட்டனர்கள் ! நமது ஆசிரியரும் வருகின்றார் ! நாம் எவ்விதத்திலேனும் இவரிடத்தினின்றும் சுவாதீனம் பெறல்வேண்டும்.

(பிரவேசித்து)

**புத்திசாகரர்.**—ஆஹா ! சிந்துல மகாராஜர் இறந்துபோகும்பொழுது என்ன சொன்னார் ! "என் பிரியமுள்ள மித்திரனே! நம் தம்பி முஞ்ஜன் துர்ப்போதனையால் என்செய்வேனோ ? ஆயினும், இராஜ்ஜிய பாரத்தை வகிப்பதற்குச்சாமர்த்தியமுள்ள சகோதரனை விட்டுவிட்டுச் சிசுவான புத்திரனுக்குப் பட்டங்கட்டினால் வீணாய் உலக நிந்தைக் காளாவேன். ஒருவேளை யவன் இராஜ்ஜியத்துக் காசைப்பட்டுப் பாலகனை என் தனயனை விஷம் முதலியன வைத்துக் கொன்றுவிட்டாலும் விடுவன். ஆகலின், என் கண்மணி போஜனுக்கு இராஜ்ஜியம் கிடைக்காமற்போனாலும் போகட்டும். அவனை உயிருடன் காப்பாற்றுவது உன் கடமை!" ஐயோ அவர் இப்படி யுரைத்திருக்க, அச்சண்டாளன் நாட்டைக்கைப்பற்றிக் கொண்டது மன்றிப் போஜனுக்கும் கேடு நினைத்திருக்கின்றானே ! இதுவுமன்றி ஏதோகெட்ட எண்ணங்கொண்டு, தன் தங்கை மகளேயே இவனுக்குப்பலவந்தமாக மணஞ்செய்வித்தனன் ! இவளோ முஞ்ஜனுடைய ஆதீனத்திலிருக்கின்றாள் ! என்னவென்றாலும் ஸ்திரீகளின் புத்தி பேதைமையுடைத்தே ! யான் இதுபற்றியே தனக்கு இராஜ்ஜியங் கிடைக்குமளவும் போஜனை இவளுடன்

* கந்த புராணம்.

சேராதிருக்கும்படி கட்டாயப்படுத்திவருகின்றேன்! ஆயினும் என்னை ஊரார் என்ன நினைப்பார்கள்? அப்பெண்மணிதான் நம்மை எவ்வாறு பழியாதிருப்பள்? எப்படி யிருப்பினும் போஜனுடைய உயிரைக் காப்பாற்றுவது என்னுடைய முக்கியக் கடமையாயிருக்கின்றது. போஜனுக்கோ ஒன்றுந் தெரியவில்லை. விசேஷ வித்தை கற்றவனு யிருப்பினும் உலக நடக்கை தெரியாதவனு யிருக்கின்றனன்! எதற்கும் சகலப் பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாயிருந்து அவரவர்களுடைய புத்திகளைப் பிரேரேபிப்பிக்கின்ற பரமாத்மா இருக்கின்றார்! நானும் அவனது பிராணநேசன் காளிதாசனைக்கொண்டு போஜனுக்கு அவனது நிலைமையைத் தெரிவிக்கும்படிசொல்லியிருக்கின்றேன்! அவனும் போஜனுடன் இந்நேரம் பேசிவிட்டு இப்பொழுதுதான் நம்மைக்கண்டு பயபூதியுடன் வீட்டிற்குத் திரும்புகின்றான்! போஜனும் ஏதோ நம்முடன் வசனிப்பதற்காகவே தனியாய் யோசித்துக்கொண்டு நிற்கின்றனன்போலும்! நல்லது! அருகிற் சென்று விசாரிப்போம்! (போசனருகிற் சென்று) குமாரா! என்ன சமாசாரம்? ஏன் ஒருமாதிரியாய் இருக்கின்றனை?

**போஜ**:—என்னை இதுகாறும் படிப்பித்துப்பாதுகாத்து வந்த குருநாதா! வந்தனம்! (வந்தனஞ்செய்தல்).

**புத்தி**:—குழந்தாய்! உனக்கு அமோகமாய் மங்களமுண்டாகுக!

**போஜ**:—அடிகாள்! யான் தங்களிடத்தில் ஒரு சிறிய விண்ணப்பஞ் செய்துகொள்ளவேண்டியிருக்கின்றது!

**புத்தி**:—என் செல்வனே! உன்னிஷ்டப்படி செய்கின்றேன்! உரைத்திடுவாய் நின்கருத்தை!

**போஜ**:—யான் இன்றையதினமே குருகுலவாசத்தை முடிக்கலாமென்று நினைத்திருக்கின்றேன்—

புத்தி:—அதற்கென்ன ?இப்பொழுதேயனுமதிதந்தேன் !

போஜ:—மேலும், நாளையதினங் காலையில் என்பிதா சிந்துலமஹாராஜர் பரிபாலித்து வந்த இந்நகரைச் சுற்றிப்பார்த்துவருவதாக என் நண்பர்களுடன் சொல்லியிருக்கின்றேன். அதற்குந்தாங்கள் அநுமதிகொடுப்பீர்களென்று பிரார்த்திக்கின்றேன் !

புத்தி:—குமாரா ! அப்படியே வேண்டியனவெல்லாம் சித்தஞ்செய்து தருகின்றேன் ! இவ்வித உணர்வு உனக்கு எப்பொழுது உண்டாகுமென்றன்றோ. காத்திருந்தேன் !

போஜ:—அடிகாள்! யான் இன்னுமொரு விண்ணப்பஞ் செய்யவேண்டியிருக்கின்றது.

புத்தி:—அஃதென்ன ? உன் இஷ்டப்படியே செய்கின்றேன்! சீக்கிரம் அதையுமுரைத்திடு.

போஜ—யான் விலாஸவதியினிடம் நாளை இரவு செல்வதாக எண்ணியிருக்கின்றேன் ! அதற்குந்தாங்கள் விடைதந்தருளவேண்டும்.

புத்தி:—அப்பா! அவ்வாறு செய்வதில் யாதோர் ஆக்ஷேபமுமில்லை. நின் அத்தை சாருமதிதேவியார் மகா பதிவிரதை! விலாஸவதியும் விசேஷ வித்தைகற்றவள்! ஆயினும் ஸ்திரீகள் பரதந்திரைகளானபடியாற் சாக்கிரதையாயிருத்தல்வேண்டும் ! சிறந்த விவேகிகள்கூட மதனெனுந்தீயினால் மனமெனுங்குடிசையைக் கொளுத்திவிட்டு யுக்தாயுக்தங்களை யறியார்களாயின் சுத்தப்பேதையரும் பரனுடைய ஆதீனத்திலிருப்பவருமான ஸ்திரீகள் எவ்வாறு அறியப்போகின்றனர் ?

* "தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வருங்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனும்
நாம மில்லை நரகமு மில்லையே !" (கஅ)

* கம்ப ராமாயணம்

ஆதலால், யான் இனி அதிகமாய் உனக்குக் கூறவேண்டிய தென்ன விருக்கின்றது! நீ பண்ணிய பிரதிஞ்யையை மாத்திரம் மறவாதே! அதை உனது நன்மைக்காகவே ஞாபகம் மூட்டுகின்றேன்.

**போஜ.**—ஒருபோதும் மறவேன்! யான் இன்றிரவு தனியாயிருக்க விடைதரல்வேண்டும்!

**புத்தி.**—இராஜகுமாரா! அப்படியே செய்! யானு மவசர நிமித்தமாய் அந்திரதேசத்துக்குச் செல்லவேண்டியிருக்கின்றது. நான் வருவதற்கு இரண்டு மூன்று நாட்கள் சென்றாலும் செல்லும்! இன்றிரவே உனக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்துவிடப்போகின்றேன்! சாக்கிரதையாக மாத்திரம் இருந்துகொள்!

* "நல்ல வினைக்கு நற்பயனுந்
தீய வினைக்குத் தீப்பயனு
மில்லை யெனும்வல் லிழுதையரு
மெள்ளும் விடருந் தூர்த்தர்களுஞ்
சொல்லு நடரு முதலாகத்
தொக்க குழுவைச் சேர்ந்தொழுகிற்
புல்லு மறிவைத் திரித்திருமைப்
பொருளுங் கெடுப்பர் புகழோடே!" (௧௬)

(இருவரும் நிஷ்கிரமித்தல்.)

* பிள்ளையார் புராணம்.



## இரண்டாங்களம்.

---

### இடம் - தாரைநகர் : விலாஸவதியின் அரண்மனையில் சயனகிருகம்.

(மஞ்சத்தில் வீற்றிருந்தபடி **சாருமதியும் விலாஸவதியும்** பிரவேசித்தல்).

**விலாஸவதி**:—அம்மா! என் தந்தையார் சூரஸேன மஹாராஜர் பரிபாலித்துவந்த பூபாளநாட்டிற்கு என்னையுங்கூடவே யழைத்துப்போகலாகாதோ? ஐயோ! உன்னைவிட்டுப் பிரிந்திருக்கும் ஒவ்வொரு க்ஷணமும் எனக்கு யுகம்போல் வளருமே! யான் படுந்துயரங்களை யெடுத்துரைத்து ஆற்றுதல்செய்வதற்குக்கூட ஒருவருமில்லாமற்போய்விடுமே. அந்தோ! பாவியேன் ஏன் ஜனித்தேன்?

**சாருமதி** :—(சமாதானஞ் செய்துகொண்டு) என் கண்மணீ! உனக்குத் தெரியாததென்ன இருக்கின்றது. உன் தந்தையார் ஆண்டுவந்த பிரஜைகளைச் சந்தோஷிப்பதற்காகவே யான் அவ்விடம் இன்று அவசியமாய்ச் செல்லவேண்டியிருக்கின்றது. அன்றேல், உன்னை விட்டு ஒருகணப்பொழுதேனும் யான் பிரிந்திருப்பேனு? மேலும், குழந்தாய்! உனக்கு விவாகமாகாதிருப்பின், உன்னையுமென்னுடன் அழைத்துச்செல்வேன். விவாகமான பெண்கள் புருஷனிருக்குமிடத்திலன்றோ இருக்கவேண்டும். அதற்காகவே யான் உன்னை இவ்விடத்திலேயே நின்மாமாவின் சம்ரக்ஷணையில் விட்டுவிட்டுச் செல்கின்றேன். இதற்கெல்லாம் நீ விசனப்படலாமோ?

**விலா**:—அம்மா! யான் விவாகஞ் செய்துகொண்டதன் பயன் இதுதானே! ஐயோ! மணந்து இரண்டுவருஷமாகியும் இதுவரை என் பிராணநாதர் இங்குவந்திலரே! என்முகத்தையும் பார்த்திலரே! என்குறை தீர்த்திலரே! அத்தை மகளென்றும் யோசித்திலரே!-குருகுலவாசத்திலிருப்பதனுல்

வரப்படாதென்று நினைத்தனரோ? அல்லது இவள் கொடியவ ளென்றெண்ணி என்னைக் கைவிடுத்தனரோ? ஐயோ ஒன்று மறிகிலேனே!—(இடப்பக்கந்துடிக்க) ஆ ஆ! இஃதென்ன! எனது இடது கண்ணும் இடது தோளுந் துடிக்கின்றனவே! (திடீரென்று வலக்காதிற் கைவைத்து) ஐயோ! இருந்தாற்போல் எனது வலச் செவியில் வண்டொன்றுவந் தூதுவதுபோல் ஒரு சத்த முண்டாகின்றதே! என் செய்வேன்? எவ்வாறு சகிப்பேன்?

(பாடுதல்.)

(க). இராகம் - எதுகுலகாம்போதி, தாளம் - ரூபகம்.

பல்லவி.

ஐயோ யானுமோர் - அணங்காய்ப் பிறந்ததை
வையகத்தில் யார்க்கு - வரைந்திடுவேன்!

அநுபல்லவி.

கடல்புடைச் சூழுமிந்த - காசினியி லெனக்கு
அடைக்கலம் வேறுண்டோ-அறைந்திடுவாய் அம்மா! (ஐ)

சரணங்கள்.

மங்கைமார் மாலையிட்ட - மணவாளனைப் பிரிந்து
மண்ணிலொரு கணமும் - வசிப்பாரோ?
எங்கும் வசையாமே - இகழ்ச்சிக்கு மிடமாமே
என்றும் பழியாமே - ஏதுயான் செய்குவேன்? (ஐ)

என்றுமே வாராத - என்றன் பிராணநாதர்
இன்றிங் கெனைக்காண - இணங்கிவருவாரோ!
ஒன்றுமே யறியாமல் - ஒழுக்கமுந் தெரியாமல்
ஊக்கங் கொண்டென்மனம் - உருகுகின்றதம்மா! (ஐ)

சாரு.—குழந்தாய்! நீ இப்படிப் பாமரரைபோல் விசனப்ப டுவது சரியன்று! எல்லாம் விதியின் செயல்? பிரமன் நம் தலையிலெழுதி யிருப்பதை யார் அழிக்கவல்லர்? சீதாதேவி யைப் பார்க்கினும் சிறந்த உத்தமி இப்பதினான்கு புவனங்களி லுமுண்டோ? (பாடுதல்.)

(உ). இராகம் - சங்கராபரணம். தாளம் - ரூபகம்.

பல்லவி.

அன்னை சீதை - அன்று பட்ட துயர்
என்னவென்று - எடுத்துரைப்பேன் !

அநுபல்லவி.

சனகன் புதல்வி - தரணியின் செல்வி
அனலினில் மூழ்கி - அறநெறி நாட்டிய— (அன்னை)

சரணம்.

நகரினி லொருவன் - நவின்ற பழிக்காகச்
சகத்தினி லெங்குமே - சத்தியவானெனும்
மிகப்பெரும் ஸ்ரீராமன் - மின்னனையாளைக்கான்
புகச்செய்ததைக் கேட்டும் - புலம்புதலேனோ நீ?— (அ)

ஆகலின், குழந்தாய் நம்மாலாகத்தக்கது ஒன்றுமில்லை.

* 'மாதவர்க ளடிபேணி
மற்றவர்கள் விதிமுறையே
யோதியநல் வழிவழுவா
துபவசித்திங் குன்னுடைய
காதலனை யெப்போழ்தும்
கருத்திடைவைத் துயர்தவஞ்செய்
யீதுனக்குக் கருமங்கா
ணென்றுமென் கண்மணியே!" (உ0)

லீலா:—அம்மா! நீ யிப்படிக் கூறுவதுஞ்சரியோ?

$ " தக்ககணு வன்சிறத்
தன்னைக்கை விட்டகன்ற
புக்ககத்தார்கைவிடுவர்
பிறந்தகத்தார் போற்றார்க

* கம்பராமாயணம். $ ஒட்டக்கூத்த ராமாயணம்.

ளக்கணமே பழியிடுவ
ரன்னியர்க ளிருவினையேன்
மிக்கொரிடங் காண்கிலேன்
விதியேயோ விதியேயோ!" (உக)

(பிரவேசித்து.)

**மதநமாலிநி:**—அம்மணீ ! வந்தனம் !

**சாரு:**—என்னடி ! மதநமாலிநீ ! என்னசெய்தி ? என் உன்முகம் ஒருமாதிரியாயிருக்கின்றது.

**விலா:**—தரங்கவதி எங்கேடி ! இன்று காலைமுதல் அவளைக்காணவில்லை ?

**மதந:**—இன்று அவள் தந்தையாருக்குக்கவையாம் ! ஏதோ இக்கடிதத்தைத் தங்களிடத்திற் பத்திரமாய்க் கொடுக்கும்படி சொன்னாள் ! (ஒரு கடிதத்தை விலாஸவதியினிடம் நீட்டடல்).

**விலா:**—(கடிதத்தைப் பிரித்துப்பார்த்துச் சந்தோஷத்துடன் ஆன்மகதமாய்) ஆ ஆ !, இஃதென்ன ? என் கணவனார் எழுதியதோ ? (மீண்டும் நோக்கிக் கண்களில் ஒற்றிக்கொள்ளல்).

**சாரு:**—(விலாஸவதியை நோக்கி) என்னடி ! குழந்தாய்! ஏதாயினும் நம் போஜனைப்பற்றிய சமாசாரமோ ? நீ இக்கடிதத்தைப் பிரித்துப் பார்க்கும்பொழுதே ஒருவித சந்தோஷக்குறி உன் முகத்தில் தோன்றுகின்றதே ! என்னசங்கதி?

**மதந:**—ஆகா ! அவ்வளவு இருந்தால் விலாஸவதிக்கென்ன குறை? அக்கடினசித்தன்கூட இவளை நினைப்பனோ? அங்கேதான் பூரணமாய்ப் போதனை ஏறியிருக்கிறதே ? நல்ல செய்தியுமுண்டோ அம்மணி? (பாடுதல்)

(௯) - இராகம் - பியாக். தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

என்னென்றுரைப்பேன்முன்
சொன்னதைவிட இனி

உந்தன் கணவனென்னும்
அந்தகப் பாதகனை ! (க)

அன்று மணந்தவுன்னை
இன்றுதான் காணலிவன் ?
யாதென்றறிந்தாயோ
மாதர்பசுங்கிளியே ! (உ)

அரசியே யுன்னையவன்
சரசமொழிகளினால்,
அடிமையாக்கிடுவானக்
கொடியவேசிக்கையோ ! (ங)

விலா.— (கொஞ்சம் சினந்து) என்னடி ! மதநமாலினீ ! ஆடாத வார்த்தை யெல்லாம் ஆறைகின்றாய் ? எப்படி யிருப்பினும் ஸ்திரீகளுக்குப் புருஷனல்லவோ முக்கிய தெய்வம் !

தெரிந்து தன்னை வல்லபன்
தெருக்களிற் றவிக்கவிட்
டிருந்தபோதிலுங் கலந்
திழிந்தவேசி யோடுமே,
சிறந்த மன்னவர் குலத்
துதித்த தேவி மார்களுக்
கறிந்துதான் மணம் புரிந்த
நாத னல்ல வோகதி ? (உஉ)

ஆகலின், இனிமேல் அப்படிப்பட்ட வார்த்தைகளை என் முன் மொழியாதே ! உன்னை இம்முறை மன்னித்தேன்.

மதந.— (முகத்தை யொருவாறு சிடுத்துக்கொண்டு) எனக்கென்ன அம்மணீ? ஏதோதங்களுடைய நன்மைக்காகச்சொல்லவந்தேன் சிவ ! சிவ ! ! நீங்கள் இருவரும் சுகித்து வாழ்வதை நான் தடுக்கவேண்டுமா !

**விலா.**—அதற்கன்று! மதநமாலிநீ! ஒரு நல்ல சமாசாரத்தைச் சொல்லவிருந்தால் குறுக்கே அவமொழி யுரைக்கின்றனையே! இந்த அவசரந்தான் கூடாதென்கின்றேன்.

**மதந.**—என்ன அம்மணி! தங்கள் கணவனுர் செய்திதானே?

**விலா**:—(இலச்சையுடன்) ஆமாமடி! அஃது உனக்கெப்படித் தெரியும்? இக்கடிதத்தைப் பிரித்துப் பார்த்தாயோ?

**மதந**:—அம்மாடி! ஊரெல்லாம் தமுக்கடிபடுகிறது என்ன ரகசியம்? என்ன ரகசியம்!!

**விலா**:—இதென்ன விந்தையாயிருக்கின்றதே!

**மதந**:—ஆமாம்! விந்தைதான்! அப்பொழுது இராஜகுமாரன் செருப்படிப்பட்டதும் விந்தைதான்!

**விலா**:—என்ன! என் கணவனையா? அரசனில்லாத காடா இது? (கண்கள் சிவக்க) என் மாமா அரசாளும்பொழுது என் புருஷனையு மிவ்வாறு புகுந்தடித்தார்களா? (எழுந்து உதடு துடிதுடிக்க).

*"எய்திய குற்றத் தோர்கள்
யாவரா யினுங்கண் ணோடா
தைதெனை நாடி நீதி
யறந்தலை பிழையாத் தண்டஞ்
செய்தலே செங்கோ லாகுஞ்
செய்யகோ லின்றே லென்னு
முய்திசெய் மதையான் மக்க
ளுறுபய னுற்ற போலும்!" (உங)

இக்கணமே என் மாமாவிடஞ் சென்று அப்பாதகர்களுக்குத் தக்கதண்டம் விதிப்பிக்கின்றேன்! (பரபரப்புடன் போக யத்தனித்தல்)

* பின்னோயபர்புராணம்.

மதந:—அம்மணி ! செருப்பென்றாற் செருப்பா ? அவமானமான சொற்களைக்கேட்டாற் போதாதா ? அதைத் தான் சொல்லவந்தேன். நீங்கள் அவசரப்படுகின்றீர்கள் !

விலா:—மதநமாலினீ ! போதுமிந்த அதிகப்பிரசங்கம் ! இதனுடன் நிறுத்துன்பேச்சை ! என் மனத்தைச் சஞ்சலப்படுத்தவேண்டாம். யான் சொல்லவந்த சமாசாரமிதன்று.

மதந:—அப்படியானாற் சொல்லுங்களேன் ! நல்ல சமாசாரமாயிருந்தால் எல்லாருக்குஞ் சந்தோஷந்தானே !

விலா:—அதைத் தான் யான்சொல்லத்தொடங்கினேன்! நீ அதற்குள் அவசரப்பட்டு அடாதவார்த்தைகளையெல்லாம் வாய்க்குவந்தமட்டும் மொழிந்தனை ! உனக்கு ஒரு தடவை சொன்னாற் போதாது—

மதந:—ஆமாம் ! நான் அவ்வளவு கெட்டவள் தான். எப்படியிருந்தாலும் நான் தரங்கவதியாவேனா ?

விலா:—(புன் சிரிப்புடன்) இல்லை ! மதனமாலினீ ! இன்றையதினம் என் பர்த்தா இங்குவருவதாக எழுதியிருக்கின்றார் ! ஏதோ யான் செய்த பாக்கியவசந்தான்போலும்.

சாரு:—நம்போஜனா இங்கு வருவதாகச் சொல்லியனுப்பினன் ?

விலா:—ஆம் அம்மா ! இதோ பாருங்கள் (கடிதத்தைச் சாருமதியினிடத்தில் பிரித்தபடி கொடுத்தல்).

மதந:—எதற்காக வருகிறாராம் தெரியுமோ ?

விலா:—அதொன்றும் விவரமாய்த் தெரியவில்லை ! அவர் எழுதியனுப்பிய தோரணியைப்பார்த்தால் அவருக்கு என்மீது கிருபை புகுந்ததுபோலவே தோன்றுகிறது !

சாரு:—(கடிதத்தை முற்றும் பார்த்துவிட்டு). ஆம் ! வேறென்ன இருக்கக்கூடும் ? மணஞ்செய்து இவ்விரண்டு வருஷகாலமாய்

வாராதவன் இன்றிங்கே வருகிறதென்றால் அவன் மனம் திரும்பியே இருக்கவேண்டும் !

மதந:—எனக்கொன்று மப்படித் தோன்றவில்லை ! அவன் மனமாவது திரும்புகிறதாவது ? எந்தப் பேதையைக் கெடுப்பதற்கோ ?

சாரு:—(சினங்கொண்டு) என்னடி பாங்கி! உன் நிலைமையை யறியாமல் தாறுமாறாய் குளறுகின்றாய்! ஏது? வரவரக் கொஞ்சமேனும் மரியாதையில்லாமற்போயிற்று. சும்மா விருக்கின்றோ ளென்று மேன்மேலு மேறுகின்றனையோ? இனி உன்னுக்கை யுள்ளடக்கிப்பேசு ! பத்திரம் !

மதந:—அம்மணி, மன்னிக்கவேண்டும் ? ஏதோ தங்கள் விலாஸவதியின்மீது வைத்திருந்த அன்பினால் தெரியாமல் இவ்வளவு தூரம் சுவாதீனமாய்ச் சொல்லிவிட்டேன். ஆம் ! மனத்திலொன்றெண்ணி வெளியிலொன்றுசொல்லுகிறவர்களுக்குத்தான் இது காலம். நான்போய்வருகின்றேன் அம்மணி! உங்களுக்கேன் வருத்தத்தை யுண்டாக்கவேண்டும் ? (நிஷ்கிரமித்தல்.)

சாரு:—குழந்தாய்! இனி உனக்கென்ன குறை? உன் புருஷனும் வருகின்றான் ! நாழிகையாகின்றது ! நான் போய்வர விடையளிப்பாய் !

விலா:—அம்மா ! நீங்களும் போய்விட்டால் இச்சமயத்தில் யான் என்செய்வேன் ?

சாரு:—என் கண்மணி! நான் வெகு சீக்கிரத்தில் திரும்பி வந்து விடுகின்றேன் ! நீ தடைசெய்யாதே ! உன் கணவனுடைய பிரியத்தைப் பெறுவதற்கு எப்படி யெப்படி நடந்து கொள்ளவேண்டுமோ அப்படியெல்லாம் நடந்துகொள் ! நான் போய் வருகின்றேன்! (சிநேகத்துடன் மருவி முத்தமளித்து நிஷ்கிரமித்தல்.)

விலா:—ஐயோ ! என் மனத்திற்கு ஒன்றுந்தோன்றவில்லையே ! என் கொழுநன் வருகிறுனென்று மனம் ஒருவாறு களிப்படைந்தபோதிலும் என்னவோ சங்கடத்தை யடைகின்றதே ! உண்மையாய் என் பிராணநாதரையுமின்று யான் காண்பேனே ? (பாடுதல்)

(௪) இராகம்-சாவேரி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

மன்னு! வாரீர் - என்னைப் பாரீர் !

அநுபல்லவி.

மாராபிராமனே !-மன்னுயிர்நேசனே !
பாராளும்வேந்தர்கள்-பயந்தொடு மீசனே ! (மன்)

சரணம்.

வருந்து மிவ்வேழையாள் - மடிவாளென்றொருகாலே
பிரிந்த கன்றைத்தேடித்-திரும்புமபசுவைப்போலே ! (மன்)

ஏ கௌரீ! புண்ணியவான்களுடைய துயரைப்போக்குஞ் சங்கரீ ! இவ்வேழையின் மனம் இப்படிப் பரிதவிக்கும்படி பார்த்துக்கொண்டிருப்பது நின் கருணைக்கழகோ ? நின்னையே நித்தமும் நம்பியிருக்குமென்னை இப்படிச் சோதிப்பதும் நியாயமோ ? ஹா ! பக்தஸம்ரக்ஷகி ! உன்னைத்துதித்து வணங்கவுமென்னலாகுமோ? (பாடுதல்).

(ரு) இராகம்-காபி. தாளம்-ஏகதாளம்.

கண்ணிகள்.

ம்ருகாங்க மௌளி காமினீ !
ம்ருகேந்த்ர காமினீ !
நகாதிராஜ புத்ரிகே !
நமோஸ்து தேம்பிகே ! (க)

புராரிதேவி ! சங்கரீ !
புராதநீச்வரீ !
பரேசி ! யுன்னையேத்துவேன் !
பணிந்துபோற்றுவேன் ! (௨)

அந்தோ ! உத்தமவயதையடைந்தும் வநிதைகள் வல்லபனைப் பிரிந்திருந்தால் உலகத்துளோர் என் சொல்வர் ? ஹே ஜகதீசுவரீ! இவ்வவதூறைநீக்கி நீ தான் என் மனோரதத்தைப் பூர்த்திசெய்விக்கவேண்டும் ! ஹே தேவீ ! நின் கருணாகடாக்ஷ லேசமிருக்குமாயின் யாருக்குத்தான் என்னகுறை ?

* "பதியுண்டு! நிதியுண்டு! புத்திரர்கண்மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும் !
பசுவுண்டு ! தவிசுண்டு ! திட்டாந்த மாகவெம
படரெனுங் திமிரமணுகா !
கதியுண்டு ! ஞானமாங் கதிருண்டு ! சதிருண்டு !
காயசித் திகளுமுண்டு !
கறையுண்ட கண்டர்பா லம்மை! நின் றருளிற்
கருத்தொன் றுமுண்டாகுமேல் ;
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா னந்தவொளியே !
நாதாந்த ரூபமே ! வேதாந்தமோனமே!
நானெனு மகந்தைதீர்த்தேன் !
மதியுண்ட மதியான மாணிக்க வல்லியே!
மதுசூத னன்றங்கையே !
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே!" (௨௪)

உன்னையே சந்ததமும் நம்பினேன்!என்னையுாட்கொண்டருள்வாய் ! (செவிகொடுத்து) இதோ யாரோ மாடத்தின்மீது வரு

* தாயுமானவர் பாடல்.

இன்றாம்பாலும். ஒருவேளை நம்பர்த்தாதாரோ? (குதூஹலத்துடன் எழுந்திருத்தல்.)

(பிரவேசித்து).

**முஞ்ஜன்:**—(ஆன்மகதமாய்) இதுவே ஏற்றகாலம்!

* "ஆற்றல் மூன்று முபாயங்க
ளான்று மிடத்தோ டமைந்திடினும்
போற்றித் தனக்கு வென்றியுறும்
பொழுது தேர்ந்தே வினைபுரிவர்!
ஏற்ற காலம் வருமளவு
மெண்ணிச் சும்மா விருப்பதுவே
வீற்றுச் சமர்க்குப் பின்வாங்கும்
வெற்றித் தகரே யாகுங்கொல்!" (உரு)

ஆதலாற்றான், இவ்விரண்டு வருஷகாலமாய் நமது எண்ணத்தை முடிப்பதற்குச்சமயம் பார்த்துக்கொண்டிருந்தோம்! அப் பயலுமின்று காலையில் நாம் செய்த பிரயத்தனங்களையெல்லாம் வீணாக்கி, நகரில் அமர்க்களஞ்செய்துவிட்டு, இப்பொழுது விலாஸவதியினிடம் வருவதாகக் கடிதம் எழுதியிருக்கின்றானாம். அதை எப்படியோ நமது மதநமாலினி சமயத்தில் அறிந்து நமக்குத் தெரிவித்தனள்! இதுவே அவனைத் தொலைத்துவிடுவதற்குச் சரியான தருணம். (பாடுதல்)

(சு) இராகம் - மத்தியமாவதி. தாளம் - அடதாளம்.

பல்லவி.

தருணந்தருணமிதுவே - வினைசெய்யத்
தருணந்தருணமிதுவே!

அநுபல்லவி.

தருணந்தருணமிது - தாராராஜ்ஜியத்தைக்
கருதியவண்ணம்நாம் - கைவசம்செய்தற்கு. (தருணம்.)

* பிள்ளையார் புராணம்.

சரணம்.

**போ**சகுமாரனிங்கே-வாராதவன்
ராசகுமாரிதனை
நேசத்துடன்காண-வருகின்றான்
ராசனைப்போல்மதித்து

ஆசைகொண்டுதீப-சோதியில்விழவரும்
நாசமடையுமந்த-நெருப்புப்பூச்சியைப்போலத்
தேசமுழுதுமாள-வாசயத்திலெண்ணி
மோசம்போவதற்கென்றன்-பாசத்திலகப்பட்டு! (தருணம்)

ஏதற்கும், **போ**ஜன் இங்கு வருவதற்கு முன்னரே விலாஸவதியின் மனத்தைக்கலைத்தால்தான் நமதெண்ணத்தை முடிக்கலாம். **போ**ஜனை இவள் பார்த்துவிட்டாற் பிறகு நமது தந்திரமெல்லாம் இவளிடத்திற் சாயாது! (மாடத்திலேறி விலாஸவதியினருகிற் செல்லல்).

**விலா:**—(நோக்கி) மாமா! வாருங்கள்! வந்தனஞ்செய்கின்றேன்! (வந்தனஞ் செய்தல்).

**முஞ்ஜ:**—தீர்க்க சுமங்கலியாயிருந்து சகலராஜபோகங்களையு மநுபவிப்பாயாக! என்ன விசேஷங் குழந்தாய்?

**விலா:**—விசேஷ மொன்றுமில்லை! ஏது தாம் இந்நேரத்திலிங்குவந்தது?

**முஞ்ஜ:**—(விலாஸவதியுடன் சொல்லத்தகாததுபோல் நடித்து) ஐயோ! ஈசுவரா! இப்படிக்கொத்த குழந்தையுந் துன்பத்தை யடைவது நின் கருணைக்கழகோ? (பிரகாசமாய்) குழந்தாய்! ஒன்றுமில்லை! இன்று காலைமுதல் உன்னைக்காணவில்லையே யென்று வந்தேன்.

**விலா:**—இல்லை! தங்கள் முகத்தைப் பார்க்கும் பொழுதே ஏதோ விசேஷமிருக்கவேண்டுமென்று தோன்று

கிறது. (முஞ்சன் பெருமூச்செறிய) என்னை அன்புடன் வளர்த்து வந்த மாமா! தங்கள் மனத்திற்கு என்ன சங்கடம் நேர்ந்தது? தாங்களதைச் சொல்லக்கூடாதென்றெண்ணியும் தமது செயல்களே ஏதோ பிரமாதத்தைக் குறிப்பிக்கின்றனவே! என்னிடத்திலதை யுரைக்கலாகாதோ?

முஞ்ஜ:—விலாஸவதி! உன்னை ஏன் யான் அன்புடன் வளர்த்துவந்தேன்? உன்னிடத்தில் இப்படிக்கொத்த பாசத்தைக் கடவுள் கற்பிப்பானேன்? கிளியைவளர்த்துப் பூனையினிடம் கொடுத்தவனைப்போலல்லவோ யான் ஆய்விட்டனன்!

விலா:—மாமா! எனது துர்ப்பாக்கியத்திற்குத் தாங்கள் விசனப்பட்டு என்ன செய்யலாம்? நான் கொடுத்துவைக்காதவள்! (இலச்சையுடன்) ஆயினும், மாமா! இவ்வளவு பராமுகமாயிருந்தவர் இன்றிங்கே வருகின்றாராம்.

முஞ்ஜ:—(கேட்கப் பிரியமில்லாதவன்போல் நடித்து) அவன் இவ்விடத்திற்கும் வருகின்றானோ? ஆ ஆ! யான் எப்படி வாஸ்தவத்தை யுரைப்பேன்? அல்லது மௌனமாகத்தான் எப்படியிருப்பேன்?

விலா:—(ஆன்மகதமாய்) ஐயோ! எனக்காக மாமா எவ்வளவு பரிதாபப்படுகின்றார்? உள்ளதைச்சொன்னால் நான் வருந்துவேனென்று நினைக்கின்றனரோ? என்ன செய்யலாம்? யாதிருக்கும்? (பிரகாசமாய்) மாமா! எது சம்பவித்தாலும் யான் அநுபவிக்கக் காத்துக்கொண்டிருக்கின்றேன்! தாங்கள் என்ன செய்வீர்கள்? எல்லாம் யான் செய்த பாவமே! தங்கள் மனத்திலிருப்பதைச் சொல்லுங்கள்.

முஞ்ஜ:—(மிகவும் விசனமுள்ளவன்போல் நடித்து) ஆ ஆ! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது போலாயிற்று! நாம் எடுத்து வளர்த்த குழந்தைக்கு நாம் செய்ததே தீங்காய் விளைந்ததே. குழந்தாய்! இன்றுகாலையில் ஒரு கலகம் நேர்ந்ததே தெரியுமா!

**விலா** :—ஆம்! ஏதோ ஒருவேசிக்கும் அவருக்கும் கலகம் நடந்ததாக மதநமாலிநி கூறினள்!

**முஞ்ஜ** :—ஐயோ! பாவிகள் அதையும் உனக்குத்தெரிவித்தனர்களா?

**விலா** :—அப்படியாயின், நமக்கு நல்லது தானே! அவளைப்பிரிந்துவிட்டால் அவருக்கென்மீது சிறிதேனும் தயையுண்டாகாதோ?

**முஞ்ஜ** :—அடி முக்தே! நடந்ததை முற்றிலுங்கேட்டாலன்றோ தெரியும்! (மெதுவாய்) ஐயோ! இதை நாமும் இவளுடன் சொல்லவேண்டியிருக்கிறதே.

**விலா** :—(சங்கையுடன்) என்ன? சொல்லுங்கள்!

**முஞ்ஜ** :—ஐயோ! போஜன் உன்னை அவ்வேசிக்கு அடிமையாக்கிக் கொடுப்பதாகக் கூறினனும். அதற்கவள் 'உம்மாலும் முடியாது, திரிமூர்த்திகளாலும் முடியாது' என்றனளாம்.

**விலா** :—அதன் மேல்!

**முஞ்ஜ** :—அதன்மேல் அவன் கோரமான சபதமொன்று செய்தனனும்!

**விலா** :—(பயஸம்பிரமத்துடன்) ஆ! அஃதென்ன?

**முஞ்ஜ** :—அந்தோ! உன்னையவ்வேசிக்கு அடிமையாகவாவது செய்கிறது, அன்றேல் உன்னைக்கொன்றுவது விடுகிறதென்று சத்தியஞ் செய்தனனும். அதற்காகத்தான் அவன் இன்றுன்னிடத்தில் வருவதும்! எனக்குத்தெரிந்து இவ்வக்கிரமத்தைச் செய்தால் யான் தண்டித்துவிடுவேனென்று பயந்து உன்னிடத்தில் நயமாயிருப்பவன்போற் சிலநாள் நடித்துப் பின்பு அவ்வேசியினிடத்தில் உன்னைத்தள்ளப் போகின்றான். அது முடியாமற்போனல், தன் சபதத்தை நிறைவேற்றுவதற்காக உன்னைத் தெரியாமல் விஷம் வைத்துக்கொன்று விட்டா

லும் விடுவேன் !—(மெதுவாய்) ஐயோ ! இக்கொடியன் கையில் நீயுமகப்படும்படி நேர்ந்ததே ! இவையெல்லாம் பார்த்து யானும் சகித்திருக்கின்றேனே ! (ஒரு புறமாய்ச் சாய்ந்து பெருமூச்செறிதல்.)

விலா :—(ஆன்மகதமாய்). ஆ ஆ ! என்பர்த்தா இன்று வருகிறாரென்று கடிதத்தைக் கண்டதும் எவ்வளவு ஆநந்தத்தை யடைந்தேன் ! ஐயோ ! என் சந்தோஷமெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் ஒரு நிமிஷத்தில் மறைந்துவிட்டதே ! (பிரகாசமாய்) மாமா ! இப்படியு முலகிலுண்டோ ?

முஞ்ஜ :—குழந்தாய் ? அப்படியில்லாததனாற்றான் யான் இவ்வளவு பரிதவிக்கின்றேன் !

விலா :—இவையெல்லாம் வாஸ்தவமென்று தங்களுக்கு நன்றாய்த் தெரியுமா ?

முஞ்ஜ :—விலாஸவதி ! பொய்வார்த்தையையு மென்னிடத்திலுரைப்பார்களா ?

விலா :—(வெறுப்புடன்) மாமா ! இதற்கென்ன செய்யலாம்?

முஞ்ஜ:—இப்படிப்பட்ட புருஷனுடன் வாழ்வதைப்பார்க்கினும் இறப்பதே நலம் !—

விலா:—ஆ ஆ ! என் கணவரும் இவ்வளவு கடினசித்தராயிருப்பரென்று யான் கனவிலும் நினைத்ததில்லையே ! ஹா! தெய்வமே ! இவையெலாங்கனவோ? அவருமிப்படிச் செய்யத் துணிவரோ ?

* "கைகேசி மனந்திரியக்
கற்பித்த கூனியைப்போன்
மையார்கண் மடவாரோ
மைந்தரோ மண்ணுலகி

* ஒட்டக்கூத்த ராமாயணம்.

ஐயோவென் காதலனை
யாரோவிக் காரியத்தைச்

செய்வாயென் றிப்பொழுது
சிந்தையுறக் கற்பித்தார!" (உ௬)

ஐயோ! மங்கையர்கள் என்னைப் பழித்து நகைப்பார்களோ! பெண்பிறந்தார் யான் படுந்துயரம் யார் படுவர்?

*"அன்னேயோ! ஐயாவோ!
ஆருயிர்த் தோழியர்காள்!

தந்நேரி லாதவென்றித்
தொழுங்கணவர் தாஞ்செய்த

வின்னாத விச்செயலைக்
கேட்டபோ தென்படுவீர்?

என்னேரிவ் வுலகத்தில்
யானேவிந் நிலைபடுவேன்!" (உ௭)

(பூமியில் மூர்ச்சித்து வீழ்தல்.)

**முஞ்ஜ:**—(விலாஸவதியைத் தூக்கிச் சமாதானஞ் செய்துகொண்டு.) என் கண்மணீ! எழுந்திரு! எழுந்திரு!!

**விலா:**—(மெள்ள எழுந்துட்கார்ந்து) மாமா! தாங்கள் என்னை இக்கொடியவேசியின் கையிலிருந்து காப்பாற்றவேண்டும்!

**முஞ்ஜ:**—குழந்தாய்! என்ன இப்படி விசனப்படுகின்றாய்? நானுங்கூடியவரை தக்கவர்களைக்கொண்டு அவனுக்கு எவ்வளவோ நற்புத்தியுரைப்பித்தேன்! அஃதொன்றும் எதற்கும் திரும்புகிறவழியாயில்லை.—ஐயோ! இராஜகுலத்திற் பிறந்து இத்தாரா ராஜ்ஜியத்திற்கு மரசியாயிருக்கவேண்டிய உன்னை அப்பாதகிக்குக் கீழ்ப்படுத்த அவன் மனமுந்துணிந்ததே! ஆஆ! இவ

* ஒட்டக்கூத்தராமாயணம்.

ளைப்போன்ற அழகுள்ள ராஜஸ்திரீயை மணந்தும் எவர்தா மிப்படிச் செய்யத்துணிவர்? இவனுடைய இருதயம் இரும்போ! இவனது கருத்துக் கல்லோ!—எப்படியிருப்பினும் நமக்குமாத் திரம் அவன் மீதுள்ள அன்பு நீங்கவில்லையே!

விலா:—பெற்றவர்களைப்பார்க்கினும் வளர்த்தவர்களுக் கன்றோ பாசமதிகம்! ஆயினும், தாங்கள் எப்படியாவது என்னை இத்தருணங்காப்பாற்றவேண்டும்!

முஞ்ஜ:—குழந்தாய்! உங்களிருவருடைய நன்மையைத் தேடுவதன்றி வேறென்னவேண்டியதெனக்கு? இன்னுமவனை நல்வழியில் திருப்புவதற்கு யானொருயோசனை செய்திருக்கின் றேன்! அப்படிச் செய்வாயாகில் நீவிரிருவரும் சுகமாய்வாழ லாம்.

விலா:—மாமா! தாம் எங்கள்மீது வைத்திருக்கு மிவ்வளவற்ற அன்புக்கு யான் என்ன பிரதி செய்யப்போகின் றேன்!

முஞ்ஜ:—என் கண்மணீ! நீயும் போஜனும் சேர்ந்து சுகி த்து வாழ்வதைவிட வேறென்ன பிரதிவேண்டியது? அவனது மனத்தைத்திருப்பவொருயோசனையுந்தோன்றாமல் ஜகதாநந்த பாஸ்கரனென்னும் ஒரு சாதுவினிடத்தினின்றும் எவ்வளவோ பிரயாசைப்பட்டு ஒரு மூலிகை வரவழைத்திருக்கின்றேன்.— ஆயினும் அதனில் ஓர் அபாயமிருக்கின்றது! அதைப்பற்றியே யோசிக்கின்றேன்.

விலா:—அஃதென்னவோ?

முஞ்ஜ:—இம்மூலிகையைக் கொடுத்தாற் பயனில்லாமற் போகாது! ஆயினும் அவன் புத்தி மூன்று நாழிகைக்குள் நல் வழியில் திரும்பாவிட்டால் அவன் இறக்கவேண்டிவருமென்று சொல்லினர். ஆகலாற்றான், பின் சொன்னவாறு நடந்தால் என்ன செய்வதென்று யோசிக்கின்றேன்!

**விலா**:—ஹரி! ஹரி!! இன்னும் புருஷனு பிறந்து யான் இருக்கவேண்டுமா! வேண்டாம்! வேண்டாம்!! யான் அவரைவிட்டுப் பிழைத்திரேன்.

**முஞ்ஜ**:—(மெதுவாய்) ஈசா! என்னவிபரீதங்களைக் கூட்டி வைக்கின்றனை! இக்குழந்தையின் மனத்திற்கும் அக்கொடிய னது அகத்திற்கும் எவ்வளவு வித்தியாசம்! (உரத்து) குழந்தாய்! அதுபற்றியே எனக்கும் சிந்தனை. ஆயினும் தெய்வாநுசங் கற்பத்திற்கு விரோதமாய் நம்மால் நடக்கமுடியுமோ? விண் ணவரும் விதிப்பயனை வெல்லார்களாயின் நம்போன்ற மனிதர் களால் எவ்வாறதைத்தடுக்கமுடியும்? அவன் மரிக்கவேண்டு மென்றிருந்தால் நம்மாலதை விலக்கக்கூடுமோ? எதற்கும் ஸ்ரீமுகுந்தனுடைய கிருபையினால் அவன் இம்மூலிகையை யுட்கொள்ளிற் சீர்ப்படுவனென்றே நம்புகின்றேன்.

**விலா**:—மாமா! தாங்கள் வேறென்ன நினைக்கப்போகின் றீர்கள்? ஆயினும்—

**முஞ்ஜ**:—விலாஸவதீ! இன்னுமொரு சங்கதிகேட்டை யோ! யான் **போ**ஜனுக்கு இவ்விராஜ்ஜியத்தைச் சீக்கிரத்திலே யே ஒப்புவித்துவிட நிச்சயித்திருக்கின்றேன். அவனுக்கு, எப் படியிருந்தாலும் யுக்தவயது வந்துவிட்டது. இனி நான் இவ்வி ராஜ்ஜியத்தை வகித்து வந்தாற் பிரஜைகள் என்னை அக்கிரம மாய் ஆளுவதாக நினைப்பார்கள்!

**விலா**:—மாமா! உம்மையுமப்படி எண்ணுவார்களா?

**முஞ்ஜ**:—குழந்தாய்! எவரையுமுன்னைப்போலவே நினைக் கின்றாய்! நேரமாய்விட்டது! சங்கிரகமாய்ச் சொல்லுகின்றேன் கேள்! எப்படியிருப்பினும் **போ**ஜனுக்குச்சீக்கிரத்தில் இராஜ்ஜி யத்தை ஒப்புவிக்கவேண்டியதே நியாயம். நானுமப்படியே ஒப்புவிக்க நிச்சயித்திருக்கின்றேன். அது பற்றியே அவ்வேசி யும் உன்பதவியையடைந்து இராணியாகவேண்டுமென்று இவ்

வாறெல்லாம் முயலுகின்றாள் !—ஐயோ ! நீ இராஜகுலத்திற் பிறந்து இராஜகுலத்திற் புகுந்ததையுங்கூட அறியாமல் உன் கணவனைக்கொண்டே உன்னைத் தனக்குத் தாசியாக்க நினைத்திருக்கின்றாளே! இவ்வநீதத்திற்கென்ன செய்கிறது? அவள் மீது பழிசொல்வதிற் பயனென்னை ? போஜனுக்கு புத்தியில்லையே! பிறர் சொன்னாலுங்கேட்கிறதில்லை ! எதற்குமிம்மூலிகையைக் கொடுப்பதே நலமென்று தோன்றுகிறது.

விலா :—ஆயினும், அவர் இறந்துவிடில் என்செய்வது? புருஷனல்லவோ ஸ்திரீகளுக்கு கதி !

முஞ்ஜ :—குழந்தாய் ! உன்னிஷ்டம். யான் ஏதோபலவந்தம்செய்வதாக நினைக்கவேண்டாம். உனக்கு நன்மையுண்டாகுமென்றே சொன்னேன். இனி என்மீது பழியில்லை. சர்வ விதத்திலுமிழிவான அவ்வேசிக்குத் தாசியாயிருந்து ஊழியம் பண்ணினாலும் சம்மதமே ! இல்லை, முஞ்ஜனுக்கு மருமகளும் சூரஸேனமகாராஜருக்கு மகளுமாயிருக்க விரும்பினாற் கருணைக்கடவுளான ஸ்ரீகிருஷ்ணபகவானை மனத்தில் தியானஞ்செய்துகொண்டு இம்மூலிகையை உன்கணவனுக்குப்பாலிற்கலந்து கொடுத்துச் சுகமாகவாழ்ந்திரு ! (ஒரு பொட்டலத்தை நீட்டல்.)

விலா :—(ஆன்மகதமாய்) ஐயோ ! எந்தவழிபோயினும் சங்கடமாயிருக்கின்றதே ! இதற்கு யான் என்செய்வேன் ? (பொட்டலத்தைக்கையில்வாங்கிப் பிரித்துக்கொண்டே) இம்மூலிகையைக் கொடுப்போமா ? (மூலிகையைப்பார்த்து) ஐயோ ! காலகூடவிஷம்போலிருக்கின்றதே ! இதைக்கொடுத்து ஒருவேளை என் கொழுநன் இறந்துவிட்டால் என்செய்கிறது?— ஐயோ ! பாவியேன் ஏன் ஜனித்தேன்! ஏதேவீ ! ஒன்றுந்தோன்றவில்லையே! (பாடுதல்).

(எ) இராகம் - பதநுலகாம்போதி - தாளம் - ரூபகம்.

பல்லவி.

பெண்ணாய்ப்பிறப்பதே - பெருந்துயர்க்கிடந்தேவீ !
எண்ணம் நினதாயாதோ ?

அநுபல்லவி.

மண்ணிலிச் சன்மம்போல் - மற்றொன்றுண்டோ கேடு ?
புண்ணியவந்தர்கள் - புருஷர்களே திண்ணம் !— (பெ)

சரணங்கள்.

போதமிப்பெண் பிறவி - பொருந்தியானெடுத்தது!
தீதினுந் தீதிதுவே !
ஏதுயான் செய்வேன் ?-எங்குண்டிவ்விபரீதம் ?
யாதென்றுரைப்பேன்யான் ?-எப்படிச்சகிப்பேன் ? (பெ)

பாரினின் மங்கையை - பார்த்தா விவ்வாறு செய்தால்
யாருமே யென்செய்வார் ?
பாருமம்மா ! இந்தப் - பாவிமீதருட்கொண்டு
தீருமென்றன் குறையை - திருஸம்ரக்ஷகி ! (பெ)

முஞ்ஜ:—குழந்தாய் ! நீ சிந்தையுறுவதைப் பார்த்தால் எனக்கும் மனத்திற் சஞ்சலமுண்டாகின்றது ! என்னவோ ? உனக்கெப்படியுக்தமாய்த் தோன்றுகிறதோ அப்படி செய்! எனக்குநாழிகையாகின்து ! நான்போகவேண்டும்.

விலா :—(யோசித்து) சரி ! மாமா சொல்வதே தகுந்தயோசனை !—சி என்ன நினைக்கின்றேன் ? இக்கொடிய பாவத்தையும் யான் புரியவேண்டுமோ ! (முஞ்சனை நோக்கி) மாமா ! இதற்கு வேறு உபாயமொன்றுமில்லையோ ?

முஞ்ஜ :—யான் முன்னமே கூறினேனே ! இதையன்றி வேறு உபாயம் என்புத்திக்குத்தோற்றவில்லை. உன்னிஷ்டம் ! செய்தாற் செய் ! விட்டால் விடு !! யான் சொல்லவேண்டியதைச் சொன்னேன் ! நான் போய் வருகின்றேன் (எழுந்திருத்தல்.)

விலா :—மாமா ! தாங்களே அப்படிச் சொல்லிவிட்டாற் பேதையான யான் என் செய்வேன்? உம்முடைய தைரியத்தினன்றோ இதுவரை உயிர்தரித்தேன் ! அப்பாதுகிக்குப் பலி

கொடுப்பதற்காகவோ தாங்கள் என்னை அவருக்கு மணஞ் செய்வித்தீர்கள்? என்னை இக்கணம் கைவிடலாகாது! தங்களுக்கு எப்படி யுக்தமாய்த் தோன்றுகிறதோ அப்படியே செய்கின்றேன்! தம்மையன்றி எனக்கு வேறு கதியுமுண்டோ?

**முஞ்ஜ:**—அடிபேதாய்! நான் சொல்வதில் உனக்கு விசுவாசம் வரவில்லையே! "ஐம்பது மைந்தாண்டும் அறமாத மூன்றுநாள், இம்மாநிலன் முழுது மின்னரசு செய்வானல்" என்று அந்த யதீசுவரர் சொன்னவார்த்தை பொய்போமா? ஏன் வீணய்ச் சஞ்சலப்படுகின்றாய்? இம்மூலிகையைக் கொடுத்தால்உனக்குச்சுகமுண்டாகுமென்பதிற் சந்தேகமில்லை. போஜனுக்கும் மங்களமுண்டாகும். நீ யோசனை செய்யாமலிதனைக் கொடு!

**விலா:**—அப்படியாயின், இதை எப்படிக் கொடுக்கிறது?

**முஞ்ஜ:**—உன் கணவன் குடிப்பதற்காக வைத்திருக்கும் பாற்சொம்பிற் கலந்து விடு! பிறகு பாலைப்போலவே சுகமாய்க் குடித்துவிடலாம்.

**விலா:**—யாதேனுங்கெடுதி நேரிடில்—

**முஞ்ஜ:**—ஒரு கெடுதியும் நேரிடாது! நான் சொல்வதை நம்பு! (நான்கடி பரிக்கிரமித்து, ஆன்மகதமாய்) ஸ்திரீகளின் நெஞ்சம் இவ்வளவு தானா! இல்லாமலா, 'பெண்களின் நெஞ்சம் பேதைமையுடைத்து' என்று பெரியோர்கள் மொழிந்தார்கள்! நாம் சொல்லியவற்றை யெல்லாமிவள் வேதவாக்கியம்போற் கொள்ளுகின்றாள்! இவ்விஷத்தையும் நாம் சொன்னபடி யவனுக்குக் கொடுப்பாளென்பதிற் சந்தேகமில்லை! நல்லது! புத்திசாகரரே! நின் புத்தியின் வல்லமையைப் பார்ப்போம்! (நிஷ்கிரமித்தல்).

**விலா:**—(சற்றுநேரம் யோசித்துப் பெருமூச்செறிந்து) ஆம்! மாமா சொன்னதே சரி! ஆசையில்லாக் கணவனை யடைந்துதான் பயனென்னை? இம்மருந்தை என் கணவருக்குக் கொடுப்பத

னல் தீங்கென்ன? அவருக்கு என்மீது ஆசையுண்டாக்குவதற்காகவே மாமா இவ்வுபாயத்தைச் சொன்னார். அவ்வேசியோ இவ்வளவு லேசாய் என்னை ஜெயித்துவிடுவள்? ஆ ஆ! நான் பிறந்த குலமென்ன? நான் வளர்ந்த செல்வாக்கென்ன? யானோ இவ்வேசிக்குத் தாசியாயிருந்து ஊழியஞ்செய்வது? நானே க்ஷத்திரிய வம்சத்திற் பிறந்தவளாயிருப்பின் இவ்வுலகமழிந்தாலும் என் மாமா சொன்னவாறே செய்வேன்! ஆகையால் இம்மூலிகையை இப்பாலிற்கலந்து (அப்படியே செய்து) என் கொழுநனுக்குக் கொடுப்பதே சரி! மாமா சொன்னதுபோல், இதனால் அவருக்கு மரணம் விதித்திருக்குமாயின் அதை யாவரால் தடுக்க முடியும்?—(சற்று நிதானித்து) சீ! எவ்வளவு கொடியவளாயிருப்பினும் கட்டிய கணவனுக்குக் கொடியமருந்திடுவர்களோ மாதர்கள்? சீ! என்ன கொடுந்தொழிலைச் செய்யத்துணிந்தேன்! (கையிலிருந்த பாற்சொம்பை அங்ஙனே ஒருபுறம்வைத்துவிட்டு) இதனால் எனக்கு எவ்வித கஷ்டம் நேரிடினும் யானெப்பொழுது மித்தகைய காரியத்தைச் செய்யப்புகேன். (செவிகொடுத்து, பரபரப்புடன்) காலோசை ஏதோ கேட்கின்றதே! (நோக்கி) என் பர்த்தா தான் வருகின்றார்! ஐயோ இவருடன் பேசுவதுதான் எப்படி? எதற்கும் இக்கட்டிலின்மீது படுத்துறங்குவதுபோலிருப்போம்! அதற்குமேல் என்ன நடக்கின்றதோ பார்த்துக்கொள்ளலாம்! (வேகமாய்ப்பரிக்கிரமித்துக் கட்டிலின்மீதுபடுத்துநித்திரைசெய்பவள்போல் நடித்தல்).

(பிரவேசித்து).

**போஜன்:**—(ஆன்மகதமாய்) ஆ ஆ! இன்றையதினங்காலையில் நம்உயிர் தப்பியதே ஆச்சரியம்! நகரைச்சுற்றிவரும்போது அப்பாதகன் என் சிற்றப்பன் வேலையாட்களைக்கொண்டே எனக்கு எவ்வளவு அவமானத்தைச் செய்வித்தனன்!

(அ). இராகம் - தோடி: தாளம் ஆதிதாளம்.

பல்லவி.

ஏதுயான்செய்வேன் - எங்குண்டிவ்வநியாயம்?
யாரெதன் றுரைப்பேன்யான்-எப்படிப்பொறுப்பேன்?

அநுபல்லவி.

போதும்போதுமிச்சன்மம் - புவியில்நானெடுத்தது
வாதுசெய்கின்றானே - வஞ்சகச்சிற்றப்பன்! (எது.)

சரணங்கள்.

உடுக்குமுத்தரியமே - உரகமாய்க் கடித்தாற்போல்
முடிக்கு மகுடஞ்சூட்டி - முடிக்காமல் மோசஞ்செய்தான்!
கொடும்பாவி போலென்னைக் - கொலைபாதகரைக்கொண்டு
அடிக்கவுஞ் செய்வித்தான்-அவமானம் புரிவித்தான்! (எது.)

மாநுடர்நினைப்பதை - மாற்றுந்தெய்வமென்றாற்போல்
யான் செய்தீவினைதானோ-யாதுமறிகிலேனே!
சேனைகள் புகழுமென் - செல்வத்தந்தையராண்ட
மானிலனுள்வது - வருத்திடேனென்றோ? (எது.)

ஐயோ! இவனோ இப்படி என்றைட்டைத் துராக்கிரமமாய் கைப் பற்றினன்! அக்கிழவரோ எனது யௌவனநுபவங்களுக் கெல்லாம் தடையாய் வாய்த்தனர்! எப்படியாயினும் இவ்விரு வரிடத்தினின்றும் நாம் சுவாதீனம் பெறல்வேண்டும்! (மாடத்தின் மீது சென்று) ஆ ஆ! இஃதென்ன இங்கு ஒருவரையுங்காணோ மே! நாம் எழுதியனுப்பிய கடிதம் சேர்ந்ததோ இல்லையோ? அவள் தோழி தரங்கவதியினிடங் கொடுத்தனுப்பினேனே! அவள் கொடுத்துத்தானிருப்பள்! விலாஸவதியின் எங்கே சென்றிருப்பள்? யான் எண்ணிவருங் காரியங்களெல்லாமிப் படியே வீணாய்ப்போகின்றனவே! (நான்கு பக்கங்களிலும் நோக்கி) ஆ ஆ! இஃதென்ன? அம்மூலையில் தேஜோமயமாய் ஒன்று விளங்குகின்றது!

ப்ரத்நமா மொளிவீசு ரத்நமோ வறிகிலேன்
ப்ரபைபோல் விளங்குமிப் பவ்ய வடிவம்!

துங்கமா மேருமலைத் தங்கமோ வறிகிலேன்
சோதியா யெங்கணுந் தோற்று முருவம்!

வீணைகொண்டின்பமுறு வாணியோ வறிகிலேன்
மின்னலைப் பழிக்குமிவ் விந்தைவடிவம்!
மங்கையோ மதநனது நங்கையோ வறிகிலேன்
வலியவந் தெனையாள வந்த வடிவம்! (உஅ)

(அருகிற் சென்று உற்றுநோக்கிச் சந்தோஷத்துடன்) ஆ ஆ! நம்முயிர்க் காதலி விலாஸவதியே இதோ மஞ்சத்தின்மீது சயனித்திருப்பதுபோற் காணப்படுகின்றது!

வண்டினங் கருங்கூந்தலோ? மதன்
வாட்டுவில்லிவள் புருவமோ?
கண்டமே யருஞ்சங்கமோ? முகம்
காந்திசந்திர பிம்பமோ?
கண்டதுங் கவலைத்தொலைக்குமென்
காதலாள் தனியாயிதோ
அண்டர்பூபதிவனிதைபோலிவள்
ஆழ்ந்துநித்திரைபுரிகிறுள்! (உகூ)

பாவி! யானேன் சத்தியங்கூறிவந்தேன்? இவ்வளவழகமைந்த மாதரசைக்கூடுவோமென்பதில்லாமற் போயிற்றே! (சமீபஞ்சென்று) என் கண்மணீ! விலாஸவதீ!—(சற்று உற்றுநோக்கி) என்ன! எழுப்பியும் பேசாமலிருக்கின்றுள்! நான் இத்தனைநாளாய் வரவில்லை என்னும் வருத்தமோ? ஆகா! இஃதென்ன? என்று மறியாத ஒரு விகாரம் என்னைப் பரவசப்படுத்துகின்றதே! ஈதென்ன? சுகாநுபவமோ? துக்காநுபவமோ? அம்ருதரசமோ? ஆலகாலவிஷமோ? இவளைப் பார்க்கப்பார்க்க என்மனத்திற்கு ஒருவித ஸ்பூர்த்தியும் ஆர்த்தியுமுண்டாகின்றதே!, என் பிரியநாயகி! விலாஸவதீ! (அவளுக்கு முத்தம் கொடுக்கச்சென்று திடீரென்று பின்வாங்கி) சி சீ! என்ன காரி

யத்தைச் செய்யத்தொடங்கினேன்? இவளுடன் சேருகிற தில்லையென்று வாக்குக்கொடுத்துவிட்டுப் பின்வாங்குகிறதா? பிறகு நம்மைப் புத்திசாகரரென்ன நினைப்பர்? நம் நண்பர்கள் தாம் என்ன சொல்வார்கள்? இவ்வற்ப சுகத்துக்காசைப்பட்டோ நாம் பண்ணினபிரதிஞ்ஞையினின்றும் பிறழுவது?

(க) இராகம் - கல்யாணி: தாளம். ரூபகம்.

பல்லவி.

சத்திய நிகர்தாமமும் - சகத்தினிற்
சற்றுமே கண்டதுண்டோ?

அநுபல்லவி.

சத்தியமே வேதம்!- சத்தியமே தர்மம்!
சத்தியமே மோக்ஷம்!- சத்தியமே ப்ருஹ்மம்!—சத்திய.

சரணங்கள்.

பண்ணிய பிரதிஞ்ஞை - பழுதுபடாவண்ணம்
பண்புடைவேதியர் - பகரென வளர்க்கருங்
கண்ணினையே பெற்றுக் - கருத்துடன் கொடுக்கவே
விண்ணவருலகத்தை - விருதுடனடைந்தனர்!— சத்திய.

பாராளும் சிபிமன்னன் - பண்ணியதெண்ணியே
பூரித்துத்தேகத்தைப் - புகழ்புறவுக்கிட்டுச்
சீராரும் பதம்பெற்றுச் - சிறந்த பெருமையைத்
தாராளமாக்கொண்டு - சற்கதிபெற்றனன்!— சத்திய.

ஆகலின் நாம் நீர்க்குமிழிபோல் க்ஷணபங்குரமான இக்காம சுகத்துக்காசைப்படலாகாது. வேறே எங்கேயாகினும் செல் வோம்!—ஆயினும் இவ்விராத்திரியில் நாமெங்கே போவது? அரண்மனைக்குச் சென்றாற் பரிகாசத்திற்கிடமாகும். இன்றி ரவை, வெளியிற்சென்று நகரில் நடக்கும் விசேஷங்களையெல் லாம் பார்த்துக்கொண்டே கழித்துவிட்டு, காலையில் அரண் மனைக்குச் செல்வோம்! (கொஞ்சதூரம்பரிக்கிரமித்து) ஆ! என்ன இது?

என்று மில்லாத சாபமொன்றுண்டாகின்றது! (சற்றிப்பார்த்து) இப்பொற் செம்பில் என்ன வைத்திருக்கின்றது? நீரோ? பாலோ? (கலசத்தைக் கையிலெடுத்து) பால்தான்! நாம் குடிப்பதற்காகத் தான் விலாஸவதி வைத்திருப்பாள்! (குடிப்பதற்காகக்கலசத்தை முகத்தண்டை கொண்டுபோய் நோக்கி) ஆ ஆ! இஃதென்ன? இதி விருந்தபாலையெல்லாம் யாரோ குடித்துவிட்டு மிகுதியை வைத்திருப்பதுபோலிருக்கின்றது. (உற்று நோக்கி) இதென்ன பாலுங்கொஞ்சம் கறுத்திருக்கின்றது? (பக்கத்தில் ஒரு பூனையைக்கண்டு) ஐயோ! இப்பூனையேன் சுழலிடுகின்றது? இதன் வாயில் ஏடு படிந்திருப்பானேன்? இப்பாலைத்தான் அருந்தியதோ? ஓஹ! என்னவோ அவஸ்தைப்படுகின்றதே! என்ன? இருந்தாற்போலிருந்து கீழே விழ்ந்துவிட்டதே! (பூனையைத்தொட்டு) அந்தோ! இறந்தே போய்விட்டது! இப்பாலில் என்னவோ மோசமிருக்கவேண்டும்! இங்கிருப்பதே நமக்கு அபாயம். நாம் சீக்கிரம் வெளியிற் செல்வதே நலம். (பாற்செம்பைக்கீழே வைத்துவிட்டு வேகமாய் நிஷ்கிரமித்தல்).

**விலா:**— (திடீரென்று கண் விழித்துக்கொண்டு, உட்கார்ந்து) ஆ ஆ! இஃதென்ன நிச்சப்தமாயிருக்கின்றது? இப்பொழுது தான் என் பிராணநாதருடைய இனிய சொற்கள் காதில் அம்ருத தாரைபோல் விழுந்தனவே! அவர் இங்கே வந்தனரன்றோ? (நோக்கி) இஃதென்ன விந்தையாயிருக்கின்றது! ஒருவரையு மிங்குக் காண்கிலேனே! ஆ ஆ! என் கொழுநருடைய பிரிய வசனங்களைக்கேட்டுக் களிப்பினால் மெய்மறந்து யான் தூங்கிவிட்டேனோ? ஏ கண்காள்! நீங்கள் என் கணவனுரது மாசற்ற வடிவத்தைக்காண இன்னுங் கொடுத்துவைக்கவில்லையோ? ஒருவேளை என் பிராணநாதர் என்னைப் பரிக்ஷை செய்வதற்காக எங்கேயாகினுமிங்கு மறைந்து நிற்கின்றனரோ? (எழுந்து) என்னவோ வாக்குக் கொடுத்ததாக வுரைத்தனரே? அஃதெதைப்பற்றியோ? ஒருவேளை நம்முடைய மாமா அவர்கள் சொன்னவிஷயமோ? (யோசித்து) சீ! என்ன வீணெண்ணங்

தோன்றுகிறது. அவர் தனியே மொழிந்தவசனங்களே என்மீது அவருக்கு அன்பு வாஸ்தவமாய் இருக்கின்றதென்பதைக் குறிப்பிக்கின்றனவே! அவரது நிர்மலமான ஆகிருதியே அவரது ஆசயத்தின் தூய்மையைக் காட்டுகின்றதே! (நான்கடி பரிக்கிரமித்து, கால்தடுக்க கீழேநோக்கி) இஃதென்ன? ஒரு பூனை யிங்கே படுத்துறங்குகின்றது? (காலினற்றள்ளிக்கொண்டு) இதென்ன? எழுப்ப வெழுப்ப அசையவில்லை! இறந்துவிட்டதுபோலிருக்கின்றது! (உற்றுநோக்கி) இதனுடையவாய் ஏனோ நுரைத்திருக்கின்றது? ஒருவேளை என் கொழுநருக்குக் கொடுப்பதற்காக வைத்திருந்த பாலைக் குடித்துவிட்டுத் தான் இப்பூனை இறந்துவிட்டதோ? (மீண்டும் கீழேநோக்கி) ஐயோ! இங்கே வைத்திருந்த பாற்செம்பைக் காணேமே! (பயஸம்ப்ரமத்துடன் சுற்றிநோக்கி) ஆ ஆ! இஃதென்ன? இங்கே வைத்திருந்த பாற்செம்பு அவ்விடத்தில் வைத்திருக்கின்றதே? அங்கேயார் அதை வைத்திருப்பர்? ஒருவேளை அதில் வைத்திருந்த பாலை என் கணவனார் அருந்தியிருப்பரோ? (பரபரப்புடன் பரிக்கிரமித்துப் பாற்செம்பைக் கையிலெடுத்து நோக்கி) அந்தோ! இதிலிருந்த பால் ஒரு பொட்டாயினுங்காணேமே! என் பிராணநாதர் தாம் இதைக் குடித்திருக்கவேண்டும். (பரபரப்புடன் நான்கு பக்கங்களிலும் பிராந்திகொண்டவள்போலோடிக்கொண்டு) ஆ! பிராணநாதா! பிராணநாதா!! எங்குற்றீர்? இவ்வேழையைக் கண்ணெடுத்துப் பாரீரோ? (விஷாத ஸம்ப்ரமத்துடன்) அந்தோ! இங்கே எவ்விடத்திலும் என் கணவரைக்காணேமே! என்ன நேரிடுமோ அறிகிலேனே! என் பிராணநாதர் பிழைத்திருப்பரா? (வெறுப்புடன்) ஐயோ! எவ்வளவு கடின சித்தையானேன்! அவர் தாமே வருவதாக முன்னரே சொல்லியனுப்பியும் அவரை யான் மதித்திலேனே! ஐயோ! என்றும் வாராதகொழுநன் வந்தால் ஆவலுடன் எழுந்துவந்தெதிர்கொண்டு உபசரிக்காமல் பாசாங்கு நித்திரைபூண்டு பேசாமலிருப்பாரோ பெருந்தன்மையுள்ள வநிதையரும்? ஒருவேளை இவ்வவமானம் பொறுக்க

முடியாமற்றான் போய்விட்டனரோ என்கணவர்?—அன்றேல் இவ்வளவு சீக்கிரமாய் அவர் வெளியிற் செல்வதற்குக் காரண மென்ன ? (பாற்செம்பை நோக்கி) ஆ ஆ ! இதனை நோக்கும் பொழுதே மயக்கம் வருகின்றதே ! இதனையுட்கொண்டே யிருந்தால் என் பிராணநாதர் எக்கதியாவர்? ஐயோ இத னைப்பார்க்கும்பொழுதே என்னுள்ளம் நடுநடுங்குகின்றதே ! என் அன்பனையும் யான் இனி உயிருடன் காண்பேனோ ? அந்தோ ! இந்நடு ராத்திரியில் வேதனைபொறுக்கமாட்டாமல் வெளியிற்சென்று எங்கே தவிக்கின்றனரோ என் பிராண நாதர் ? ஆ ஆ ! எவ்வித கொடுஞ் செயலைப்புரியலானேன் ! பாவியேன் மனத்திற்கு ஒன்றுந் தோன்றவில்லையே ! ஏ பரமேசுவரி ! ஏ கருணைசாகரி! யான் செய்தவிப்பெரும் பிழை யைப் பொறுத்து என் கொழுநனை நீதான் இத்தருணம் காப் பாற்றவேண்டும்.

உனதுபெய ரொருதரஞ் சொன்னபேர் யமராஜன்
ஊரிலொரு நிமிஷமுமிரார் !
நினதுதிரு வடிவையொரு போதுகண் டவர்கள்பின்
நெடும்பவச் சலதிகாணார் !
கனமான தயையுடன் கவலைதனை நீக்கியென்
கணவனைக் காத்தருளுவாய் !
ஸனகாதி முனிவிருந்த சமராரிநாயகி !
ஸாதுஜந ஸம்ரக்ஷகி ! (௩௦)

ஏ தேவி ! உன்னையன்றியுமெனக்கு வேறுகதியுண்டோ? இப் பாவியேன்மீது கருணைகூர்ந்து அபயந்தந்து என்றன் கணவ னைப்பாதுகாப்பது நின்பாரம் ? (தண்டகம்.)

ஜய! ஜய !! ஜய !!! ஸர்வலோகேச்வரி !
ஸர்வகுஹ்யேச்வரி ! ஸர்வதேவேச்வரி !
ஸர்வமந்த்ரேச்வரி ! ஸர்வதந்த்ரேச்வரி !

ஸர்வயந்த்ரேச்வரீ ! சர்வஹ்ருத்யேச்வரீ !
கௌரீ ! வாகீச்வரீ ! பாஸ்வரீ ! ஸுந்தரீ !
சங்கரீ ! ஸ்ரீகரீ !!

அயனெழுதிய தாயினும் நின்க்ருபா
லேசமுண்டாகுமேல்வ்ருத்திகொண்டோங்குமே
யாவியென்றென்றுமே! புத்ரபௌத்ராதிஸம்
பத்துமுண்டாகுமே! பக்தரைநித்தமும்
பாதுகாத்தாட்கொளும் பாவநாதீதமே !
ப்ரும்மமே! தர்மமே !!

நயமுடனருளுடைகங் காட்டிமாங்
கல்யபிக்ஷைகொடுத் தென்றனை தேவி! நீ
நாதனோடின்பமாய்க் கூடியிப்பூமியிற்
பூண்டசெங்கோலுடன் வாழவேநற்றுணை
செய்குவாய் யாந்தொழும் காலகாலன் புகழ்ப்
பாரியாய் ! ஆரியாய்!!

பயசயபவ பந்தமெல் லாமுமே
நின்க்ருபாத்ருஷ்டியாற் பானுமுன்மாசுபோற்
பற்றறப்போக்கியிப் பாவியேனுங்கவென்
நாதனுந்தீர்க்கமா மாயுளோடுய்யவே
தேவி ! சர்வாணி ! தாக்ஷாயணீ ! பாஹிமாம் !
பாஹிமாம் ! பாஹிமாம் !! (௩௧)

(பிரவேசித்து.)

**மதநமாலிநி:**—(ஆத்மகதமாய்) இவ்விடத்திலென்ன நடக்கின்றதோ அவையெல்லாமறிந்து அப்போதைக்கப்போது தமக்குத் தெரிவிக்கும்படி மஹாராஜா அவர்கள் எனக்குக் கட்டளையிட்டிருக்கின்றார்! போஜ குமாரனும் இப்பொழுதுதான் இவ்விடத்தினின்றும் பைத்தியம் பிடித்தவன்போல் விரைந்து செல்கின்றான் ! இங்கு நம் விலாஸவதியின் அந்தப்புரத்திற்கு

வந்துதானிருக்கவேண்டும் ! என்ன செய்தியோ விசாரிப்போம். (அருகிற்சென்று) ஏனோ விலாஸவதி வருத்தத்தையடைந்தவள்போலிருக்கின்றாள் ! ஏதோ விசேஷம் நடந்து தானிருக்க வேண்டும் ! (பிரகாசமாய்) அம்மணீ ! நமஸ்காரம் !

விலா:—ஓ ஓ ! தரங்கவதியா ? தரங்கவதி ! என் பர்த்தாவைப் பார்த்தாயோ ?

மதந:—அம்மணீ ! நான்தான் மதநமாலிநி ! என்ன விசேஷம் அம்மணீ ! (நோக்கி) ஆ ! இதென்ன தங்கள் தேகம் இப்படி நடுங்குகின்றது !

விலா:—மதநமாலிநீ ! என் பர்த்தாவை எங்கேயாகினும் இப்பொழுது கண்டாயோ ?

மதந:—என்ன அம்மணீ ! இராஜகுமாரரா ? அவர்வந்து தம்முடன் வார்த்தை சொல்லவில்லையோ ?

விலா:—ஐயோ என் தௌர்ப்பாக்கியத்தை யான் என்ன சொல்லப்போகின்றேன் ! நான் செய்த காரியத்தை நினைத்துக் கொண்டால் எனக்கே பயமாயிருக்கின்றது !

மதந:—என்ன அம்மணீ ? என்ன அம்மணீ ?

விலா:—ஐயோ ! சொல்வதற்குக்கூட நாவெழும்பவில்லையே !

மதந:—அப்படிப்பட்ட சங்கதியாதிருக்கக்கூடும் அம்மணீ?

விலா:—(கண்ணீர்சொரிய) என் பர்த்தாவுக்கு நானே ம்ருத்யுவானேனடி !

மதந:—என்ன அம்மணீ ! தாங்கள் சொல்வது ஒன்றும் புரியவில்லையே ! இப்பொழுது தான் ஒரு நிமிஷத்திற்கு முன் தங்கள் கணவனை நான் பார்த்தேனே! அவருக்கென்ன கேடு!

இல்லாத சஹபாடிகளையெல்லாங் கூட்டிக்கொண்டு இராத்திரி முழுதும் வேசிகள் வீட்டில் திரிவது தானே அவர்வேலை!

**விலா:**—அடி பேதாய்! அவர் ஒருபொழுதுமப்படிப்பட்டவரல்லர்! நான் செய்ததையறிந்தால் நீயே பயப்படுவாய்!

**மதந:**—(குதூஹலமுள்ளவள்போல் நடித்து) அஃதென்னவோ?

**விலா:**—இப்பாற் செம்பைப் பார்த்தாயோ?

**மதந:**—(நோக்கி) என்ன அம்மணீ! ஒன்று மில்லையே! ஏதோ ஒரு மூலிகை போட்டிருந்ததுபோற் காணப்படுகிறது!

**விலா:**—மூலிகையா! முழுமோசம்போனேனடி! அதோ பார் அப்பூனையை!

**மதந:**—(நோக்கி) என்ன இறந்துபோய்விட்டது போலிருக்கின்றது!

**விலா:**—இதிலிருந்த பாலைக்குடித்துத் தானடியிறந்துவிட்டது!

**மதந:**—அதற்கென்ன இப்பொழுது?

**விலா:**—இவ்விஷப்பாலைப் புத்திமயங்கி என் கணவரருந்தும்படி வைத்தேனடி! அவரை இனியான் உயிருடன் பார்ப்பேனு?

**மதந:**—(பாற் செம்பைக் கையில்வாங்கி நோக்கி) என்ன பேதைமைத்தனம் அம்மணீ! எல்லாரையும் உங்களைப்போலவே சுத்தமென்று நினைக்கின்றீர்களே! அவராவது இப்பாலைக் குடிக்கிறதாவது! அப்பூனை என் இறந்துவிட்டது தெரியுமா?

**விலா:**—வேறென்ன? இப்பாலையருந்தித்தான் இறந்திருக்கவேண்டும்! அதனது வாயில் எடும் நுரையும்படிந்திருக்கின்றதைப் பார்க்கவில்லையோ?

மதந:—ஆம்! அதெப்படி நேர்ந்தது தெரியுமா?

விலா:—எப்படி யென்று சொல்வேன்?

மதந:—உன் கணவர் பெருஞ்சூதுள்ளவரானதனால் உன்னைச்சோதிப்பதற்காக இப்பாலை யப்பூனைக்குவைத்துப் பரீக்ஷை பார்த்திருக்கவேண்டும்.

விலா:—ஐயோ! என் கொழுநரும் அப்படிச்செய்வரோ?

மதந:—அம்மா அவரது கபடம் உங்களுக்கென்ன தெரியும். அவர் சொல்வதெல்லாம் பொய்! அவர் இப்பொழுது அவ்வேசிக்கு வாக்குக்கொடுத்தவிஷயம்தெரியுமா?

விலா:—ஆமாமடி! அவர் இங்குவந்தபோழுது ஏதோ வாக்குக்கொடுத்ததாகச் சொன்னார்!

மதந:—அம்மம்ம! அவரது செயலை என்ன கண்டீர்கள்? சூதும் வாதுங் குடிகொண்டிருக்கின்றனவன்றோ அவரிடத்தில்! (பாடுதல்)

(௬௦) இராகம் - ஆரபி - தாளம் - ஆதி.

பல்லவி.

எவருக்குத்தான் தெரியும் - அவர் வன்மை!
குவலயத்திலுமினி - யுளதோ கொடுமை!

அநுபல்லவி.

பேதை நீ மணந்ததே - பெருங்கொடுந்தொல்லை
பாதகரவரது - பாழ்மனங்கல்லே! (எ)

சரணம்.

யோசித்திடிலவர் - பேசிய சபதங்கள்
காசைப்பறிக்கும்பொதுக் - காரிகை செயலே!
மாசிலாதவுன்னை - மாயவார்த்தைகள் சொல்லி
வேசிக்கடிமையாக்கி - வீழ்த்திடப்பார்த்தாரே! (எ)

விலா:—(சினந்து) துடுக்காய்ப் பேசுவதே உனக்கு எப்பொழுதும் ஸகஜமாயிருக்கின்றது! அவரது மனத்தை யான

றிவேன்! அவருக்கு என்னிடத்தில் வாஸ்தவமான அன்பு இருக்கின்றதென்பதிற் சந்தேகமில்லை! மேலும் அவர் எனக்கு உறவினரன்றோ?

மதந:—ஆமாம்! காரியமாகிறவரைக்கும் உறவினர்தாம்! ஆ ஆ! இப்படிப்பட்ட பாதகர்களையும் உறவினரென்று மெய்ச்சுகின்றீரே! ஆஹா! அவரது வஞ்சனையே வஞ்சனை!

(கக) இராகம் - ஆநந்தபைரவி - தாளம் - ரூபகம்.

பல்லவி.

ஓகோ! மைந்தனை - யுறவினரெனலேனோ!
போகார்த்தமே யாவர் - பூவையர் புருடற்கு!

அநுபல்லவி.

ஏகச்சத்திரத்தின் கீழ் - இருந்தாளத்தக்கவரும்
காகத்தைப்போன்ற வேசி - கையில் தவிப்பதேனோ? (ஓ)

சரணம்.

இணங்கி யிறுமாப்புள்ள - இடும்பர்கள் பேச்சுக்கு
வணங்கியடிபணிந்து - வருந்தியழைக்கின்ற
மணந்தமனையாட்டி - மனையிற்றவிக்கவே
றணங்கையடைந்தவர் - அழிந்துபோவதேனோ! (ஓ)

விலா:—அடி மதநமாலினீ! எல்லாப் புருஷர்களும் உனக்குச் சமானந்தான்! கர்ப்பூரவாசனை கழுதைக்கென்ன தெரியும்? நான் செய்த காரியத்தை நினைக்க நினைக்க என் மனம் புண்ணாய்த் தவிக்கின்றதே. ஐயோ! என் கொழுநன் உயிருடனிருப்பரா?

மதந:—(சிரித்து) ஐயோ! அம்மணீ! நானென்ன சொல்வேன்! உங்கள் வீண்கவலையை நினைத்துக்கொண்டால் எனக்குச் சிரிப்புவருகின்றது! அப்படியே விஷமாயிருப்பினும், அதையவர் அருந்தியிருந்தால் அவரால் வெளியிற் செல்லவுங்

கூடுமோ? இப்பூனையின் கதி அவருக்குமுடனே நேர்ந்திருக்குமன்றோ?

விலா:—ஒருவேளை இப்பாலைக் குடித்துவிட்டுத்தான் மயக்கங்கொண்டு வெளியிற் சென்றிருக்கலாகாதா?

மதந:—அவர் இவ்வளவு சீக்கிரமாய்ப் போனதற்குக் காரணம் தெரிந்ததா? இதிற் போட்டிருக்கும் மூலிகையைக் காட்டியுன்மீது பழிபோடுவதற்காகவே புத்திசாகரர் முதலியோரை யழைத்துவரச்சென்றிருக்கிறார். அதுபற்றிதான் அவர் சஹபாடிகளுடன் கூடிக்கோலாகலத்துடன் பேசிக்கொண்டிருந்தார்! நீ இப்பொழுதிங்கிருப்பதே தகுதியன்று!

விலா:—(ஆன்மகதமாய்) அப்படியுமிருக்குமோ? மதநமாலினி சொல்வதும் நியாயமாகத் தானிருக்கின்றது.

மதந:—அம்மணீ! நாமிப்பொழுதே மஹாராஜா அவர்களிடஞ் செல்வோம் வாருங்கள்! அவர்தாம் இச்சமயத்தில் தக்க யோசனை சொல்வார்!

விலா:—ஆம்! அப்படியே செய்வோம்! (இருவரும் கொஞ்சதூரம் பரிக்கிரமித்தல்)

மதந:—(திரும்பி நோக்கி) அம்மம்ம! இப்படியும் பேதைமை கொண்டிருக்கலாமோ? அப்பாற்செம்பை அங்கேயே வைத்து விட்டீர்களே! அஃதங்கிருந்தாற் பிரமாதம் நேரிடுமே!

விலா:—ஆயின், அதையெடுத்துக்கொள்! நம் மாமாவிடம் நேரே செல்வோம்.

மதந:—இதைமாத்திரமன்று! இப்பூனையையும் தூர எறியவேண்டும். (பரிக்கிரமித்துப் பாற்செம்பை ஒரு கையிலும் பூனையை மற்றொருகையிலுமெடுத்துக் கொள்ளல்.)

விலா:—ஆம்! நீ சொல்வது வாஸ்தவமே! அதையுந் தான் எடுத்துச் செல்லவேண்டும். (இருவரும் நிஷ்கிரமித்தல்)



# மூன்றாங் களம்.

---

### இடம்.—தாரைநகர்: ஒரு வீதி.

**போஜன்** *சிந்தித்துக்கொண்டே பிரவேசித்தல்.*

**போஜன்** :— (ஆத்மகதமாய்) ஆ! ஆ! என்ன மோசம்! என்ன மோசம்!! யான் வெளியிற் புறப்படுமுன் எண்ணியதென்ன? இப்பொழுதுண்டாகு மெண்ணமென்ன? இன்று காலையில் என் சிற்றப்பனுடைய சேவகர்களால் அவமானப்பட்டது போதாதா? ஐயோ! அப்பாவி விலாஸவதியினிடம் யான் ஏன்சென்றேன்? யான் முன்னரேவருவதாகச் சொல்லியனுப்பியும், அவள் என்னை ஒருபொருட்டாயெண்ணினளா? மணந்த மனைவியே யிப்படி யவமதிக்கும்போது மற்றவர்கள் செய்வது என்ன ஆச்சரியம்?—இதுவும் நமக்கு நற்காலமென்றே கொள்ளல்வேண்டும்! ஆ! ஆ! அப்பாலைக் குடித்திருந்தால் நமக்கு மப்பூனையின் கதிதானே நேரிட்டிருக்கும்! (யோசித்து) விலாஸவதியே இவ்வளவு துணிந்து நமக்கு விஷம் வைத்திருப்பளா? ஒருவேளை இதுவும் நம் சிற்றப்பனுடைய போதனையாற்றான் இருக்குமோ?—ஆம்! மற்றவர் யார் அவளிடத்திற் செல்லக்கூடும்? அன்றேல் நாம் சொல்லியனுப்பியும் பேசாமலிருப்பளா? ஏதோ யிதில்மோசம் இருக்கவேண்டும். நமது ஆசிரியர் சொன்னதுபோல் இவளும் நம் சிற்றப்பனுடைய போதனையில் அகப்பட்டிருப்பளோ? (ஆலோசித்துப் பெருமூச்செறிய) ஆம்! நமது நிலைமையை யோசித்திடில் யார்தாம் நம்மை மதிப்பர்? எவனுக்குப் பணமிருக்கின்றதோ அவன்தான் பெரியவன்! அவன்தான் பண்டிதன்! அவன்தான் புருஷன்!

*'குணமிருந் தாலுங் குலமிருந் தாலுங்
கொழுங்கலைஞர்

---

* தனிப்பாடற்றிரட்டு.

மணமிருந் தாலும் மதியிருந் தாலும்
வழுத்திடுவங்
கணமிருந் தாலும் பணமிலேல் யாருங்
கருதலரப்
பணமிருந் தாலவர்க் கெல்லாரு மஞ்சலி
பண்ணுவரே !' (௩௨)

ஆகலின் கையில் தனமு மதிகாரமு மெவனுக்கு இருக்கின்றதோ அவனுக்குத்தான் கௌரவமும். (பாடுதல்.)

(௧௨) இராகம் - மோஹனம் : தாளம் - ஆதி.

பல்லவி.

பணமுமதிகாரமும் - பாங்குடனில்லாதான்
பிணமெனலும் பொய்ப் - பேச்சோ ?

அநுபல்லவி

காசுங்கனமுமில்லேல் - காசினியிலெவனும்
மாசில்லாதிருந்தாலும் - தூசுமவன்பொருள் !— பண.

சரணம்.

தனமுடையோனை - தாங்குவர்யாவரும்
கனமுடையோருக்கே - கண்யமும் புண்யமும்
தனமில்லையேயாயின் - தாசனும்சொற்கேளான்
முனியாதாருங்கூட-முனிந்துகொள்ளுவரையோ !-பண.

அன்றியும், அவள் என்னிடத்தில் வாஸ்தவமான காதலுள்ளவளாயின், இவ்வண்ண மிருந்திராள்! (செவிகொடுத்து) யாவரோ கருணமாய்ப்பாடிக்கொண்டு இவ்வழியேவருகின்றார்கள் ! (நோக்கி) எவரோ ஓர் எளிய பிராமணர்போலிருக்கின்றார். சம்சாரத்தை அழைத்துக்கொண்டு எங்கேயோ போகின்றார்போலும் ! ஏனோ இவர்களது முகங்களெல்லாம் வாடியிருக்கின்றன! இவ்விரவில் இச்சிறுபிள்ளைகளை யெல்லாம்

அழைத்துக்கொண்டு எங்கே செல்கின்றனரோ? பாவம்! இவர்களுக்கும் என்ன சங்கடம் நேர்ந்ததோ! என்னசெய்தியோ ஒருபுறமாயிருந்து கேட்போம்! (ஒருபுறமாய் நிற்றல்).

(மேற்சொன்னபடி **கோவிந்த பண்டிதர்** என்னும் ஒரு பிராமணர் தன் பத்தினி **சுந்தரி**யுடன், **இராமகிருஷ்ணன், ஜாநகி, ஸ்ரீநிவாசன்** என்னும் சிறு பிள்ளைகளையழைத்துக்கொண்டு பிரவேசித்தல்).

**கோவிந்த பண்டிதர்:**—இதுகாறும் நாங்கள் தங்கியிருக்க இடமளித்த ஏ அடீரமே! நாங்கள் போய்வருகின்றோம்! இதுவரை எங்களைப் பாதுகாத்துவந்த ஏ கிருகதேவதைகாள்! நாங்கள் வேறு நாடுசெல்ல விடையளிப்பீர்! மாளவதேசத்தின்கண் மத்திய நாயகம்போல்விளங்கும் ஏ தாரைநகரே! யான் இனி எக்காலம் உன்னைக் காண்பேனே? ஏ ஆபத்பாந்தவா! அநாதரக்ஷகா! நீயே எங்களை வழியிற் காத்தருள வேண்டும்?

(கக) இராகம்-தனசி: தாளம் - சாப்பு.

பல்லவி.

ஈசா எம்மைக் காவாயோ - ஹேஜக
நீசா எம்மைக் காவாயோ!

அநுபல்லவி.

ஆசாபிசாசத்தை - அடக்கியாளும் வேந்தே!
தாசாநுதாசன்யான் - தவிப்பதுமழகோ?— ஈசா.

சரணங்கள்.

அறைமறையாகமம் - அக்கினிஹோத்திரம்
முறைவழுவாமல்யான்-முடித்ததன் பயனென்னே?— ஈசா.

வறுமையினுஞ்சிறுமை - மற்றுமுலகிலுண்டோ
அறிந்துன்னைத்துதிக்கவும்- ஆற்றலில்லையே யந்தோ!— ஈசா.

**சுந்தரி:**—இதோ! உங்களைத்தான்! இப்படி எத்தனை நாளாய் நாம் பட்டிணியாயிருக்கிறது! ஐயோ குழந்தைகளெல்லாம் பசி பொறுக்கமாட்டாமல் வாய்வறண்டு, கண்ணிருண்டு,

காதடைந்து, கைசோர்ந்து, மெய்தளர்ந்து, எலும்புகளெல்லாம் எண்ணும்படி துரும்புபோல் இளைத்துக்களைத்துக் குய்யோ முறையோவென்று அழுகிறதுகளே! வெறுமை யிப்படி அக்கினிஹோத்திரமும் ஔபாசனமும் பண்ணிக்கொண்டு லோகாபிராமமாய்ப் பாடிக்கொண்டிருந்தாற் சாப்பிடுவதற்குச் சாதங்கிடைக்குமோ? உடம்பு சோற்றாலெடுத்த சுவரென்று சொல்லுவார்களே! உங்களுக்குத் தெரியாததென்ன இருக்கிறது. தேன் ஒழுகுவதுபோல் முத்துமுத்தாய்க் கண்ணீர்சொரிய மழலைச்சொல்லைச்சொல்லி யழுகிற நம் சிறு குழந்தைகளுக்கு அன்னமளிப்பது உங்கள் கடமையன்றோ?

**இராமகிருஷ்ணன்:**—எங்கே! அப்பாபோறே? பசிபிராணம்போறதே! (முகத்தை கடுத்துக்கொண்டு தலையைச் சொரிதல்).

**ஜாநகி:**—அம்மா! தாகம் ஒட்டிக்கிறதே! ஆத்துக்கு வந்து கொஞ்சம் தூத்தமானுகொடேன்! (துணியையிழுத்தல்).

**ஸ்ரீநிவாசன்:**—அம்மா! பூவா! பாச்சி! பாச்சி! (மார்பில் போர்த்திருக்கும் வஸ்திரத்தைத் தள்ளல்).

**சுநீத:**—(கண்ணீர் சொரிந்து, மேலாடையைச் செம்மையாப் போர்த்துக் கொண்டு) நானென்னடாப்பா செய்வேன்! இருந்தா உங்களுக்கு வஞ்சனையாடா! உங்களப்பா கொண்டுவந்துபோட்டாத் தானே நான் உங்களுக்குப் போடுவேன்!

**இராம:**—அம்மா! நம்ப கச்சுவாத்திலே என்னமோ சிடை உருட்டிண்டாமேடி? அது எப்படியிருக்கும்?

**சுநீத.**—(ஆன்மகதமாய்) ஐயோ! இது தின்கிறபண்டமென்றால் அதைக் கொடுக்கச்சொல்லி அழுங்களே பசங்கள்! இவாளுக்கு நானென்ன சொல்வேன்? (பிரகாசமாய்) அப்பா! அது ஆத்திலே குண்டுகுண்டா யிருக்கும்! அதைப் பசங்களுக்கு விளையாடக் கொடுக்கிறது.

ஜாந.—அம்மா! நம்ம கால்வாங்கரை மணலிலே குண்டு குண்டா யிருக்குமே கூழாங்கல்லு அதுவா?

சுநீதி.—(ஆன்மகதமாய்) ஐயோ! இப்படியே இதுகளுக்கு தினந்தினம் போக்குச் சொல்லிவருகிறேனே! ஒரு பாழ்ந் தெய்வத்துக்கும் கண்ணில்லையே!

*'அற்றதலை போக வறுததலை நான் கினையும்
பற்றித் திருகிப் பறியேனோ?—வற்ற
மரமனையாட் கிந்த மக்களைவகுத்த
பிரமனையான் காணப் பெறின்!' (௩௩)

ஸ்ரீநி.—அம்மா! அப்பிச்சி! அப்பிச்சி!

இராம.—அம்மா! வயறெல்லாம் பசிக்கிறதே! என்ன வானு தின்றத்துக்காவது கொடேன்!

ஜாந.—அம்மா! கொஞ்சம் பழையதானு போடேன்!

(கச) இராகம் - முகாரி. தாளம் - ரூபகம்.

பல்லவி.

பசி பொறுப்பேனோ - அம்மா!
புசியாதிருப்பேனோ?

அநுபல்லவி.

போக்குக் காட்டுறாய்-பொழுதுதோறும்
நாக்கு வாட்டுதே - நடக்க நடக்க! (பசி)

சரணம்.

பழையதேனுந்தா - பசிதணிக்கக்
கழுநீரேனும்வார் - கலக்கிக் குடிக்க! (பசி)

கோவிந்த.—(இராமகிருஷ்ணனைக் கையிற் பிடித்து, ஜாநகியைத்தோளில் வைத்துச் சமாதானஞ் செய்துகொண்டு) என் செல்வர்களே! நீங்கள்

* ஔவையார்.

அழாதீர்கள்! இதோ செம்பில் வேண்டிய தீர்த்த மிருக்கின்றது, குடியுங்கள்! (செம்பிலிருக்கும் சலத்தை இருவருக்குங்கொடுத்தல்).

**இராம.**—அப்பா! இன்னம் பசிக்கிறதே! ஐயோரொம்பப் பசிக்கிறதே! எங்கேயாறு கொஞ்சம் சாதம் வாங்கிக்கொடேன்?

**கோவி.**—(அவனை மடியி லணைத்துக்கொண்டு) பையா! சற்றுப் பொறு! இதோ பக்கத்தூருக்குப்போய் வேண்டிய சாதம் வாங்கித்தருகிறேன்.

**சுந்த.**—அதுக்குள்ளே நம்முடைய பிராணனே போய்விடுமே! பசங்களின் பிராணன் என்னமா நிற்கும்?

**கோவிந்த.**—என்ன? நீகூட இப்படி விசனப்படுகின்றாய்! நாள்தோறும் பாகவதம் பகவத்கீதை முதலிய கதாச்ரவணம் செய்வதன் பயன் இதுதானோ? முன் ஜன்மத்தில் தானதர்மஞ் செய்திருந்தால், இஜ்ஜன்மத்தில் அதன் பயனை யனுபவிக்கலாம். ஜன்மாந்தரத்தில் அவரவர்கள் செய்த இருவித வினைகளுக்குந்தக்கபடியேபாக்கியசாலிகளாகவோ தரித்திரர்களாகவோ பிறக்கின்றார்கள்! சிந்தை நொந்து வருந்துவதனால் என்னபயன்? நம்மைப் படைத்த ப்ரும்மதேவன் தலையில் எப்படி எழுதியிருக்கின்றாரோ அப்படியேதான் முடியும்! அதை மாற்ற யாவராலாகும்?

**சுந்த.**—ஆம்! வெறுமை யிருந்தால் வினையென்ன செய்யும் விதி யென்ன செய்யும்? எங்கேயாகிலும் போய்க் கஷ்டப்பட்டாலல்லவோ பொருள் கிடைக்கும்! பேசாமல் ஆத்திலுட்கார்ந்து மூக்கைப்பிடித்துக்கொண்டிருந்தாற் பொருள் தானே வந்து முளைக்குமோ? உழுது விரை விரைத்தாலல்லவோ நிலம் பலனைத்தரும். யத்தனஞ் செய்யாமல் வெறுமையிருந்தால் தெய்வமே சாத்தை யள்ளி வாயில் ஊட்டுமோ?

கோவி.—அடி பேதாய்! அவனன்றி யோரணுவு மசையுமா? "தேந விநா த்ருணமபி ந சலதி" என்று நீ கேட்டதில்லையோ? நாம் அநுபவிக்கின்ற சுகதுக்கங்களெல்லாம் இம்மையில் நாம் செய்யும் இச்சிறு முயற்சியினாலென்று நீ சிறுதேனுங் கொள்ளவேண்டாம். அடி மூக்தே! மைந்தர்களை ரக்ஷிக்கப் பொருள்வேண்டுமென்கின்றாயே! வானத்தில் ஸஞ்சரிக்கும் பறவைகளும் காட்டில் திரியும் மிருகங்களும் தமக்கொரு ரக்ஷகனைத் தேடுகின்றனவோ? கல்லினுள்ளிருக்கும் சிறு தேரைக்கும் சருப்பையிற் கட்டுண்டு கிடக்கும் ஜீவனுக்கும் உணவு அளித்துக் காப்பவன் யார்? எல்லாம் கடவுளுடைய செயலன்றோ? அப்படி யிருக்க, நீ ஏன் இச்சிறுவர்களைக் குறித்து விசனப்படுகின்றாய்? கற்பித்தவன் காவாது கைவிடுவனோ? விடான்! விடான்!! ஆதலால் நாம் அக்கருணைக் கடவுளை நம்பி வேறே எங்கேயாகினும் போவோம் வா! நானுமென்ன, பிரயத்தனஞ் செய்யாமல் வீணாகவாகாலத்தைக் கழிக்கின்றேன்? அதிதித்வயமும் சாங்கோபாங்கமாய் வேதாத்யயனஞ்செய்திருக்கின்றேன்! ஆறு சாஸ்திரங்களையும் அணுமாத்திரமும் விடாமல் ஆராய்ச்சி செய்திருக்கின்றேன்! கல்வியின் அருமையை இப்பொழுது கவனிக்கிறவர் யார்? இப்பாவி முஞ்ஜன் இராஜ்ஜியாதிகாரம் அடைந்ததும் கற்றவர்களுடைய காலம் போய்விட்டது!

*'அட கெடுவாய்! பலதொழிலு மிருக்கக் கல்வி
யதிகமென்றே கற்றுவிட்டே னறிவில் லாமல்,
திடமுளமோ கனமாடக் கழைக்கூத் தாடச்
செப்படிவித் தைகளாடத் தெரிந்தே னில்லை!
தடகுசவே சையராகப் பிறந்தே னில்லை!
சனியான மறையைவிட்டுத் தைய லார்தம்
மிடமிருந்து தூதுசென்று பிழைத்தே னில்லை!
என்னசென்மமெடுத்துலகிலிரக்கின்றேனே!'(கூச)

* படிக்காசுத்தம்பிரான்.

ஐயோ! இக்கொடுங்கோல் மன்னனது அரசாட்சியில், உயிர்க்கொலை புரிந்து, உண்ணு முனைவில் மாறுபட்டஞ்செய்து, சிறிது மையமில்லாமல் நண்புடையாரிடத்து வஞ்சனைசெய்து, நல்லவர்களை நடுங்கும்படி யுதாசீனமாய்ப் பேசி, நன்னடத்தையுடையவர்களைத் தீயநடத்தை யுள்ளவர்களென்று சொல்லியும், அறிவில்லாத அற்பரை ஒழுக்கமுடையோரென்றுரைத்தும், தேவாலயத்திலுள்ள சொத்துக்களை மறைத்தும், தம்மாதர்களைப் பிறருக்குக் கொடுத்தும், இழிவான வேசியர்களை யுத்தமர்களுக் குறவுபடுத்தியும், கற்பிற் சிறந்த பிறர்மாதர்களோடு கலவி செய்யக் கருத்துக்கொண்டும் இருப்பவரான கயவர்களுக்கே இதுகாலம்! அவர்களுக்குத்தான் ஸகல உத்தியோகங்களும் பட்டங்களுங்கிடைக்கும்! கற்றவர்கள் தங்கள் சுவடிகளைக்கட்டிக்கொண்டு கதறவேண்டியதுதான்! தர்மப்பிரபு! அந்த சிந்துல மகாராஜன்ராடேகற்றவர்களது கௌரவமும் போய்விட்டது! அவர் இராஜ்யத்தைப் பரிபாலித்து வரும்பொழுது எந்த வர்ணத்திற் பிறந்தவரானாலுங் கற்றவர்களுக்குக் குறைவேயில்லை. ஒரு சங்கிராந்தி அமாவாசைதோறு மவர்கொடுக்குந் தட்சிணையே ஒவ்வொரு பிராமணருடைய வருஷாந்தர காலக்ஷேபத்திற்கும் போதுமானதாயிருந்தது!

* 'ஈபாத புல்ல ரிருந்தென்ன?
போயென்ன? எட்டிமரங்

காயா திருந்தென்ன? காய்த்துப்
பலனென்ன? கைவிரித்துப்

போயா சகமென் றுரைப்போர்க்குச்
செம்பொன் பிடிபிடியா

யோயாம லீபவன் சிந்துல
ராஜ னொருவனன்றே!' (௩௫)

* படிக்காசத்தம்பிரான்.

இப்பாவியின் அரசாட்சியிலோ, ஆள்மீறுவதே அதிகமாய்த் தோன்றுகிறது. ஒருகால் **போஜனாயினும்** பட்டத்திற்கு வந்தால் வித்வான்களுக்கு நல்லகாலம் பிறக்குமென்று எண்ணியிருந்தேன்! இன்று அந்த ஆசையும் நிராசையாய்விட்டது! இரண்டு வருஷங்களுக்கு முன்னமே இவ்விராஜ்ஜியத்தின் பட்டத்திற்கு வந்திருக்கவேண்டிய **போஜனுக்கே** நாசம் நேரிடும்போல் தோன்றுகின்றது. இன்று காலையில் அந்தப் பாவிசெய்த சூழ்ச்சியினின்றும் **போஜன்** தப்பிப்பிழைத்ததே தெய்வசங்கற்பம்! ஆதலால், இனி ஒருக்ஷணமும் இம்மகா பாபியினுடைய நாட்டில் நாமிருக்கத்தகாது!

* "தீயாரைக் காண்பதுவுந் தீதே! திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே!—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே! அவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது!" (௩௭)

**போஜ:**—(ஆன்மகதமாய்) ஆ ஆ! இவ்வாறு இவர்கள் கஷ்டப்படுவதைக் கண்ணாற்கண்டும் இவர்களது குறையைத் தீர்க்க முடியாதவனா யிருக்கின்றேனே! அப்படி உலகமெல்லாம் புகழ்ந்துகொள்ளப்பட்ட சிந்துலருக்கு நான் புத்திரனாய்ப்பிறந்ததன் பயனென்னே? இன்னுமிவர்களைப்போல் இருக்கவிடமில்லாமலும், உண்ணச் சோறில்லாமலும், உடுக்க உடையில்லாமலும் கலங்கித் தெருக்களில் திரிகின்ற ஏழைகள் எவ்வளவினரோ? இப்பிராமணோத்தமரைப்போல் உயர் குலத்திலுதித்து, ஈனத்தொழில் செய்யத்தெரியாமல், இரப்பதைவிட இழிவானது ஒன்றுமில்லையென்றெண்ணி, பிக்ஷை எடுக்கத் துணியாமலும், அரசர்களுடைய ரக்ஷணையில்லாமலும், வீட்டிற்குள்ளிருந்துகொண்டு, பசியினால் தாய் முகத்தைப் பிள்ளைகள் பார்க்க, புருஷன் முகத்தை மனைவிபார்க்க,

* ஔவையார்.

அவர்கள் முகத்தை யிவன்பார்க்க, இவர்கள் முகங்களையெல்லாம் பார்க்க ஒருவருமில்லாமல், ஆதரவற்று வருந்துங்குடிகள் எத்தனைகோடியோ? இம்மாது சிரோமணியைப்போல் தாம் புசிக்காமலே, அகப்பட்ட அன்னத்தையெல்லாம் தம் புருஷருக்கும்பிள்ளைகளுக்கும் படைத்துவிட்டுத், தாம் நித்தியோபவாசமாயிருக்கும் பதிவிரதைகள் எத்தனைபெயரோ? அந்தோ! இதென்ன பரிதாபம்! இந்த ஏழைகளும் ஈசனார் சிருஷ்டித்த ஜீவர்கள் தாமே! இவர்களுக்காகவும் மழை பெய்யவில்லையோ? அப்படியிருக்க, கோடாநுகோடி ஏழைகள் இப்படி வருந்துவதற்குக் காரணமென்ன?—இவர்களை யரசாளும் அரசர்களுடைய பேராசையும் பொறாமையுமேயன்றி இதற்குக்காரணம்வேறென்ன? இவர்கள் தின்றுபாழாய்ப்போகும் பொருள்களைப்பகிர்ந்து கொடுத்தாலே எண்ணிறந்த ஏழைகள் பிழைப்பார்களே!

(புக்மகம்)

புண்ணியவா னிவ்வுலகி லறத்தை நாடிப்
பொருட்டேடிச் சத்திரத்தைப் பொருந்த வைத்தே
யெண்ணிறந்த நாடுகளை யதனுக் காக்கி
யேழைகளுக்கன்னமிட வதனைக் கொண்டு
விண்ணவரும் விஞ்சையரும் புகழ்ந்து போற்ற
விருந்திட்டு வானதனில் விருப்பத் தோடு
கண்ணியமா யதனைப்பன் னாளுங் காக்கக்
கருதிக்கார் யஸ்தர்களை யமைக்கு மாறே: (௩எ)

பண்ணவனிவ் வுலகென்னும் சத்தி ரத்தைப்
பாங்குடனே செய்வித்துக் கருணை யாலே
மண்ணிலுள்ளோ ரெல்லோருந் தாம்பி ழைக்க
மருவியொரு வருக்கொருவர் நேய மாக
நண்ணியவோர் தருமத்தைப் பாது காக்க
நரபதியை நியமித்த முறையை யந்தோ!

என்னுத வரசர்களி னியற்கை தன்னை
யெனசொல்வேன்? தண்டனை தான்யா திவர்க்கோ?

சுநந்த:—(சற்றுநேரம் யோசித்துவிட்டு) அப்படியானால் நாம் எந்த ஊருக்குப் போகலாம்?

கோவி:—எந்த நாட்டில் நமது யோக்கியதை யறியப்படுமோ அந்த நாடே நமது காலக்ஷேபத்திற்குத் தகுந்தது!

போஜ:—(ஆன்மகதமாய்) நல்லது! இவர்களுடைய கஷ்டத்தை முற்றிலும் நீக்க இப்பொழுது முடியாமற்போனபோதிலும், நம்மாற்கூடிய உபகாரத்தை யிவர்களுக்குப் பண்ணுவோம்! நாமின்னாரென்று தெரிவிக்காமலே இம்முத்துமாலையையாயினும் இவர்களுக்குத் தந்து வழி யனுப்புவோம்! (அவர்கள் அருகிற் சென்று, பிரகாசமாய்) சுவாமி! நமஸ்காரம்! தாங்கள் இவ்வேளையில் எங்கே போகின்றீர்கள்? இவர்களெல்லோரும் மிகவும் களைப்படைந்திருக்கின்றனர்கள் போலிருக்கின்றனரே! இன்றிரவு இங்கேயேயிருந்து ஏதாயினும் ஆகாரஞ்செய்து கொண்டு, வேண்டுமாயிற் காலையிற் செல்லலாமே! போஜனத்திற்கு வேண்டுமாயின் தருகின்றேன்.

கோவி:—(சுகாந்திகமாய்) இவன் யாரோ இந்த ஊரிலொருவன் நல்ல மனமுள்ளவன்போல் தோன்றுகின்றான்! (பிரகாசமாய்) அப்பா! நாங்கள் ஜீவனார்த்தமாய் வேறு நாடு செல்கின்றோம்! பார்த்த நாழிகை ஆய்விடுகின்றது! இனித் தாமசிக்கலாகாது!

போஜ:—அப்படியாயின், இதைத் தாங்கள் எடுத்துக் கொண்டு செல்லுங்கள்! (முத்துமாலையைப் பிராமணர் கையிற் கொடுத்து) இதை விற்றுத் தாங்களை வழிச் செலவுக்கு வைத்துக்கொள்ளுங்கள்!

கோவி:—(வாங்கிக்கொண்டு, வெகு சந்தோஷத்துடன்) அப்பா! நீ தீர்க்காயுஷ்மானாய் ஸகலைசுவரியத்தையும் பெற்றுச் சக்கிரவர்த்தியாய் விளங்கவேண்டும். உன்னுடையதாத்ருத்வத்திற்குத்

தராதிபர்களும் நிகரல்லர்! (நோக்கி) நீ யாரோ அறியேன்! ஆயினும் உன் முகத்தில் ராஜதேஜஸ்ஸு ஜ்வலிக்கின்றது! உன்னைப்போன்றவர்கள் ராஜாவாயிருந்தால் என்னைப்போன்றவர்களுக்கென்னகுறை? இந்த சமயத்தில் ஈசுவரர்தாம் எங்களைக் காப்பாற்றுவதற்காக உன்னைக்கொணர்ந்துவிட்டனர்!

சுந்த:—அப்பா! நீ மஹாராஜாவாயிருந்து நீடூழிகாலம் வாழவேண்டும்!

போஜ:—அம்மணி! எல்லாந் தங்களாசிர்வாதத்தினாற் கிடைக்கும்!

கோவி:—அப்பா! நாங்கள் போய்வருகின்றோம்! உனக்கு அமோகமாய் மங்களமுண்டாகும்! (ஐந்தாறடி தூரம் பரிக்கிரமித்து ஆன்மகதமாய்) இம்மகாபுருஷன் யாரோ? இதுவும் ஈசுவரானுக்கிரஹமே!

ஹரியே! ஹரனே! சுரனே! பரனே!
அருவே! யுருவே! திருவே! தெருளே!
கிரிஜா ரமணா! கருணா பரணா!
அருணா டகனே! கருணை புரிவாய்! (௩௰)

(ஸம்ஸாரத்துடன் நிஷ்கிரமித்தல்)

போஜ:—ஆ ஆ! எந்நிலைக்கு நம் நாடுவந்துவிட்டது! சிஷ்டர்கள் நடுநடுங்கியோடவும், துஷ்டர்கள் தழைதழைத்தாடவும் வாய்த்ததே காலம்! அந்தோ! எத்தனைபெயர் இப்பிராமணோத்தமனைப்போல் அன்னமென்பது இன்னதென்றே தெரியாமல், நீரைக்குடித்து வயிற்றைநிரப்பிக் காலத்தைக் கழிக்கின்றார்களோ? இவர்களெல்லாம் இப்படி வருந்திக்கஷ்டப்படும்பொழுது நாம் மாத்திரம் சுகமாய் ஜீவித்திருப்பதிற் பயனென்னை? பரோபகாரமில்லாத தேகமிருந்தென்ன போயென்ன?

$ "கற்றவர் கடவுட் டானஞ்
சேர்ந்தவர் களைக ணில்லா
ரற்றவ ரந்த ணாள
ரன்றியு மவர்கள் போல்வார்க்
குற்றதோ ரிடுக்கண் வந்தா
லுதவுதற் குரித்தன் றாயிற்
பெற்றவிவ் வுடம்பு தன்னாற்
பெறும்பய னில்லை மன்னோ!" (௪0)

ஆகலின், இவ்விராஜ்ஜியத்தையடைந்து, ஒன்று இப்பிரஜைக ளைக்காப்பாற்றும் வழியைத்தேடவேண்டியது! அன்றேல் இந் நிஷ்ப்ரயோஜனமான உயிரைத்துறக்கவேண்டியது! ஜெயம டைந்தால் எத்தனையோ உயிர்களைக் காப்பாற்றலாம்! அன்றே ல் நம்முடைய ஜீவனொன்றுக்குத் தானே நஷ்டம்!

* "ஊருணி நடுவூர் நின்ற
வொண்பழுத் தருவும் போலப்
பேருறு முயற்சி தன்னாற்
பெருக்கிய பொருள்க ளெல்லாஞ்
சீருற யாவர் மாட்டுஞ்
செலுத்தியொப் புரவி னிற்றி
யாருமொப் புரவாற் கேடுண்
டாயினு மதுவு நன்றே!" (௪௧)

நல்லது! இவ்விராஜ்ஜியத்தைப்பெற நம்மாலான பிரயத்தனத் தைச் செய்வோம்! பரமேசுவரர் பரமதயாளுவானதனால் கிரு பைபுரிவாரென்பது நிச்சயம்! எதற்கும் நாம், நமது நகருக்கு அதிதெய்வதமான விநாயகர் கோயிலுக்குச்சென்று பிரணதார் த்திஹரரென்று யதார்த்தநாமத்தோடு விளங்கும் அம் முதற்

$ சூளாமணி. * பிள்ளையார் புராணம்.

கடவுளை வணங்கி, தியானஞ்செய்துவிட்டுப் பின் நடத்தவேண்டியதை யோசிப்போம் !

(நிஷ்கிரமித்தல்.)

# இரண்டாம் அங்கம்

## முற்றிற்று.





# மூன்றாம் அங்கம்.

## முதற் களம்.

---

இடம்.—தாரைநகருக்கருகில் ஒரு விநாயகர் கோயில்.

(பிக்ஷேச்வரன் என்னும் ஒருபிராமணன் நைவேத்தியங்கொண்டு வைக்க, சிவராமன், சந்திரசேகரன், கருணாகரன், பரமசிவன் முதலியோர் சுவாமி தர்சனஞ் செய்யவர, கைலாசநாதருக்கள் என்போர் பூஜைமணியை அசைத்துக்கொண்டு விநாயகர்சந்நிதிக்கதவைத்திறந்து பூர்வநீராசனஞ்செய்துகொண்டு பிரவேசித்தல்).

**கைலாச குருக்கள்**:—(பிக்ஷேச்வரர்கூடவேதமோத) "ஓம்! ஸோமோ வா ஏதஸ்ய ராஜ்யமாதத்தே, யோ ராஜா ஸன் ராஜ்யோ வா ஸோமேந யஜதே, தேவஸுவாமேதாநி ஹவீம்ஷி பவந்தி, ஏதா வந்தோ வைதேவாநாம் ஸவா:, தஏவா ஸ்மை ஸவான் ப்ரயச்சந்தி, தஏநம்புநஸ்ஸுவந்தே ராஜ்யாய தேவஸூ ராஜா பவதி." ஓம் ஸ்ரீமஹாகணாதிபதயேநம:, பூர்வ நீராஜநம் தர்சயாமி, நீராஜநாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி, (கற்பூர தீபாராதனை செய்துவிட்டுத் தட்டைவெளியிற்காட்டிக் கொட்டிவிட்டுப் புஷ்பங்களை எடுத்து அர்ச்சனைசெய்யவாரம்பித்தல்.) "ஓம் ஸுமுகாயநம:, ஏகதந்தாயநம:, கபிலாயநம:, கஜகர்ணிகாய

நம:, லம்போதராயநம:, விகடாயநம:, விக்நராஜாயநம:, தூமகேதவே நம:, கணாத்யக்ஷாய நம:, பாலசந்த்ராயநம:, கஜாநநாய நம:, வக்ரதுண்டாய நம:, சூர்ப்பகர்ணாய நம:, ஹேரம்பாய நம:, ஸ்கந்தபூர்வஜாய நம:, விக்நேச்வராய நம:'', ப்ரணதார்த்திஹரஸ்வாமிநே நம:, நாநாவிததிவ்ய பரிமளமந்த்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

**சிவராமன்:—**(அநேசமயத்தில்)

"ரஜோகுணபரம் விதிமரீசி பகுபி: க்ருத
சராசரகணம் ப்ரதமத:,
தமோகுணயுதம் சிவமமா நிக்ரு கைர்நிஹ
தலோக நிஹம் லயவிதௌ;
ஸத்வகுண மத்புத மநுப்ரப்ருதி பிர்க்ருத
ஸமஸ்த புவநம் ததநுவை,
நமாம்யகில லோக பிதரம் ஸகலகரம்விதி
சிவாச்யுதபதிம் கணபதிம்! (க)

(தீபாராதனை பண்ணத்தொடங்கியதும்) ஹர! ஹர! ஹர! ப்ரணதார்த்திஹர! ஸர்வாபராதாந் க்ஷமஸ்வ!

**கருணாகரன் :—**(அநேசமயத்தில்)

தங்கு தாவரமுஞ் சங்க மங்களையுந்
தமை யுடன்படைத் தருளின
தநுஜ யக்ஷகர நரர்கள் போற்றனுறும்
தந்தை யாமுதற் கடவுளைப்
பொங்கு பாற்கடலி னின்று தித்தமகள்
போற்ற வண்ட மனைத்தையும்
பொறுத்திகுக்ஷியினிற் பாது காத்தருளும்
புண்டரீக தளாக்ஷனை,

அங்கு மெங்குமொரு சச்சி தாக்ருதியு
மந்த காரியை யண்ணலை
ஆதி மத்யமுடி வேது மின்றியரு
ளாகி நின்ற துரியனை,
எங்கு முள்ளபல ஜாதி யர்க்குமுய
ரீச ரையிலகு ஜோதியை
யென்று மேயமது நாத னைத்தொழுது
மேத்தி யஞ்சலி செய்குவாம்! (உ)

(தீபாராதனை தொடங்கும்பொழுது) அர! அர! அர! விநாயக! நீயே சரணம்!

சந்திரசேகரன் :—(பிரதக்ஷணஞ் செய்துகொண்டே அதேசமயத்தில்)

பாலார்கத்யுதி கோடி கோடி நிகரம்
பாலேந்து சூடாத்மஜம்,
ஸ்ரீமத்கும்பஜ ஸத்குரும் பவஹரம்
ஸ்ரீதம் குமாராக்ரஜம்,
விக்நேசம் ஸ்ரீத பக்தரக்ஷணபரம்
வித்யேசமாசாபுஜம்,
ஸ்தனமித்வாம் கிரிஜாஸுதம் சுபகரம்
ஸம்ஸார ஸத்பேஷஜம். (ஙு)

(தீபாராதனை நடக்கும் பொழுது) மஹா கணபதே! ரக்ஷமாம்!

பரமசிவன் :—(பிரதக்ஷணஞ்செய்துகொண்டே அதேசமயத்தில்)

சித்தி விநாயக! சரணஞ் சரணம்!
செந்தாமரைமலர்ப் பாதா! சரணம்!
பக்த ஜநேஷ்டத! சரணஞ் சரணம்!
பார்வதி நந்தந! சரணஞ் சரணம்!
முத்தி யளிப்போய்! சரணஞ் சரணம்!
முருக சகோதர! சரணஞ் சரணம்!

புத்தியுஞ் சத்தியுந் தந்தருள்வோனே!
புநிதா! சரணஞ் சரணஞ் சரணம்! (ச)

(தீபாராதனை பண்ணும்பொழுது) அர! அர! அர! சித்திவிநாயக! எங்களைக் காத்தருளும்!

**கைலாச** :— (முன்போற் பிக்ஷேச்வரன் வேதமோத) "ராஜாதி ராஜாய ப்ரஸஹ்ய ஸாஹிநே, நமோ வயம் வைச்ரவணாய குர்மஹே, ஸமே காமான் காம காமாய மஹ்யம், காமேச்வரோ வைச்ரவணோ ததாது, குபேராய வைச்ரவணாய, மஹாராஜாய நம:" ஓம் ஸ்ரீ ப்ரணதார்த்திஹரஸ்வாமிநே நம: உத்தர நீராஜநம் தர்சயாமி, நீராஜநாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி! (கற்பூர ஆராத்தி செய்துவிட்டு வில்வதளங்களையும் விபூதியையும் தட்டில்வைத்து யாவருக்கு மளித்தல்).

(அதேசமயத்திற் **போஜன்** பிரவேசித்தல்).

**போஜன்**:—(ஆன்மகதமாய்) ஆ ஆ! நாம் வருவதற்குஞ் சுவாமிக்குக் கற்பூரதீபாராதனை நடப்பதற்குஞ் சரியாயிருக்கின்றது! இவ் விநாயகர் கிருபையினால் நமக்கொன்றுங் குறைவுவாராதென்றே நம்புகின்றேன்! ஆயினுமிச்சமயத்தில் இவர்களுக்கு நாமிங்கு வந்திருப்பது தெரிவது தகுதியன்று! இராத்திரி காலபூஜையும் முடிந்தபடியால் இவர்கள் சீக்கிரத்திலேயே வெளியிற் செல்லுவார்கள்! அதுவரை நாம் ஒரு பக்கமாய் மறைந்து நிற்போம். (போசன் ஒரு மூலையில் மறைந்துநிற்க, குருக்களும் மற்றவர்களும் பிரதக்ஷிண நமஸ்காராதிகளைச் செய்துவிட்டு சந்நிதிக்கதவை மூடிக்கொண்டு ஒருவர்பின் ஒருவராய் வெளியில்நிஷ்கிரமிக்க) யாவருஞ் சென்றனர்கள்! (முன்வந்து) இப்போது நாம் கதவைத்திறந்து ஏகாந்தமாய் சுவாமி தர்சனஞ்செய்வோம்! (சந்நிதிக்கதவைத்திறந்து) மகாகணபதியே! பிரணதார்த்திஹரா! உம்மையேசரணம் புகுந்தனன்! என்னை யெக்காலத்திலுங் காத்தருள்வீர்! (பாடுதல்)

(௧) இராகம் - நாட்டை: தாளம் - ஆதி.

பல்லவி.

கணபதியே சரணம்!—காவாயென்னைக்
கஜமுகனே சரணம்!

அநுபல்லவி.

இணையில்லாதோனே!—இமையவர்
இடுக்கண்களைந்தோனே! கணபதியே.

சரணங்கள்.

மறைப்பெருஞ் சோதியனே!—ஆதி
ஆழிகைக்கொண்டவனே!
பொறுத்தருள்வா யென்னை!—புநிதா
புகழ்வேனய்யா னுன்னை! கணபதியே.

அநாதரக்ஷகனே!—அரசுத
ஆநந்தகாத்திரனே!
விநாயகனே யபயம்!—விச்வ
விநாயகனே யபயம்! கணபதியே.

விநாயகா! உம்மையே நம்பினேன்! (கபோலங்களி லடித்துக்கொண்டு நமஸ்காரம் புரிதல்).

(நேபத்தியத்திற்கானம்.)

'கோண்டலாராடேயோ! கோடலாராடேயோ!
டிண்டிடிண்டிடேயோ! டேயோ! டேயோ! டேயோ!'

**போஜ:**— (கேட்டு எழுந்து) இந்த கானம் எங்கிருந்து வருகின்றது! யாராவது இடையர் மாடுகளை யோட்டிக்கொண்டு போகின்றனரோ?

(மறுபடியும் நேபத்தியத்தில்)

'இத்தரோய்! நம்ப மாடுங்கள்ளாம் இங்கேவந்திடுச்சுபோலிக்குதுடோய்!'

**போஜன்:**— (நோக்கி) ஆம்! யாரோ மாட்டிடையர்கள் தாம் இருவர் இவ்வழியாய் வருகின்றார்கள்! நாமோர் பக்கஞ் சென்று மறைந்து நிற்போம்! (அப்படியே செய்தல்).

(**கோபாலன், கிருஷ்ணன்** என்னுமிரண்டிடையர்கள் பிரவேசித்தல்).

**கோபாலன்:**—இத்தரோய்! இங்கே எங்கேயும்நம்பமாடுகளைக்காணண்டோய்!—இப்பொ மணியோசை கேட்டுச்சே யிங்கே தானே அண்ணே?

**கிருஷ்ணன்:**—இங்கேயல்லடா தம்பீ! இந்தக் கோயிலுக்குள்ளே பூசை சேஞ்சாங்கபோலிருக்குது! அதுதாண்டா மணியோசை கேட்டிருக்கும்!

**கோபா:**— (ஆச்சரியத்துடன்) ஏன் அண்ணே! பூசை சேஞ்சாக்கே மணி ஓசை கேய்குமோ?

**கிரு:**—ஆமாண்டா! பாப்பாருங்க பூசை பண்ணும் போது மணியடிப்பாங்கோ!

**கோபா:**—(குதூகலத்துடன்) ஆ! அந்த மணியை எங்கெ கட்டுவாங்க? சாமியார் கழுத்திலே கட்டுவாங்களோ?

**கிரு:**—(சிரித்து) எடையனென்பது உனக்குதாண்டா சரியான பேரு! சாமியார் கழுத்திலேயாடா மணியைக்கட்டு வாங்கோ!

**கோபா:**—பின்னே எங்கே கட்டுவாங்க?

**கிரு:**—இல்லேயடா மடையா! குருக்கமாருங்க இருக்கிறாங்களே அவங்க சாமியாருக்கு நேயித்தியம் பண்ணச்சே கையிலே மணியை எடுத்துகிட்டு ஙண ஙண ஙண என்று அடிப்பாங்கோ? அது என்னத்துக்கென்னு? சாமியார் முழுச்சிக்கு வாராம்!

**கோபா:**—ஏன் அண்ணே! நேயித்தின்னு பலிபோடு வாங்களோ?

**கிரு:**—நம்பவளங்க பூசாலிங்கனென்னுடா பலிபோடு வாங்கோ! பாப்பாருங்க இருக்கிறாங்களே அவங்க கொழு கட்டே, வடே, சுண்டல், பாயஸம், பழம் இதெல்லாம் நேயித்தியம் பண்ணுவாங்கோ!

**கோபா:**—(தலையைத் தடவிக்கொண்டு) இப்போதான் ஒருசேதி மண்டையிலே வருதண்ணே! எங்க அய்யா பெஞ்சாதியிக்கிராங்களே—இக்கிராங்களோ இல்லேயோ?—அவங்கமெய்த்த நல்லவங்க அண்ணே! ஒருநா எனக்குரவை கொழுக்கட்டை குடுத்தாங்கோ! (கொட்டையிட்டுக்கொண்டு) ஐயோ! என்னமாயிருந்திச்குன்றே! (ருசியைப்பிரயித்து) பினியம்பயம் கெட்டுப்போயிடுச்சுப்போ!

**கிரு:**—எண்டா! அதுங்குள்ளே நூல் வெச்சிருந்தாங்களோ இல்லேயோ?

**கோபா:**—(ஆச்சரியத்தையடைந்து) ஆமாண்ணே! அதிலேவந்து இசுக்க இசுக்க நூலு நீள சும்மா வந்திச்சின்றேன்! அது உனக்கு எப்படி தெரிஞ்சிச்சு அண்ணே? சோஷியமா?

**கிரு:**—சரி! எதாவது ஊசக்கொழுக்கட்டை உங்க அய்யா வீட்டிலே மீந்துபோயிட்டிருக்கும். குப்பையிலே கொட்டுவானேன்னுட்டு உனக்கு கொடுத்திருப்பாங்கோ! பாப்பாருங்க கூட நல்லாயிருந்தா கொடுப்பாங்களா?

**கோபா:**—இல்லே! அண்ணே! மெய்த்தவும் நல்லாயிருந்துச்சு! நீ துண்ணிருந்தான்னு தெரியும்! ஷோஷியம்!

**கிரு:**—ஆமாண்டா! தம்பி! நான் கொழுக்கட்டை எப்பவானு தின்னிருக்கனு?

**கோபா:**—அது எப்பஷியானு போயிட்டுப்போவது அண்ணே!ரவை பொவலேக்காம்பிருந்தா கொடேன்! வாவூறுது!

**கிரு:**—ஐயோ! இப்பொதான் ஒரு காசுக்கு பொகலே வாங்கிப்போட்டுக்கிட்டு மீதியை யிந்த தோயித்தியிலேகட்டியா

மூடிச்சி வைச்சிருந்தேன்! அந்தப்பக்காளிடையன் வந்து ஒரே வாயா வாங்கிப்போட்டுக்கினு பூட்டான் தம்பி!

**கோபா:**—போயிட்டுப்போரான்! அந்த கோயிலுக்கு ள்ளேபோனா என்னமானா துண்ரத்துக்குக் கிடைக்காது?

**கிரு:**—வேண்டிய பூசை கிடைக்குந்தம்பி! வேணுமானா நீ போய்ப்பாரேன்!

**கோபா:**—(கோயிலுக்குட் சென்று மெள்ளக் கதவைத்திறந்து நோக்கி) அண்ணே! எவனோ ஒத்தன் வண்ணான்சாலாட்டம் வவுத்தைச் சாத்திக்கினு கொட்டாப்ளியாட்டம் குந்திகினுயிருக்கா இங்கே!(நோக்கி) ஹிஹிஹிஹி! (வெறியனைப் பெருஞ்சிரிப்புச் சிரித்தல்).

**கிரு:**—என்னடா உருண்டுருண்டு சிரிக்கிரே! என்னடா அதிஷயம்!

**கோபா:**—அய்யே! மூஞ்சியைப்பார்ரோய்! ஹி! ஹி! ஹி! ஓடியாண்ணே! ஓடியாண்ணே! இங்கே ஒத்தனுக்கு மூஞ்சியிலே வாலுதொங்குது!

**கிரு:**—எங்கேடா! எங்கேடா? (சந்நிதிக்கு வருதல்)

**கோபா:**—(விநாயகரைக் காண்பித்து) இதோ தெரிலே. வாயிலே ஒரு கொம்புகூட முளேச்சு தொங்குது பாரண்ணே!

**கிரு:**—அடடடடா! குடிகெட்டது! நீபூட்டே!

**கோபா:**—என்ன? என்ன?

**கிரு:**—அடமுண்டமே! அவங்காதாண்டாதெய்வம்!

**கோபா:**—இதியென்னதெய்வம் அண்ணே! கங்கம்மாவா? மன்னாரசாமியா? என்ன தெய்வமண்ணே யிது?

**கிரு:**—அதெல்லா மல்லடா! இவர்தாண்டா பிள்ளையார்! இவரைத்தாண்டா பாப்பாருங்க விக்கினேசுவரரென்று சொல்

றுங்கோ! பயித்தியக்காரா ! பாப்பானண்டை இத்தனை நாளாய் வேலையிலிருந்தும் இது தெரியவில்லையேடா ?

**கோபா:**—என் அண்ணே ! பிள்ளையாரின்னுட்டுக்கூட ஒரு தெய்வமிருக்குதோ ? நம்ப கங்கம்மாதிருணாளும்போது எத்தனையோ தெய்வம் காப்புகட்டிக் கும்பிடுவமே, அதிலே பிள்ளையாரின்னுட்டு நான் கேட்டதில்லையே !

**கிரு:**—பின்னே எந்த தெய்வத்தையடா கேட்டிருக்கை?

**கோபா:**—எத்தனையோ தெய்வம் ! கணக்கா வயக்கா ! நம்பளுக்குத் தெரியாதென்னு பாத்துக்கினையோ ? நம்ப ஒருதரம் கங்கம்மா கொடம் எடுத்திருக்கோம் அம்மா! அப்போ அந்தப் பாட்டெல்லாம் கத்துக்கினேன் !

**கிரு:**—என்ன பாட்டுடா அது ? சொல்லுடா கேட்போம் !

**கோபா:**—ஓ ஓ ! கொடம் வாண்டாமா ! சும்மா பாடுவனே ? நீ கத்துக்கினையானு ? சோஷியம் சொல்லித்தரையா பார்ரேன் !

**கிரு:**—சோஷியத்துக்கென்னடா ? அல்லாம் உனக்குத் தாண்டா கத்துக்கிண்டேன்! நீ பார்ரா கேட்போம்! இதுவரைக்கும் உன்னைப் பாடையிலே பார்க்கலேடா !

**கோபா:**—ஆனு கொடங்கொண்டுவந்தையானு பார்ரேன் !

**கிரு:**—தலையிலே யிருக்குதுன்னிட்டு எண்ணிக்கோயே !

**கோபா:**—ஆனு பார்ரேன் ! கேளண்ணே ! (கங்கம்மா கொடம் தூக்கி ஆடுகிறவன் போல் நடித்துக்கொண்டு).

சூரன் கருப்பன் கருப்பண்ணன் !
சொக்கன் நொண்டி நல்லண்ணன் !
தூற்றித் தூண்டி சாமுண்டீ !
தோட்டிய சின்னன் காட்டேரி !

மாரி முனியன் மன்னாரன்!
மாடன் சங்கிலி பாவாடை!
மயான வாசி வழிபறித்தான்!
மலையன் பக்கிரி பின்னடியான்!
சேரிமின்னாரன் குழியிரிசி!
சிறுகாட்டுடையான் பனைமரத்தான்!
செல்லன் இருளன் பெத்தண்ணன்!
செல்லிச் சடையன் சத்தகன்னி!
வீரன் மோகினி யேகாத்தா!
வெறியன் பித்தன் படையாச்சி!
வெள்ளி முருகன் வெட்டுண்ணி!
வீரி பிடாரி கங்கம்மா! (ரு)

ஏ கங்கம்மா! ஏ கங்கம்மா! ஏ கங்கம்மா! (பாடிக்கொண்டே குதித்தல்).

கிரு:—(ஒரு பெருஞ்சிரிப்புடன்) அடே! பயித்தியமே! இதெல்லாம் நம்பளவங்க தொழப்பட்ட தெய்வம்டா! பிள்ளையார் தானேடா பாப்பாருங்களுக்கு முதல் தெய்வம்! பின்னே தவடையிலே போட்டுக்கொள்ளடா! இல்லாட்டா உன்னை யிந்த ராவிக்குள்ளே தேன் கொட்டும்படி செய்யும்! நீ வேணுமானா பாத்துக்கோ!

கோபா:— (பயந்து) ஐயோ! என்ன சேரது அண்ணே! அம்மாடி! இப்பவே தேள் கொட்டராப்பலே இருக்குதே! (விரலில் தேள்கொட்டப்பட்டவன்போல் நடித்தல்).

கிரு:—நான் சொன்னனே! பாத்துக்கிண்டையா? இந்த சாமியார் ரொம்ப சத்திடா! பேசாமல் இப்பவே தோப்பணம் போட்டு தவடையிலே தெரியாமல் செய்தேன்னிட்டுப் போட்டுக்கோ! ஒன்னுமிருாது! இல்லாட்டா வாயடச்சிப் பூடும்!

**கோபா**:—(வாயடைபட்டதுபோல்மனதில் திகிலடைந்து) வா - வா வா - வா - வா யெல்லாம் நோவுது அண்ணே ?

**கிரு**:—பயப்படாதேடா! இந்த சாமியார் பத்தியச்ச தெய்வமடா! நான் சொன்னபடி செய்! மன்னிச்சிடுவார்.

**கோபா**:— (கிருஷ்ணனுக்கெதிரில் நின்று) சாமீ! தெரியாமல் சேஞ்சிடங்கோ! பொறுத்துக்கணம்! பொறுத்துக்கணம்! (கிருஷ்ணனுக்குத் தோப்பணம் போடுதல்).

**கிரு**:—அடே மடையா? எனக்கல்லடா! சாமியாருக்குப் போடடா ஆறு தோப்பணம்!

**கோபா**:—ஆமாம்! ஆமாம்! புத்தி! புத்தி!! சாமி! உனக்குத் தோப்பண்ணம் போர்ரேன்! மன்னிச்சிடுங்கோ! லாபம்! இயண்டு! நாலு!

**கிரு**:—என்னடா! ஒன்னுவிட்டுட்டே! மூணு சொல்லடா!

**கோபா**:—ஆம் அண்ணே! கணக்கு எப்படியோ மறந்துபூடுச்சு! எங்க அய்யா வீட்டிலே படி கொடுப்பாங்கோ! அதை அளந்தளந்து கணக்கு மெய்த்தநல்லா தெரிந்திருந்துசு அண்ணே! பத்து வரைக்கும் தண்ணியாயிருந்துச்சு! இப்போ எப்படியோ தப்பி போயிடுச்சு! இதோ திரியுஞ்சொல்லரேன் கேக்கலரயா? லாபம்! இயண்டு! மூணு! அஞ்சு! (சொன்னதும் சொல்லாததுமாய் தூரத்தில் நோக்கி) ட்றியோ! ட்றியோ! ட்றியோ! (கீசக்குரலுடன் எழுந்து விரைந்தோடுதல்)

**கிரு**:—அடடடா! எங்கடாப்போறே? எங்கடாப்போறே! நில்லுடா! நில்லு! கொறையும் போட்டுட்டு போடா! (அவன் போனபக்கம் உற்றுநோக்கி) அய்யய்யோ! பையனுக்கு என்னமோ வந்திடுச்சு!

**கோபா**:—(திரும்பி எரைக்க எரைக்க ஓடிவந்து) அண்ணே! அந்த சங்கன்மாடு நம்ப ரங்கய்யர் பயிரை யெல்லாம் சாடா மேஞ்சிடுச்சு! ஒரு கதிர்கூடயில்லே!

கிரு :—போயிட்டுப்போவுது! அந்த அகம் பிடிச்ச பாப்பானுக்கு வேணுண்டா! நீ போடுடா மெத்த தோப்பணத்தையும்! இல்லாட்டா சாமியாருக்கு கோவம் வந்துடுண்டா!

கோபா :—ஆமாண்ணே! அந்த கோணைக்கொம்பு மாடு வந்து நம்பளை இசுத்துக்கினுபோயிச்சு! இல்லாட்டா—தோப்பணமா போற்றது அண்ணே! ஆனா நீயே எண்ணிக்கோ! (பாபாவென்று பத்துதோப்பணம் போடுதல்).

கிரு :—ஒன்னு! ரண்டு! மூணு! போறுண்டா போறுண்டா! தவடையிலே போட்டுக்கினு சாமியாரை கும்பிடுடா!

கோபா :—சாமீ! போட்டுக்குணேன்! (படபடவென்று தவடையிற் போட்டுக்கொண்டு) இகிநேசரா! தண்டம்! தண்டம்! தண்டம்! (கோணலும் மாணலுமாய் நமஸ்காரம்பண்ணி) சாமி! இகிநேசரா! பிள்ளையாரே! இனிமே கோவிச்சிக்கக்கூடாது! அல்லாஞ் சேஞ்சிட்டேன்! (சுவாமியை உற்றுநோக்கி செவிகொடுத்து) அண்ணே! சாமி என்னமோ கீச்கீச்சென்று பதில் சொல்லுது!

கிரு :—(செவிகொடுத்து) இல்லைடா! இல்லை! பல்லிபேசுரதடா?

கோபா :—ஆ! ஆ! ஆனா உன்னை பல்லி சோஷியத்திலே மெய்த்த கட்டிக்காரன் றுங்களே, அது என்ன பேசிச்சுசொல்லு பாப்போம்!

கிரு :—அதுவா தம்பி! சொல்றேன் கேளு! (யோசித்து) இராஜ பயந்தப்பி!

கோபா :—அதெப்படி?

கிரு :—ஜோஷியத்திலே இப்படி சொல்லியிருக்குது தம்பி!

கீச்சுக்கீச் சென்றொருகாற்
கிழக்குமுக மிரண்டுதரம்
பேச்சுகளைத் தான்பல்லிப்
பெருக்கிடிற்கான் ராஜபயம்! (௬)

கோபா :—(பயந்து) அப்பாடி! நான் ஒடியேபூட்டேன்! ராசா என்ன செய்வரோ பயமாயிருக்குதே !

கிரு :—நமக்கல்லடா தம்பி! அப்படி அது பேசிறு ராஜனுக்குப் பயம் என்னு சொல்லுவாங்கோ! பாவம் நம்ப ராஜா மகன் இருக்கிருனே அவனுக்குதாண்டா பயம்!

போஜ:—(ஆச்சரியமாய்) ஆ ஆ! இஃதென்ன விபரீதம்! எனக்கென்ன பயம் நேரிடப்போகின்றது? யான் இங்கிருப்பது ஒருவேளை யிவர்களுக்குத் தெரியுமோ? (சற்றும் மறைந்து நிற்றல்)

கோபா :—கில்லண்ணே! (செவிசொரிந்து) கிரியும் என்னமோபேசுது? பாரண்ணே !

கிரு :— (கேட்டு) தம்பி! நாமினிமேல் இங்கிருக்கப்படாது! அந்தத் துரோகி முஞ்ஜராஜன் இருக்கானே அவனும் இன்னொத்தனும் நம்ப ராஜா மகனைக் கொல்றத்துக்கு யோசனை செய்ய இங்கே வரப்போருங்கோ! இங்கே இனிமேலிருந்தா நம்ப தலையே போய்விடும்! பேசாத நம்ப போயிடலாம் வா! சாமி இருக்கிருன்! ராஜா மகனை பாத்துகாதே போவணு? போவோம் வா! (இருவரும் நிஷ்கிரமித்தல்)

போஜ :—(மனதில் சந்தையுடன் முன்வந்து) இவ்விடையர் சொல்லிப்போனது உண்மையாயிருக்குமோ? ஆ ஆ! இப்போதன்றே நாம் குருகுலத்தைவிட்டு வெளியிற் புறப்பட்டதன் பயன் விளங்குகின்றது! வீணய் புத்திசாகரரை வெறுத்துக் கொண்டேனே! இப்பொழுதன்றே நமது ஆசிரியருடைய நல்லெண்ணம் தெரியவந்தது!

*"ஆபத்துக் குதவாப் பிள்ளை,
அரும்பசிக் குதவா வன்னம்
தாபத்தைத் தீராத் தண்ணீர்,
தரித்திர மறியாப் பெண்டிர்

* விவேக சிந்தாமணி.

கோபத்தை யடக்கா வேந்தன்
குருமொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம்,
பயனில்லை யேழுந் தானே!" (௭)

ஐயோ! இக்காலையில் யான் புறப்பட்டவேளை என்ன வேளையோ? ஒன்றின் மீதொன்றாய்ச் சங்கடங்கள் வருகின்றனவே! இச்சமயத்தில் நாம் எப்படி யிக்கொடியவன் கையிலிருந்து தப்பித்துச் செல்வோம்? ஏ! கணேசா! என்னைக் கைவிடலாகாது! உன்னையே சரணமடைந்தேன்!

முன்னறியேன் பின்னறியேன் மாதர் பாலென்
மூடமன மிழுத்தோடப்பின்சென்றெய்தேன்,
நன்னடையும் நற்குணமும் பொருந்து மென்றன்
நற்குருவை நம்பாது நாச மானேன்!
என்னறிவின் மடைமையையான் யாதுரைப்பேன்?
ஏரம்ப! என்மீது கருணை செய்வாய்
என்னரசே! என்னமுதே! நின்பாலன்றி
எவர்க்கெடுத்தென் குறைதன்னையியம்புவேனே!

ஏ! ப்ராணதார்த்திஹர! உமது அவ்வியாஜமான கருணையை யான் என்னென்று சொல்லுவேன்! அவ்விரண்டிடையர்கள் மாத்திரம் இரகக்மில்லாதவர்களா யிருப்பின் என்கதியென்னவாகும்? (செவிகொடுத்து) ஓ ஓ! இஃதென்ன! பேச்சுக்குரல் தானே! வேறு யாவராயினுமிங்கே வருகின்றனரோ? (நோக்கி) சரி! இடையர்கள் சொல்லியது உண்மையாகவே முடிந்துவிட்டது! நமது சிற்றப்பன் தான் அதோ வருகின்றான்போலும்! இப்போது நாமென்செய்வோம்? எங்கே புகுவோம்?—எதற்கும் நம்மை இத்தனைச் சங்கடங்களினின்றும் காத்தருளின கருணாநிதியான கடவுள் இருக்கின்றார்! இங்கு நடக்கப்போகிற விசேஷத்தையும் மறைந்து நின்று கேட்போம்!

"வருந்தியழைத்தாலும் வாராத வாரா!
பொருந்துவன போமினென்றாற் போகா!" (கூ)

(ஒருபுறமாய் ஒளிந்து நிற்றல்.)

(பிரவேசித்து.)

**முஞ்ஜராஜன்:**—(ஆத்மகதமாய்) ஆ ஆ! இந்நாட்டை நம் கைவசஞ்செய்வதற்காக என்னென்ன காரியங்களை யெல்லாம் செய்யலாயினோம்! ஒன்றும் பயன்படாதுபோல் தோன்றுகின்றதே! இத்தனைநாளாய் புத்திசாகரனுடைய வீட்டிற் பூனைபோல் அடங்கியிருந்த போஜன் இன்று வெளியிற் கிளம்பியதை யோசித்திடில் ஏதோ விசேஷ மிருக்கவேண்டுமென்றே தோன்றுகிறது. இத்தனை நாளாய் விலாஸவதியினிடம் வாராதவன் இன்று அவளிடம் வந்ததன் கருத்தென்னோ? எல்லாம் ஆச்சரியமாயிருக்கின்றன!—இந்நகரத்தாரிலும் சிலர் அவனை அரசனென்று மதித்து மரியாதை செய்தனராம்! சிலர் இன்று அவனது தர்சனங்கிடைத்தற்காகவே தத்தங்குல தேவதைகளுக்கு விசேஷ ஆராதனம் புரிந்தனர்களாம்! இவையெல்லாம் தீர விசாரித்திடிற் சீக்கிரத்திலேயே போஜன் நம்மை எதிர்க்கவும், பிரஜைகள் அவனுக்குதவி செய்யவும், இவ்விராஜ்ஜியம் நம் கைவிட்டகலவும் நேரிடுவதன்றி, நம் தலைக்கும் குடும்பத்திற்குமே நாசம் வருமென்பதிற் சந்தேகமில்லை! ஆம்!

$ 'பொன்னொடு மணியுண் டானாற்
புலையனுங் கிளைஞ னென்று
தன்னையும் புகழ்ந்து கொண்டு
சாதியின் மணமுஞ் செய்வார்!
மன்னரா யிருந்த பேர்கள்
வகைகெட்டுப் போவா ராயின்
பின்னையு மாரோ வென்று
பேசுவா ரேசு வாரே!' (க0)

$ விவேகசிந்தாமணி.

ஆயினுமிப்பொழுது மென்ன?முயற்சியாலாகாதது மொன்றிரு க்கின்றதோ! நமது ராஜாங்க நிர்வாஹகர்களை எல்லாம் நம் கை வசம்செய்து விட்டோம் ! அப்பாதகன் புத்திசாகரன் ஒருவன் தான்நம்வலையிலகப்படவில்லை ! அவனையும் மந்திரிப்பதவியினி ன்றும் நீக்கிப் பத்திரநாராயணனையே நமது முதன் மந்திரியாக ச்செய்து விட்டோம். எப்படியிருப்பினும் அவன் ஒருவன்தா னே ! அல்லது சிலர் போஜனுக்குதவியாகவே யிருக்கட்டும் ! அவர்களால் என்ன செய்யக்கூடும் ? இராஜ்ஜியம் நம்கையிலி ருக்கும்வரை நமக்கொருபயமுமில்லை ! எவ்வித தந்திரத்தினு லாவது அவனை இன்றிரவுக்குட் கொன்றுவிடவேண்டும்! அவ னும் நகரத்திற்குள் இல்லை யென்பதாகத் தெரியவருகின்றது! புத்திசாகரனும் தெய்வாதீனமாய் நகரில் இல்லை! அவனை ஒரு வருக்குந் தெரியாமல் தொலைத்துவிடுவதற்கு இதுவேசமயம்! தாட்சிணியம் பார்க்கிறவர்களும், அடிக்கடி சங்கைகொள்ளு கிறவர்களும், பிறர் சொல்லும் அபவாதத்துக்கஞ்சுகிறவர்க ளும் ஒருபோது முருப்படார் !

மித்திரன் போல்வரும் சத்துரு தன்னையும்
உடன்பிறந் தேகொலு மடர்ந்த நோயையும்
கண்டதட் சணமே துண்டஞ் செய்க !
அன்றேற் பலத்தவை நின்றே கொல்லும். (கக)

ஆகலின், நம்மாலான பிரயத்தனங்களை எல்லாம் செய்தேவிடு வோம்! நமது சேனைத்தலைவன் வத்ஸராஜனையு மிங்கே வரச் சொல்லியிருக்கின்றேன் !—நல்லது நாமெப்படி யவனைப்போ ஜனைக்கொல்லும்படி சொல்வது? ஒரு காரணமுமின்றி யவன் போஜனைக்கொல்லச் சம்மதியானே! (யோசித்து) நல்லது ஓர் உபாயம் முன்னரே தோன்றியது! அப்படியே செய்வோமா கில்இன்றிரவே போஜனைத் தெரியாமல் தொலைத்துவிடலாம். தெரிந்தாலும் பயமில்லை! சரி இதோ வத்ஸராஜனும் வருகின்

றான்! இதை அவனிடத்தில் வெகு தந்திரமாய் வெளியிடல் வேண்டும்!

போஜ:—(ஆத்மகதமாய்) அடே! பாவி! நீயோ என்சிற்றப்பன்? என்னைக்கொல்லுவதற்கு என்னென்ன வழிகளெல்லாம் தேடுகின்றாயடா!

(பிரவேசித்து.)

வத்ஸராஜன்:—மஹாராஜா! வந்தனம்! தாங்களடியேனை இந்நேரத்தில் இங்கு வரும்படி ஆஞ்யாபித்ததன் காரணமென்னோ?

முஞ்ஜ:—(வத்ஸராசனுடன் சோபியின் முன் சென்று) வத்ஸராஜா! யாமிப்பொழுது இங்கு உன்னை வரவழைத்ததன் காரணம் உனக்கே தெரிந்திருக்கலாம்! யாம் அவ்வளவு சொல்லியிருந்தும் போஜனை யிவ்வளவு ஆடம்பரத்துடன் வெளியிற்புறப்பட விட்டுவிட்டீர்களல்லவா?

வத்ஸ:—மஹாராஜா! தாங்கள் அடியேன் உரைக்கும் வசனங்களைச் சற்றுக் கவனிக்கவேண்டும்! இரண்டுவருஷங்களுக்கு முன்னரே தாங்கள் இவ்விராஜ்ஜியத்தைப் போஜனுக்கு ஒப்பித்திருக்கவேண்டும். ஆயினும்போஜன் தம்மை அதைக்கொடுக்கும்படி கேட்டவனல்லன்! அப்படியிருக்க அவன் ஏதோ வேடிக்கையாய் வெளியிற் புறப்பட்டதனால் தமக்கென்ன அபாயம்? அவனிடத்திற் பொருளிருக்கின்றதா? படையிருக்கின்றதா? அஃதொன்றுமில்லையே! ஒரு குற்றமுஞ் செய்தறியானே! அறியாத சிறுகுழந்தைபோலல்லவோ யிருக்கின்றான்! அவனுக்கெப்படித் தீங்கிழைப்பது?

முஞ்ஜ:—மூடா! எமக்கோ நீ புத்திகூறுகின்றாய்! இன்று நடந்தசமாசாரமுனக்குத் தெரியுமா?

வத்ஸ:—மஹாராஜா! தம்மிடத்திலுள்ள அன்பினால் ஏதோ சிறுதெடுத்துரைக்கலாயினேன்! அதைத்தாங்கள் பொ

றுத்துக் கேட்கவேண்டும்! தாங்கள் செங்கோல் செலுத்திவரும் பொழுது போஜனால் என்ன செய்யக்கூடும்! மகீமண்டலத் துதித்த மகேந்திரன்போலும் வடிவெடுத்துவந்த மன்மதன் போலும் உருவெடுத்துவந்த உலகமாதாபோலும் உள்ள கிரப ராதியானஅத்திவ்யசுந்தர குமாரனைத் தாங்கள்ஒருகாரணமுமி ன்றிக் கொல்லத்தலையிட்டுக்கொள்வது நியாயமோ? தங்களு டைய தர்மபரிபாலனத்திற்கழகோ?

தைலம் நிறைந்த தடாகின் சுவாலை
மாலைக் காற்றில் மழுங்கு மாறே
நூலனைத்தினையும் நுகர்ந்தவ ராயினும்
சிலமொன் றின்றேற் சிதைந்துபோ வாரே! (சஉ)

மேலும், எதைச்செய்யப்புகினும் அதன் பலாபலத்தை நன்கு அறிந்து செய்யல்வேண்டும்!

* 'வலியே கால மிடமிவற்றான்
மாற்றான் றனக்குந் தமக்குமுள
பலவா நிலையும் வினைதொடங்கும்
பண்பு மதற்கா மிடையூறும்
விலகா ததனை விலக்குவதும்
வெல்லு மாறும் வென்றதனால்
உலவாப் பயனு முதலனைத்து
மோர்ந்து தெளிந்தே வினைசெய்க!' (கங)

ஆகலின் மகாதயாளுவும் தர்மஞ்யனுமான சிந்துல மஹாராஜ ருக்குஏகபுத்திரனான போஜனைக்கொன்றுவிடில்,அவரிடத்தில் அதிகப்பிரீதிவைத்திருந்த இந்நாடு நகரத்தார் யாவரும் தமது ராஜதானியை யல்லோலகல்லோலமாகச் செய்துவிடுவரே!

* பிள்ளைபார் புராணம்.

அன்றியும் ' அஹிம்ஸாபரமோதர்ம:' என்று தாங்கள் கேட்டதில்லையா ?

* "தேங்குவின் போகமும் சிறந்த முத்தியு
மீங்குறு மாக்கமு மினிது நல்கலா
லோங்கிய வறத்தினை யுளமுன் மூன்றிலும்
பாங்குற நித்தலும் பரிந்து செய்தியால்" (கச)

ஆகலின், அங்கிரபராதியான சிசுவைப்பற்றித் தாங்கள் வீணாய்க்கவலைகொள்ள வேண்டாம்

முஞ்ஜ :—அடே துஷ்டா ! பிருத்தியாதமா ? நீயோ எமக்குத் தர்மோபதேசஞ் செய்யத்துணிந்தனை ? நீ யொருவன் தான் தருமத்தை யறிந்தவன்போலும் ! போஜன் இன்று காலையில் வெளியிற் புறப்பட்டதற்கோ ஒருவன் அவனைக்கொல்லச் சொல்லுவான் ! சங்கதியறியாமலே அதிகப்பிரசங்கஞ்செய்ய ஆரம்பித்துவிடுகின்றனையே ! இச்செம்பைப் பார்த்தாயா ? இதில் தங்கியிருப்பது யாதென்றுனக்குத் தோன்றுகின்றது ? (வத்ஸராசனுக்கு நீட்டல்)

போஜன் :—(சோகித் துன்மநதமாய்) ஆ ஆ ! இஃதென்ன ? இப்பாற்செம்பு விலாஸவதியினந்தப்புரத்திலல்லவோ யிருந்தது. அதை யிவன் இங்கே எடுத்துக்கொண்டு வந்ததற்குக் காரணம் யாதோ ?

வத்ஸ :—(செம்பை உற்று நோக்கி) ஏதோ விஷத்தைச் சேர்ந்த வஸ்து போல் தோன்றுகின்றது ! இப்பொழுதிதைப்பற்றி என்ன ?

முஞ்ஜ :— (முகத்தைக் கோபத்தினுற் கடுத்துக்கொண்டு) நம் குழந்தை விலாஸவதி இன்று பிழைத்ததே ஆச்சரியம் ? போஜன்

* பிள்ளையார் புராணம்.

அவளுடைய அந்தப்புரத்திற்கு வந்து என்னென்னவெல்லாம் செய்தனன் அறிந்தாயோ ?

வத்ஸ :—எல்லாம் புதுமையாயிருக்கின்றது ! போஜனு விலாஸவதியின் அந்தப்புரத்திற்குச்சென்றனன் ? என்ன விசேஷம் நடந்தது ?

முஞ்ஜ:—என்ன விசேஷமா ! அதை வாயினாலும் எடுத்துரைக்கவேண்டுமோ ? ஒரு குற்றமும் புரிந்திராத நம் விலாஸவதியை, எம் சகோதரி சாருமதிகூட இல்லையென்றறிந்து, இவ்விஷத்தைப்பாலிற் கலந்து வைத்துக்கொல்லவல்லவோ பார்த்தான் ! இவளிடத்தில் தனக்கிஷ்டமில்லாதிருப்பின், வேறொருத்தியைச் சுகமாய் மணந்து கொள்ளட்டும் ! அதில் எமக்கு யாதோர் ஆக்ஷேபமுமில்லை ! மணந்த மனைவியை நெஞ்சுகொடுத்துக் கொல்லப்புகுவதுகூடநியாயமோ? அரசன் ஒருவன் இருக்கின்றானென்று அவன் எண்ணியிருப்பானாகில் இப்படியொருபோதும் செய்யத்துணிவானா ?

போஜ:—(ஆத்மகதமாய்) ஆஹா !என்ன ? என்ன ? நானோ இவ் விலாஸவதிக்கு விஷங்கொடுத்துக் கொல்லப்பார்த்தனன்? என்ன சாமர்த்தியம்! என்ன சாமர்த்தியம் ! நம்மை இப்பாலைக் கொடுத்துக் கொல்லப்பார்த்ததுமன்றி தன்னையே யான் கொல்லப் புகுந்ததாகச் சாற்றினளே! ஆஹா! என்ன மோசம்! என்ன மோசம் !! அசுவகமனத்தையும், மேககர்ஜனையையும், புருஷர்களின் பாக்கியத்தையும், ஸ்திரீகளின் சித்தத்தையும் தேவர்களேயறியார்களாயின் மானுடர்கள் எப்படி யறியப்போகின்றனர் ?

ஆல கால விஷத்தையு முண்ணலாம்
ஆற்றி லோடுங்கராக்களைக் கொள்ளலாம்
கால னோலை வருங்காலை செப்பலாம்
கரடி வெம் புலி வாயை யடக்கலாம்!

நீல மாமுகி லண்ட வெளிக்குளே
நிகழும் பட்சி களையும் பிடிக்கலாம்
சேலை கட்டிய மாதர்க ளின்மனச்
செயலை யோர்ந்தவ ரெங்கனு மில்லரே! ()

**வத்ஸ:**—மஹாராஜா! தாங்கள் கூறியவிஷம் வாஸ்தவமோ? இதைப்பற்றித்தாங்கள் போஜனையழைத்து விசாரித்தீர்களா?

**முஞ்ஜ:**—குற்றவாளியுந்தான் குற்றஞ்செய்ததாக ஒத்துக்கொள்வனே! நம் குழந்தை விலாஸவதி கதறிக்கொண்டு தேகம் நடுநடுங்க, நம்மிடம் ஓடிவந்து முறையிட்டழுதனள்! நம்மரண்மனைப் பெண் மதனமாலினியும் அதைப் பார்த்ததாக நேரிற் கூறுகின்றனள்! இன்னுமென்ன சாக்ஷியம் வேண்டும்?

**போஜ:**—அடே துஷ்டா! இப்படிப்பட்டப் பெண்ணை யாடா எனக்கு மணஞ் செய்துவைத்தனை? ஆஹா! இப்படிப் பட்ட ஸ்திரீயினிடத்திலல்லவா நம்மை உல்லாசமாயிருக்க விடுகிறதில்லை யென்று என் தந்தையின் பிராணநேசரும் எனது பரமாசாரியருமான புத்திசாகரரைப் பழித்தேன்! என்ன புத்தியீனம்! என்ன புத்தியீனம்! நானின்றறிந்ததை புத்திசாகரரெத்தனை நாட்களுக்குமுன் அறிந்தனரோ? 'மூத்தோர் சொல்லும்வார்த்தை யமுத' மென்பதும் பொய்யோ? அஹோ! ஸ்திரீகள் மிகவுங் கொடியவர்கள்! அவர்கள் ஒருவரிடத்தில் அநுராக முள்ளவரென்பது வெறும் பொய்யே!

ஒருவனுடன தேன்மொழிய வுரைப்பள் பின்வே
றொருவனுடன் சாடையா யுதட்டை யசைப்பள்!
ஒருவனைக்கண் ணோக்கத்தால் உருக்குவள்மற்
றொருவனை நினைந்து மனமுருகு வாளே (கக)

எவன் இந்த ஸ்திரீ தன்னிடத்தில் ஆசையுள்ளவளென்று நினைக்கின்றானோ அவனிலும் பெரியமூடன் உலகிலில்லை. அவர்கள் புண்ணியபாவங்களுக்குப் பயந்து நடந்தாலுண்டு. அன்றேல் அவர்களையடக்க வேறு உபாயமில்லை.

வத்ஸ:—மஹாராஜா! இவ்வித விஷயத்தில் தாங்கள் ஒன்றும் நிரவிசாரிக்காமற் செய்யலாகாது! புத்திமான்கள் ஸ்திரீகளின் வார்த்தையைமாத்திரம் நம்பி ஒரு காரியமுஞ் செய்யத்துணியார்கள்.

* "அத்தியின் மலரும் வெள்ளை
யாக்கைகொள் காக்கை தானும்
பித்தர்தம் மனமு நீரிற்
பிறந்தமீன் பாதந் தானும்
அத்தன்மால் பிரம தேவ
னாலள விடப்பட் டாலும்
சித்திர விழியார் நெஞ்சந்
தெரிந்தவ ரில்லை வேந்தே!" (கஎ)

முஞ்ஜ:—(கோபத்துடன்) என்ன? நம் விலாஸவதியையும் ஒரு சாதாரண ஸ்திரீபோல் நினைத்துவிட்டனைபோலும்! ஊழியனென்பது கொஞ்சமேனும் முன் மனதிலில்லை. இச்சொல் ஒன்றுக்கே முன்னருன்னைக்கொன்று மறுகாரியம் பார்க்கவேண்டும். பிரபு சொல்லுகிறபடி நடவாத பிருத்தியனும் பிருத்தியனா? ஆட்டின் கழுத்திில்தொங்கும் குசம்போல் அவனது வாழ்க்கை வியர்த்தமே! நல்லது! இதனுடைய பயனை விடியுமுன்னரே நீ யறிவாய்! (வேகமாய்ப் பரிக்கிரமித்தல்)

வத்ஸ:—(ஆச்சரியமாய்) இக்காலம் எப்பொழுதும் முகஸ்துதி பண்ணுகிறவர்களுக்கே யடுத்தது! கெடுதியை யெடுத்துக் காட்டி நன்மையை யுரைப்பவற் கிதுகாலமன்று!

---

* விவேகசிந்தாமணி.

"* அரவினை யாட்டு வாரு மருங்களி றாட்டு வாரும்
இரவினிற் றனிப்போ வாரு மேரிநீர் நீந்து வாரும்
விரைசெறி குழலி யான வேசியை விரும்பு வாரும்
அரசனைப்பகைத்திட்டாரு மாருயிரிழப்பர் தாமே!"

நல்லது ! காலத்திற்குத் தக்கபடி நடப்போம். (பிரகாசமாய்) மஹா ராஜா ! இதற்குத்தாங்கள் என்ன செய்யவேண்டுமென்கிறீர்கள் ?

முஞ்ஜ:—(முறக்குடன் திரும்பி) வத்ஸராஜா ! ஜாக்கிரதை ! நாளை சூரியோதயத்திற்குமுன் போஜனைக் காளிகாபரமேசுவரி வனத்திற்குக் கொண்டுபோய் ஒருவருக்குந்தெரியாமற் கொன்றுவிட்டு அவனது தலையை என்னிடங்கொண்டுவந்து ஒப்பிக்கவேண்டும். தப்பினால் உன்தலை போய்விடும் ! இதோ சாசன பத்திரிகை ! எடுத்துக்கொள். (பத்திரிகையைக் கொடுத்தல்)

போஜ:—ஈசா ! இத்தனை சங்கடங்களினின்று மென்னைக் காப்பாற்றினீர்! ஹே ப்ரணதார்த்திஹரா! அநாதனுயிருக்குமென்னை இன்னும் கிருபைகூர்ந்து காப்பாற்றுவது நின்பாரம்!

$ "ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
வாலமமு தாகவிலையோ
அக்கடலின் மீதுவட வனலிற்க வில்லையோ
வந்தரத் தகிலகோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ மேருவுந்
தனுவாக வளையவிலையோ
சப்தமே கங்களும் வஜ்ரதர னாணையிற்
சஞ்சரித் திடவில்லையோ

* விவேகசிந்தாமணி. $ தாயுமானவர் பாடல்

வாழாது வாழுவே ராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணாநந்தமே" (கக)

நல்லது ! இன்னுமென்ன நடக்கின்றதோ பார்ப்போம்.

வத்ஸ:—(வணங்கினபடியே பத்திரிகையை வாங்கிக்கொண்டு) மஹாராஜா ! இச்சிறிய குற்றத்திற்கு இவ்வளவு கொடியதண்டனையேன்? மேலும் போஜன் தம்முடைய தமையனாருக்கு ஒரே குமாரனாயினனே ! அவனாலன்றோ அவ்வம்சம் விளங்கவேண்டும் !

முஞ்ஜ:—யாவரா யிருப்பினும் நிர்த்தாட்சிண்ணியமாய் விசாரித்து நியாயப்படி சிக்ஷித்தலன்றோ அரசர்களின் முறை!

*"கருவினஞ் சாதி தம்மாற்
காமரா ருயிரைக் கொல்வோர்
வெருவுறச் சூறை கொள்வோர்
மேவியா றலைப்போர் கள்வர்
உருவளர் பிறனில் வேட்போர்
உவர்முத லோரைக் கோறல்
பருவரு பாவ மன்று
பயிர்க் களை களைதல் போலாம்!" (உ0)

* பிள்ளையார் புராணம்.

இப்படிக்கொத்த கொடிய பாதகனைக் கொல்லாமல்விட்டுவிட்டால் இன்னுமென்ன வெல்லாஞ் செய்யத்துணியான்? ஆதலின் இவனை நீ யின்றிரவே நான் சொன்னபடிகொன்றுவிட்டு வரவேண்டியது.

வத்ஸ:—(ஒன்றுந் தோன்றாமல்) சரி! மகாராஜாவின் ஆஞ்ஞை!

முஞ்ஜ:—இந்தப்படி செய்வதாக யிப் பிள்ளையார் முன்னடியிற் பிரமாணஞ்செய்!

வத்ஸ:—அப்படியே செய்கின்றனன். (செய்தல்)

முஞ்ஜ:—இனி பத்திரம்! பிரமாணமுஞ் செய்துவிட்டனை! போய் உடனே சொன்ன காரியத்தை நடத்திவா! போஜனும் நகரத்திற்குள்ளில்லை. நான் தண்டிப்பேனென்று பயந்து வெளியிற்றான் சென்றிருக்கவேண்டும். அவனை யொருவருமறியாமற் கொல்லுவதற்கு யிதுவே சரியானதருணம். ஜாக்கிரதை! இச்சமாசாரம் ஒருவருக்காயினும் தெரியப்போகின்றது! இக்கட்டளையைச் செய்யத்தப்பினுல்உஂம் சிரத்தைக் கொடுக்கச் சித்தமாயிருக்கவேண்டும்.

வத்ஸ:—ஆஞ்ஞை! மகாப்பிரபு! (கொஞ்சதூரம் பரிக்கிரமித்து. ஆன்மகதமாய்) சரி! காலத்துக்குத் தக்ககோலம்! யான்! எவ்வளவு நற்புத்தி கூறினும் கேட்கவில்லை.

* "தூம்பினிற் புதைத்த கல்லுந்
துகளன்றிச் சுடர்கொடாது,
பாம்புக்குப் பால்வார்த் தென்றும்
பழகினு நன்மை தாரா
வேம்புக்குத் தேன்வார்த் தாலுங்
வேப்பிலை கசப்பு மாறா

* விவேகசிந்தாமணி.

தாம்பல நூல்கற் றூலுந்
துர்ச்சனர் நக்கோ ராகார்." (உக)

எல்லாம் செட்டகாலத்திற்குத் தக்க புத்திதான்! (நிஷ்கிரமித்தல்)

**முஞ்ஜ:**—பயலே! என்னையாரென்று நினைத்தனை? உன் ஆசையாலேயே நீ யழிந்தாய்! புத்திசாகரனே! உன் தந்திர மெல்லா மென்னவாயின!!—நல்லது நேரமாயிற்று, விலாச வதியினிடஞ் செல்வோம்! (நிஷ்கிரமித்தல்).

**போஜ:**—(முன்னே வந்து) ஆஹா! விலாஸவதியைக் கையிற் போட்டுக்கொண்டு எவ்வளவு காரியஞ் செய்யத்துணிந்தாய்! பாவீ! நீயோ வென் தந்தையாருடன்கூடப்பிறந்தவன்? சீ! உன்னைத் தூஷிப்பதிற் பயனென்னை? மணந்த மனைவியே முனியும்போது பங்காளிகள் பாவத்துக் கஞ்சுவார்களோ?

(உ) இராகம் - முகாரி: தாளம் - ரூபகம்.

பல்லவி.

நம்பவுங்கூடுமோ - நங்கையரைக்கூட
நம்பவுங்கூடுமோ!

அநுபல்லவி

அம்புலிபோன்மிக - வழகானமுகமுள்ள
அம்புஜதளநேத்ர - ஆரணங்காளுலும் நம்ப.

சரணங்கள்.

சென்மத்திற் பிறந்தது - செருப்பாலடித்தாற்போமோ
வன்மையேபொருந்திய - வனிதைகள் நெறிதப்பி
மன்மதனைப்பழிக்கும் - மணவாளனையடைந்தும்
துன்மார்க்கர்களைக்கூடுந் - துஷ்டத்தனந்தானென்ஞே?—நம்ப.

காமுறுமழகிலும் - கரையாயௌவனத்திலும்
ஏமமாய்ப்புருஷர்கள் - இச்சைவைப்பதுவீணே!
காமன்மனத்திலெதைக் - கருதுகின்றுஞேசெய்ய
*வாமமேகலைமாதர் - வழுவாததனைச்செய்வர்!— நம்ப.

எதுவரையிற் புருடர்கள் மாதர்களின் கடாக்ஷமாகிற பாணங்களுக்கு இலக்ஷியமாகவில்லையோ அதுவரையிலேதாம் அவர்களுடைய புத்தியும் தைரியமும்! விவேகிகளைக்கூட வனிதைகள் மந்திரமின்றித் தந்திரமின்றி வினயமொன்றினாலேயே வஞ்சனைசெய்து விடுகின்றார்கள் !

என்னே வனிதை ! என்னே விவாகம் !
பிறப்பதே புருடனாய்ப் பெருந்துயர்க் கிடமாம்!
உலகமோ அழியும் உடலமோ அழியும்!
விலகிரா திருந்த வீடெலா மழியும் !
ஆகலின் வனிதைமேல் ஆசையை யொழித்துச்
சாகா திருக்கச் சகத்தினீங் குவரே!
சொற்பனம் போன்ற அற்பமாம் வாழ்வில்
ஒருவர் பெரியராம் ஒருவர் சிறியராம் !
ஒருவ ரரசராம் ஒருவ ரூழியராம்
என்னே உலகம் ! என்னசம் சாரம் !
சலனமே நிறைந்த உலகம் யாவும்
தோற்றமே யன்றி வேற்றுமை யாது ?
அவையெலா மென்ன? அநித்திய மலவோ ?
மன்னவர் தமக்கும் மற்றையோர் கட்கும்
என்ன பேதம் ? இராஜ னுக்கோ
எப்பொழு துந்துயர் இப்புவி தலத்தில் !
என்னவோ வெறும்பெயர் ! ஏந்திய செங்கோல்
பூணுமா பரணங் காணும் பரிசு !
எவரா யிருந்தென் ? எவர்துறந் தவரோ
அவர்தா மின்பம்அடைவருண் மையிலே !(உஉ)

(நிஷ்கிரமித்தல்).

# இரண்டாங்களம்.

## இடம்.—தாரைநகர்: புவநேசுவரி வனத்திற்குச் செல்லும் ஒரு கோடி வழி.

(காளிதாசன் யோகிபோற் காவியங்கி தரித்து, கையில் ஒரு தடி பிடித்துக்கொண்டு பிரவேசித்தல்).

**காளிதாசன்.**—ஆ! ஆ! இன்று காலையில் நம் நண்பனது பிராணன் தப்பியதே ஆச்சரியம்! அப்பாதகன் என்ன பெருமோசஞ்செய்ய எண்ணினான்! அவனது புத்தியின் வல்லமையே வல்லமை! போஜன் இன்று காலையில் வெளியிற் புறப்படுவானென்று எப்படியோ அறிந்து, அவனுக்கு மரியாதை செய்ய நிர்மித்ததுபோல் மேலுக்கு வெகு அழகான ஒரு கோபுரத்தையும் தோரணத்தையும் ஓர் இரவிற்குட் செய்வித்து நமது நண்பனையும் நம்மையும் ஒரே தடவையிற் கொல்லப் பார்த்தனனே! நாம் சிறிது ஒதுங்கி வந்திராவிடில் அக்கோபுரம் நம்மீது வீழ்ந்து இந்நேரம் நாம் பொடிப்பொடியாய்ச் சிதைந்துபோயிருக்கவேண்டுமென்றே? ஆ ஆ! அச்சிறிய க்ருத்திரிம கோபுரத்துக்குள் என்ன சூழ்ச்சிகளெல்லாம் செய்து வைத்திருந்தனன்! ஒரு புறத்திற் கற்குவியல்களும், ஒரு புறத்திற் சாணிக்குடங்களும், ஒரு புறத்தில் ஆயுத சன்னத்தர்களான கொலைபாதகர்களும், இன்னு மென்னவெல்லாம் அதில் மறைத்து வைத்திருந்தனன். நாமின்று உயிர் பிழைத்தது இப் புவனேசுவரியின் கிருபையே யன்றி வேறென்ன?

(க) இராகம் - இந்துஸ்தானி - தாளம் - ஏகதாளம்.

பல்லவி.

பாஹி! ஜகஜ்ஜநநி - தாக்ஷாயணி
பாஹி! ஜகஜ்ஜநநி!

அநுபல்லவி.

ஏஹி நிரஞ்ஜநி - மோஹ விபஞ்ஜநி!
ஈச மனோரஞ்ஜநி - தாக்ஷாயணி! (பாஹி)

சரணங்கள்.

மாதவஸோதரி - மாமவ சங்கரி!
மஹிஷாஸுரமர்த்தநீ! - தாக்ஷாயணி! (பாஹி)
வாசாமகோசரி - வாஞ்சிததாயகி!
வாணி தமோஹநநி! - தாக்ஷாயணி! (பாஹி)

தேவி! எல்லாம் நின் கருணை கடாக்ஷமே! இன்னும் எனது நண்பன் போஜனைப்பட்டத்துக்குக் கொண்டுவருவது நின்பாரம்! (கொஞ்சதூரம் பரிக்கிரமித்துச் செவிகொடுத்து) ஆ ஆ! இஃதென்ன? ஏதோ ஓர் அவமொழி கேட்கின்றதே! விலாஸவதியின் அரண்மனைக்குச் சென்ற நமது நண்பன் என்ன வாயினனோ? ஒருவேளையப்பாவி முஞ்ஜன் அங்கும் நம்மிளவரசனுக்கு ஏதாயினுங் கேடு விளைக்கக்கூடும்! இப்பொழுது நாமெப்படி இராஜ குமாரனைச் காண்பது? இரவோ இரண்டு ஜாமமாய்விட்டது! ஜனங்களுடைய சப்தமுஞ் சுத்தமா யடங்கிவிட்டது! புவனேசுவரிகோயிலும் இந்நேரம்சாத்தப்பட்டிருக்கும். இனி யானெங்கே போவது? வீட்டிற்குத்தான் செல்லவேண்டும்.

(நேபத்தியத்தில்)

ஆ! தெய்வமே!

காளி.—(கேட்டு) ஆ ஆ! நம் போஜனது குரற்போலவே யிருக்கின்றதே! நம் நண்பன் இவ்வளவு தைந்யத்தை யடைவதற்குக் காரணமென்ன? (நோக்கி) ஆம் போஜன்தான் வருகின்றான்!

(போஜன் விஸனக்ராந்தனாய்ப் பிரவேசித்தல்)

போஜன்.—(பெருமூச்செறிய) ஹா! தெய்வமே!

* "மருந்தறியேன்! மணியறியேன்!
மந்திரமொன் றறியேன்!
மதியறியேன்! விதியறியேன்!
வாழ்க்கைநிலை யறியேன்!
திருந்தறியேன்! திருவருளின்
செயலறியேன்! அறந்தான்
செய்தறியேன்! மனமடங்குந்
திறத்தினிலோ ரிடத்தே
யிருந்தறியேன்! அறிந்தோரை
யேத்திடவு மறியேன்!
எந்தைபிரான் மணிமன்ற
மெய்தவறி வேனோ?
இருந்திசை சொலவறியேன்!
எங்ஙனநான் புகுவேன்?
யார்க்குரைப்பே னென்னசெய்வேன்?
ஏதுமறிந் திலனே!" (உரு)

காளி.—(போசனருகிற் சென்று) என்ன! இராஜகுமாரா! இந்நிராத்திரியில் அரண்மனையைவிட்டுத் தனியாய் எங்குச் செல்கின்றனை? (போசன் பேசாமலிருக்க) நண்பா! என்ன ஒன்றும் பேசாமலிருக்கின்றனை? (உற்றுநோக்கி) இஃதென்ன? சந்திரஹாரத்தினின்றும் முத்துக்கள் அறுந்து சொரிவதுபோல் நின் கண்களினின்றும் பாஷ்பபிந்துக்கள் தாரைதாரையாய்ப் பூமியில் வீழ்ந்து ஓடுகின்றனவே! நின் மனத்தை யறுக்குமித் துயரத்தை நீ மறைக்க முயன்றும், நினது அதரநாஸாபுடங்களே தாம் துடிப்பதனாற் பிறருக்கதை வெளிப்படுத்துகின்றனவே! என்ன சமாசாரம்? நினக்குநேர்ந்த துயரம் யாது?

போஜ.—நண்பா! ஒன்றுமில்லை! நின் காரியத்தைக் கருதிச்செல்!

---

* இராமலிங்கசுவாமிகள் திருவருட்பா.

காளி.—என்ன ? என்னிடத்திலும் மறைக்கின்றனையோ! இன்று காலையில் நடந்ததை நினைந்து விசனப்படுகின்றனையோ ?

போஜ.—அஃதொன்றுமில்லை! (மிகவுந் தைரியத்துடன்) ஹா! தெய்வமே!

காளி.—நண்பா! இப்பொழுது தெய்வத்தை நோவதற்குக் காரணமென்ன ? என்ன துன்பம் நேர்ந்தது ?

போஜ.—அந்தோ! பாவியேன் மாள்கின்றேன்! முடிவெய்துகின்றேன் !!

காளி.—என்னருமை நேசா! நினக்கு வந்த அபாயத்தைச் சொல்லாயோ ?

போஜ.—சகே! அதை யேன் நீ அறிய விரும்புகின்றாய்? ஹா! விலாஸவதீ! (மூர்ச்சித்து வீழ்தல்).

காளி.—(போசனைக் கீழே விழவொட்டாமற் றாங்கிக்கொண்டு) ஐயோ! இப்புது நோய் மிகவும் பயமா யிருக்கின்றதே! நண்பா! என்ன இப்படி விசனப்படுகின்றாய்! கண் விழித்துப்பார்! நான் உயிருடனிருக்கும்வரை நீ யொன்றுக்கும் பயப்படவேண்டாம்! இப்பொழுது விலாஸவதியைப்பற்றி யென்ன? நீ யவளது அரண்மனைக்குச் சென்றனையோ ?

போஜ.—சகே! யான் என்ன சொல்வேன் ? என் புராதனமான குலத்தின் பெயர் அழிந்ததே! இதுகாறும் பரிசுத்தமாயிருந்த எனது வம்சத்திற்கே இன்று ஒரு பெரிய அவதூறு நேர்ந்ததே !

காளி.—அஃதெப்படி? உன் தந்தையார் மகாதர்மசீலரென்பது உலகமெல்லாம் பரவி யிருக்கின்றதே !

போஜ.—அதுதான் என் வருத்தத்தை யதிகப்படுத்துகின்றது.

**காளி.**—இஃது ஆச்சரியத்தினு மாச்சரியமே!

**போஜ.**—நண்பா! இன்றிரவில் நடந்த விஷயங்களை யா னென்னென்றுரைப்பேன்! ஆஆ! எனக்கு மணஞ்செய்விக்கப் பட்ட பெண்ணைக்கொண்டே என் சிற்றப்பன்—ஹா! இதைப் பார்க்கினும் என் வம்சத்திற்கு வேறு அவதூறுவேண்டுமோ?

**காளி.**—என்ன விந்தையாயிருக்கின்றது! அம்மாதரசி யைப்பற்றியோ இவ்வாறெல்லாங் கூறுகின்றாய்? சரியன்று! சரியன்று!!

**போஜ:**—நண்பா! அவளது செய்கையை நீ சிறிதேனு மறிந்திலாய்! அன்றேல் அப்பாதகியையும் நீ இவ்வாறு புகழ் வையோ?

**காளி:**—இளவரசே! நீ யிவ்வாறு யோசியாமல் மொழி வது தகுதியன்று! அப்பெண்மணி சுத்தப்பேதையாவளே! அவளைப் பெண்கள் நாயகமென்று சொல்லவேண்டுமே! வேண்டாம்! வீணாய் அவசரப்படவேண்டாம்!

**போஜ:**—நண்பா! உனக்கு விவாகமாகாததனால் இன் னும் பெண்களின் சுவபாவம் தெரியவில்லை! ஸ்திரீகளை நம்ப லாகாது! நம்பலாகாது!!

'* படியினைப்பொழு தேவதைத்திடு
பச்சைநாவியை நம்பலாம்
பழிநமக்கென வழிமறித்திடு
பழையநீலியை நம்பலாம்,
கொடுமதக்குவ டெனவளர்ந்திடு
குஞ்சரத்தையு நம்பலாம்
குலுங்கப்பேசி நகைத்திடுஞ்சிறு
குமரர்தம்மையு நம்பலாம்,

* விவேகசிந்தாமணி.

கடைவிலக்கமு மெழுதிவிட்ட
கணக்கா தம்மையு நம்பலாம்
காக்கைபோல்விழி பார்த்திடுங்குடி
காணியாளரை நம்பலாம்,
நடைகுலுக்கியு முகமினுக்கியு
நகைநகைத்திடு மாதரை
நம்பொணாது மெய் நம்பொணாதுமெய்
நம்பொணாதுமெய் நண்பனே!' (உச)

**காளி:**—நண்பா! இவையெலாம் மேன்மேலும் விந்தை யாயிருக்கின்றன! நீ யுரைப்பது சிறிதேனும் என் மனத்திற் குப் புலப்படவில்லை! நீ இப்படிப் பழிக்கும்படியாய் அப்பெண் மணி புரிந்த செயல்தான் என்னோ? அவள் அந்நியபுருஷர் முகத்தை யணுவேனும் நிமிர்ந்து பாராளே!

**போஜ:**—ஆஹா! அச்சிறுக்கி செய்த காரியத்தையும் யான் மறுபடியும் சொல்லி என் வாக்கை அசுத்தப்படுத்த வேண்டுமா? என்னை விஷம் வைத்துக் கொல்லப்பார்த்தது மன்றி அவளையே நான் விஷம்வைத்துக் கொல்லப்பார்த்த தாகவன்றோ வறைந்தனள்! அப்படிப்பட்டவள் இன்னு மென்ன வெல்லாஞ் செய்யத்துணியாள்? அப்பாதகிக்குப் புருஷனென்னும் சொல்லொன்று போதாதா? இவையெலா மறிந்தும் நான் உயிர்வைத்திருக்க வேண்டுமா?

**காளி:**—(விஸ்மயத்துடன்) என்ன! என்ன! கற்பிற்சிறந்த வக்காரிகையோ இத்தகைய காரியத்தைச் செய்யப் புகுந்த னள்! ஆச்சரியம்! ஆச்சரியம்!! இதனில் ஏதோ மோச மிருக்கவேண்டும்! நல்லது நண்பா! நீ இவ்வாறு செய்த தாய் யாருடன் அவள் சொன்னாள்?

**போஜ:**—என் சிற்றப்பன் முஞ்ஜனிடத்திலேயே!

காளி:—சரி! சரி! விஷயம் விளங்கிவிட்டது. இப்படி மோசம் நடக்குமென்று முன்னரே யூகித்தன்றோ உன்னை அவளிடங் கொஞ்சகாலம் செல்லவேண்டாமென்று கூறினர்? சரிதான்! இதுவும் அப்பாதகன் முஞ்ஜனது வஞ்சனைச்செயல் தான். ஆஹா உன்னைக் கொல்வதற்கு என்னென்னவெல்லாம் உபாயஞ்செய்கின்றனன்.

போஜ:—நண்பா! வாஸ்தவமாய் என் சிற்றப்பன் அப்படிப்பட்டவனாயினும், விலாஸவதியின் ப்ரோத்ஸாஹமின்றி யிவையெலாஞ் செய்யத்துணிவனா?

காளி:—அவர் எதற்குத்தான் அஞ்சுவர்? அப்பெண் மணிக்கு அம்மாதிரி சாக்குக்காட்டி, உன்னையு மதனைக்காரண மாய்க் கொண்டு கொலைபுரிவனே! அவனது கொடுமையை யும் வஞ்சனையும் நீ என்ன கண்டாய்!

போஜ:—ஆம்! நீ சொல்லுவது உண்மையே! ஆயினும் உலகத்தோர் என்னை என்ன சொல்வர்? இதுவுமன்றி இப்பொழுது விநாயகர் கோவிலில் நடந்த விஷயத்தை யான் என்ன சொல்லப் போகின்றேன்.

* 'அக்கோ வெறுங்கொடியோன்
அறைந்தகூற் றங்கமெலாம்
ஒக்க நினைக்கிலெனக்
கூடுருவிப் போகுதடா!' (உ௫)

* 'தேர்ந்த மனக்கொடியோன்
செப்பியவன் சொல்லையெல்லாம்
ஓர்ந்து நினைக்கிலெனக்
கூடுருவிப் போகுதடா!' (உ௬)

* 'தோன்றி விரியுமனத்
துட்டனே னென்பிழையை

* இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா.

ஊன்றி நினைக்கிலெனக்
கூடுருவிப்போகுதடா!' (உஎ)

* 'பற்று நினைத்தெழுமிப்
பாவிமனப் பேதைமையை
உற்று நினைக்கிலெனக்
கூடுருவிப் போகுதடா!' (உஅ)

நண்பர்! யானினிப்பிழைத்திரேன்! நீ உனது நன்மையை நாடிச்செல்!

காளி:—இளவரசே! நீயுமிவ்வாறு மனோத்ஸாகத்தை யிழக்கலாமோ?

'ஊக்கமுளோர் கைப்பொருளை யொழிந்தாரேனும்
ஆக்கமுளோ ரவரேயாம்! அசைவிலாத
வூக்கமிலா ரேதுமிலர்! உள்ள மில்லோர்க்
கேற்கும்புகழ் நற்பெயரி யாதுமுண்டோ?' (உகூ)

நின் மனத்திற் சங்கிப்பதை யானறிந்தேன்!

போஜ:—சகே! நீ இதை யெப்படி யறிந்தாய்?

காளி:—கைப்புண்ணுக்குக் கண்ணாடியும்வேணுமோ? (எதிரில் ஒரு வெளிச்சத்தைக் கண்டு) இஃதென்ன ஒரு வெளிச்சம் தோன்றுகின்றது! நண்பா! யாவரோ இருவர் கையில் விளக்கையேந்தி இவ்வழியே விரைந்துவருகின்றனர்!

போஜ:—(நோக்கி) அவர்கள் யாவராயிருக்கக்கூடும்? இக் கொடிவழில் இவ்வர்த்தராத்திரியில் இப்பயங்கரமான விடத்திற்கு இவர்கள் வருவதற்குக் காரணமென்ன?

காளி:—ஒருகால் அத்துஷ்டன் அனுப்பிய கிங்கரர்களா யிருக்கக்கூடும்! எதற்கும் நாமிங்கேயிருப்பது தகுதியன்று.

* இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா.

நாமிதனைவிட்டு எங்கேயாகினும் தனிமையான விடத்திற்குச் செல்வோம்வா! (இருவரும் கொஞ்சதூரம் பரிக்கிரமித்தல்).

(மேற்கூறியபடி பீமன், பைரவன் என்னு மிரண்டு இராஜகிங்கரர்கள் பிரவேசித்தல்).

**பைரவன்:**—வீமா! அதோ யாரோ இரண்டுபேரு இங்கே பேசிக்கொண்டிருந்திட்டு, நம்பளைப் பார்த்திட்டு அப்படி நழு வராங்கடா!

**பீமன்:**—ஆம்டா! நான் ஓடிப்போயி அவங்களை மடக் கட்டா?

**பைர:**—ஓட்ரா! ஓட்ரா!!

**பீம:**—(கொஞ்சதூரம் ஓடி) அட்டடே! ஓடியாடா!! நம்ப ராசாமவன் போலதாண்டா யிருக்கு!

**பைர:**—ஆமண்டா! இன்னொருத்தன் யாருடா?

**பீம:**—அவனுடா! (நோக்கி) நம்பராசாமவனோடேகூட எப்பப்பார்த்தாலும் படிச்சிகிட்டுருப்பானே, அந்த பாப்பாரப் பயலாதாண்டாயிருக்கணும்.

**பைர:**—(விளக்கைக்காளிதாசனுடைய முகத்துக்கு நேரேதிருப்பிநோக்கி) ஆம்டா! ஆம்டா!! அந்த ஐயன் தாண்டா!

**பீம:**—அவனைத் தாண்டா காளிதாசனென்றாங்க! அவன் மெத்த படிச்சுட்டானேமேடா?

**பைர:**—அடேடேடே! அவங்க எங்கையோ புறப்பட் டுப் போராங்கடா! ஓடிப்போயி மடக்கட்டா?

**பீம:**—ஆம்டா! (ஓடிப்போய் அவர்களை மடக்கல்)

**போஜ:**—யாரடா நீ? எங்கே வந்தாய்? (பீமன் சமீபத்தில்வர) அடேடே! விலகிநில்லடா!

**பீம:**—இல்லே மாராசா ! உங்களண்டே தாம் வந்தோம்.

**போஜ:**—எதற்காக வந்தீர்கள் ? யார் உங்களே யனுப்பியது ?

**பைர:**—(அருகிற் சென்று) ஆமாம் ! மாராஜா ! சேனாதிபதியவங்க யிருக்கிறாங்களே அவங்க உங்களேக் கூட்டிகிட்டு வரச்சொன்னாங்கோ ?

**போஜ:**—நாம் வருகிறதில்லேயென்று சொல்லுபோ ?

**பீம:**—இல்லே மாராசா! எங்களுக்கப்படியில்லே உத்திரவு! பேசாமே வந்துடுங்கோ ! (மெள்ளப்போசன் கையைப்பிடித்தல்.)

**போஜ:**—(கையை உதறிக்கொண்டு) சீ ! விடு !! உனக்கென்ன காலங்கிட்டிக்கொண்டதோ ? மூடா ! நீயோ என்னேப்பிடிக்க வல்லவன் ? (பீமன் தவடையில் ஓரறையறைதல்.)

**பைர:**—(முகத்தைக் கடுத்துக்கொண்டு) என்ன மாராசா ! அவனேப்பூந்து அடிக்கிறீங்க ! சும்மா சூரியா வந்துட்டா நல்லது. (போசனுடைய தோள்களேயும் மார்பினேயுஞ் சேர்த்துக்கட்டுதல்).

**போஜ:**—(ஒரு விசிறுவிசிறிப்பைரவனேத் தூக்கித் தள்ளிவிட்டு) சீ!சீ! மடையர்களே ! நம்மையாவது நீங்கள் கட்டுவதாவது! ஏதோ சும்மா இருக்கின்றேனென்று பார்க்கின்றீர்களோ ?

**பைர:**—(அழுதுகொண்டே எழுந்து) மாராசா ! பொறுத்துக்கிறவேணும் ! நாங்க என்னசெய்வோம் ? உங்களேப்பிடிச்சுக்கிட்டுப் போகாவிட்டால் எங்கதலே போய்விடும். இதோ பாருங்கோ! சேனாதிபதியவங்கஅப்படித்தான் உத்திரவு பண்ணி யிருக்கிறாங்கோ ? (மடியிற் சொருகிவைத்திருந்த பத்திரிகையை எடுத்து நீட்டல்.)

**போஜ:**—(பீமன் வெளிச்சங்காட்டப்பத்திரிகையை வாங்கிப் படித்துவிட்டு) பாவம்! இவர்கள் என்ன செய்வார்கள்! வத்ஸராஜர் தாம்

என்ன செய்வார்? சொன்னதைச் செய்பவர்கள்தாமே சேவகர்கள்? (பிரகாசமாய்) சரி! இப்பொழுது என்ன செய்யவேண்டுமென்கிறீர்கள்?

**கிங்கரர்கள்:**—மாராசா! தாங்கமன்னிக்கணும்! சேனாதிபதியவங்க உங்களைக் கூட்டிக்கிட்டு வரச்சொன்னாங்கோ! நீங்கதான் எங்க உயிரைக் காப்பத்தணும்!

**போஜ:**—சரி! கூடவரவேண்டுமா? அப்படியே வருகின்றேன்! நீங்கள் விலகி நில்லுங்கள்! (அவர்கள் அப்படியே விலகிற்க, காளிதாசனை நோக்கி) சகே! யான் வத்ஸராஜரிடம் அவசியமாய்ச்செல்லவேண்டியிருக்கின்றது. உனக்கு நித்திரைக்காலமாகின்றது! நீ வீட்டிற்குச்செல்? யான் போய்வருகின்றேன்!

**காளி:**—இராஜ குமாரா! நீ தனியே செல்வதில் அபாயமிருக்கின்றது! நானுமுன்னுடன் வருகின்றேன்!

**போஜ:**—நண்பா! நீ வருவது தகுதியன்று! வத்ஸராஜர் எதற்காக என்னை யழைத்துக்கொண்டு வரச்சொன்னரோ? தடைசொல்லவேண்டாம்!

**காளி:**—இராஜகுமாரா! வேறென்ன யிவ்வேளையில் இருக்கப்போகின்றது! நிச்சயமாய் உன் தலைக்கே கேடுநேரிடுமென்று தோன்றுகின்றது.

**போஜ:**—எப்படியிருப்பினும் யான் போகவேண்டும். பாவம்! என்னிமித்தமிவர்களேன் உயிரிழக்கவேண்டும்? நான் சீக்கிரத்தில் திரும்பிவருகின்றேன். நீபோ!

**காளி:**—என்னவோ! எனக்கொன்றும் யுக்தமாகத் தோன்றவில்லை!

**போஜ:**—சகே! நீயிதைப்பற்றிக்கவலைப்படவேண்டாம். யான்போய் வருகின்றேன்! (கிங்கரர்களை நோக்கி) வாருங்கள், போவோம்! (மூவரும் நிஷ்கிரமித்தல்).

**காளி:**—சரி ! ஏதோ கேடு சம்பவிக்குமென்பதில் ஐயமில்லை. எதற்கும் நாமும் இவர்களுடன் மறைந்து செல்வோம். வத்ஸராஜர் **போ**ஜனுக்குத் தீங்கிழைப்பாரென்று யான் நினைக்கவில்லை. எதற்கும் ஈசனிருக்கின்றான். யானும் தெரியாமல் அவர்கள் பின்னேயே செல்கின்றேன் ! (நிஷ்கிரமித்தல்.)

## மூன்றாங்களம்.

---

**இடம்.—காளிகாபரமேசுவரி வனத்தில் ஒருவத்தியஸ்தலம்**

**வத்ஸராஜர்** ஒருபுறம் நிற்க இரண்டு கிங்கரர்களால் நடத்தப்பட்டு **போஜன்** பிரவேசித்தல்).

**பைரவன்:**—மாராசா ! சேனாதிபதியவங்க இதோ இருக்கிறாங்கோ !

**பீமன்:**—இப்படி வாங்க மாராசா !

**போஜன்:**—(வத்ஸராசன் அருகிற்சென்று) வத்ஸராஜரே! நீர் எம்மை யிவ்விருளில் இக்கிங்கரர்களைக்கொண்டு இந்நிர்ஜ்ஜனமான வனத்திற்கு வரவழைத்த காரணம் யாது ?

**வத்ஸராஜன்:**—இளவரசே ! இதோ இப்பத்திரிகையைப் பிரித்து வாசித்துப்பாரும் ! (சாஸநபத்திரிகையை நீட்டல்).

**போஜ:**—(அதைவாங்கி) என்ன! என்சிறிய தகப்பனார் எழுதியனுப்பியதோ ?

**வத்ஸ:**—ஆம் ! இளவரசே !(தலையசைத்தல்).

**போஜ:**—அப்படியா ? (கடிதத்தைப் பிரித்துப்படித்தல்).

**வத்ஸ:**—(வீசனத்துடன், ஆன்மகதமாய்) ஐயோ ! என்னகொடுஞ்செயல் புரியும்படி வாய்த்தது. . . . . . . . . . . . . .

**போஜ:**—(தைர்யத்துடன், ஆன்மகதமாய்) ஆ! தெய்வமே! இது யான் சிந்துலருக்குப் பிள்ளையாய்ப்பிறந்ததன் குற்றமோ? ஆ! சிற்றப்பா! உன் தந்திரமே தந்திரம்!! இவ்வற்ப ராஜ்ஜியத்திற் காசைப்பட்டு என்னென்ன வெல்லாம் செய்யத் துணிந்தனை? யான் கொலையுண்டு இறப்பதற்காகச் சிந்திக்கின்றேனல்லேன்! விஷங்கொடுத்து விலாஸவதியையான் கொல்லமுயன்றதாக நீ என் மீது குற்றம் சாட்டினதற்கொன்றுக்கே வருந்துகின்றேன். ஐயோ! இவ்விராஜ்ஜியத்தை நீயே ஆளவேண்டுமென்று ஒரு வார்த்தை வெளியிடில் இப்பரதகண்டம் முற்றும் உனது சாசனத்துக்குள் அடங்கியதாகச் செய்வேனே! அப்படியிருக்க, இவ்வாறு அநியாயமாய்ப் பொய்க்குற்றஞ்சாட்டி என்னைக் கொல்லத்துணிந்ததே உன்மனம்! ஆ ஆ! என்னவன்மை! என்ன கொடுமை!

*"மன்னுபுகழ் பெற்றுமுதல் யுகத்தி லார்ந்த
மாந்தாதாவெங்கேநீர்க் கடலடைத்துத்
தென்னிலங்கை மேவியிரா வணனைச் செற்ற
தேர்க்கதிரோன் குலத்திலகை ராமனெங்கே?
இன்றுமிகற் பாண்டவரே முதலயாரு
மெய்தினரவ் விண்ணுலக மிறந்து மன்னு!
அன்னவரோ டிவ்வவனி சென்றதில்லை
யாயினுமிஃ துன்னுடனே போகுமெய்யே!! ( )

**வத்ஸ:**—இராஜகுமாரா! இக்கடிதத்தை முற்றும்படிக்கவில்லையோ?

**போஜ:**—(வெறுப்புக்கொண்டு) இக்கடிதத்தையா? (பெருமூச்செறிந்து) ஆ ஆ! படித்தனென்! என் தலையைவெட்டி விடுவதற்காகத்தான் தாமென்னை இவ்விடத்திற் கழைத்துவரச் சொன்னீர்போலும்?

---

* போஜராஜ சரித்திரம்.

வத்ஸ :—ஆம்! அக்கடிதத்தில் எழுதியிருக்கிறபடியே தான் யான் நடக்கவேண்டியிருக்கிறது.

போஜ :—வத்ஸராஜரே! என்னையோ ஒருவன் தலைவாங் கிவிடத்துணிவன்? இவ்விராஜ்ஜியத்திற்குரியவனும் சிந்து லமஹாராஜருடைய ஏகபுத்திரனுமான என்னை இந்நடுராத்தி ரியில் இக்கோரமான வனத்திற்குத் தனியாய்க்கொண்டு வரு வதற்கும் ஒருவனுக்கு வல்லமையுண்டோ? (கோபத்துடன்) அஹஹ! என்னுடைய பிராணனை வாங்கத்தக்க சக்தியுள்ள வீரனும் இவ்வுலகிலிருக்கின்றனனோ?

* "கூடிய வேழத்தைக் கொன்றிழி சோரியே
பாய வாய்மடுத் தல்கந்திச் செம்மதிச்
சீய வாயிற் செறிபற் பிடுங்கிட
மேய சிந்தை விரும்புநன் யார்கொலோ?"

அஹோ! என்ன காலத்தின்மகிமை! என்றுங் காணாதது காணப்படுகின்றது! என்றுங் கேளாதது கேட்கப்படுகினறது!

* 'கோனந்த் ரன்குலக் கானம் கொளுத்துமென்
மான மார்சின வாளெரி யூடுபோய்த்
தானந் தம்முற் றுச் சாவுஞ் சலபம்போ
லூன மெய்துமா றுள்ளிழை மூடன்யார்?'

வத்ஸ :—இளவரசே! யான் என்செய்வேன்? இரா ஜாஞ்ஞைக்கு இணங்கி நடக்கவேண்டியரல்லரோ சேவகர்கள்?

போஜ :—ஸர்வேசுவரனுடைய ஆஞ்ஞையாயிருப்பினும் நீரென்னைக்கொல்ல உடன்படுவது நியாயமோ? உமக்கு யான் செய்த பேருதவியையும், என் பிதா சிந்துலமஹாராஜர் செய்த நலத்தையும், நீர் மறந்துவிடுவீரென்று யான் கனவிலும் நினை யேன்.

* முத்திரா ராட்சசம்.

வத்ஸ :—இளவரசே! உமது சிரத்தை இன்றிரவிற்குள் வாங்கிவிடுவதாக மஹாராஜாவினிடம் வாக்குக்கொடுத்துவிட்டேன். அதைத் தப்பாமற் செய்தேதீரவேண்டும்!

போஜ :—அடே! மூடா! என்னைத் தொடுவதற்கும் உனக்குச் சக்தியுண்டோ? (வத்ஸராஜனரைக்காலாலுதைத்தல்).

வத்ஸ :—(போஜனதுகாலை வணக்கமாய்ப்பிடித்துக்கொண்டு) இளவரசே! என்னை மன்னிக்கவேண்டும்! அப்படிச்செய்யாவிடில் என்தலை போய்விடும்.

போஜ :—எப்படியிருப்பினும், என்னைக் கொலைசெய்ய உமதுமனமுந் துணியுமோ?

வத்ஸ :—இளவரசே! ஸகல நியாயங்களையுமறிந்த தமக்கு யானென்ன சொல்லப்போகின்றேன்!

"ஸ்வாம்யுக்தே யோ ந யததே
ஸ ப்ருத்யோ ப்ருத்யபாசக:,
தஜ்ஜீவநமபி வ்யர்த்தம்
அஜாகள குசாவிவ!"

என்று தாங்கள் கேட்டதில்லையோ?

போஜ :—ஆயின், என்ன செய்யவேண்டுமென்கின்றீர்?

வத்ஸ :—இறப்பதற்குச் சித்தப்படுத்திக் கொள்வீரென்று பிரார்த்திக்கின்றேன்.

போஜ :—(ஆச்சரியமாய்) ஹா! ஹா! வத்ஸராஜருமா என்னைக்கொல்லத் துணிந்துவிட்டனர்! (பெருமூச்செறிந்து சற்றுயோசித்து வைராக்யமடைந்துகொண்டு) ஹா தெய்வமே! நினது குடிலமான சக்தியை யானென் சொல்வேன்!

கடல் நிலமாக நிலம் கடலாக
அணுமலையாக மலையணுவாக
திருணம் குலிசமா குலிசந்திருணமா
நெருப்புத் தண்ணீதாத் தண்பனிவெப்பமா

அன்பரைப் பகைஞரா வறவோரல்லரா
ஆக்கு நின்குடில வற்புதலீலையால்
மாக்களிப் பெய்தும் வன்பரம் பொருளே!
உன்வலி நினைத்த பே ருள்ளமு நடுங்குமே!

நல்லது! எனது கெட்டகாலத்திற்கேற்றபடி இவரது மனமு மென்னைக் கொல்லத்துணியும். (பிரகாசமாய்) வத்ஸராஜரே! உமக்கே என்னைக் கொல்லுவதற்கு மனம்வரும்பொழுது யான் கொலையுண்டிறப்பதற்கஞ்சேன். இதோ கற்பதுமைபோல் அசையாமல் நிற்கின்றேன். வெட்டிவிடும்! இக்கிங்கரர்கள் மாத்திரம் என்னைத்தொடாமல் விலகி நிற்கட்டும்.

வத்ஸ :—அடே! நீங்கள் அப்புறஞ்சென்று நில்லுங்கள்! நானே இக்காரியத்தை நடத்திவிட்டுவருகின்றேன்!

கிங்கரர் :—(மறைவாய்) இங்கே நடக்கப்போகிற கொடுஞ் செயலை நேரே நின்று பாராமல் அப்புறம் போவதே நலம். (இருவரும் நிஷ்கிரமித்தல்)

வத்ஸ :—ராஜகுமாரரே! நேரமாகின்றதே!

போஜ :—(மிருதுவாய்) இதற்கு வேறு பரிகாரமொன்று மில்லையோ?

வத்ஸ :—என்தலையைப் பதிலாகக்கொடுப்பதைவிட வேறுபரிகாரம் யாதுமில்லை.

போஜ :—ஈசா! இதுவும் நின்கருணைவிலாசமோ?

* "அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்கும்
திங்களுந் தீங்குறுதல் காண்டுமால் - பொங்கி
அறைப்பா யருவி யணிமலை நாட
உறற்பால யார்க்கு முறும்."

* "பண்டுருத்துச் செய்த பழவினை வந்தெம்மை
இன்றொறுக் கின்றதெனநினையார்-துன்புறக்கு

* பழமொழி.

மேவலரை நோவதென்? மின்னோர் மருங்குலா
யேவலா ளூருஞ் சுடும்."

* "மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர் - நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத் தூற்றப்பட் டாரல்லா
லெஞ்சினா ரிவ்வுலகத் தில்."

* "நார்த்தொடுத்தீர்க்கிலென் னன்றாய்ந்தடக்கிலென்?
பார்த்துழிப்பெய்யிலென் பல்லோர்பழிக்கிலென்
தோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டக் கால்!"

(தைரியத்துடன்) வத்ஸராஜரே! நடத்திவிடலாம் ராஜாஞ்ஞையை! உமக்காக இறப்பதற்கு யானிதோ சித்தமாகவே யிருக்கின்றேன்! (தலையைக்குனிந்துகாட்டல்)

வத்ஸ :—(கத்தியையுருவப்போகப் பிரமித்து அதனை நழுவவிட்டு) ஆ ஆ! பிராணத்தியாகஞ் செய்யும்பொழுதுகூட வாடாத முககாந்தியும் ஒடாத வீரசக்தியுமுள்ள நயனுபிராமனான இப் போஜகுமாரனை யான் எப்படிக் கொல்வேன்?

(பிரவேசித்தது.)

காளிதாசன் :—(பரபரப்புடன்) வத்ஸராஜரே! இஃதென்ன காரியம்? கேவலம் அசேதனமான பொருள்கள்கூட இக்கொடுஞ்செயலைப் புரியத் துணியாமலிருக்க, சகல தர்மங்களையு மறிந்த தாமே இதைச் செய்யப்புகுதல் நன்றோ? கல்லினுங் கடினமான இக்கட்கத்திற்கே உம்மைவிட இரக்கமதிகமாயிருக்கின்றதே! க்ஷத்திரிய வம்சத்திற்சனித்தும் தாமிப்படிக் கொலைசெய்யப் புகுவது சரியன்று. ஒரு நிரபராதியான சாது

* நாலடியார்.

வைக்கொல்வது தமது பராக்கிரமத்துக்கும் பிரக்யாதிக்கும ழகோ? தமது பரிசுத்தமான வம்சத்திற்கடுக்குமோ? அபகாரம் புரிந்தவர்களுக்கும் உபகாரஞ்செய்வதன்றோ தம்மைப்போன்ற பெரியோர்களுக்கிலக்ஷணம். ஒரு குற்றமுஞ்செய்தறியாத இவ்விராஜகுமாரனைக்கொன்று விடுவதனுல் தாம் அடையும் பயன்யாது? ஆ ஆ! கம்பாதத்தின் விருத்தாந்தத்தைத் தாம் கேட்டிலீரோ? அறிவில்லாத பறவைகள்கூடத் தமக்கபகாரியான சத்துருவையே தம்பிராணனைக்கொடுத்தாயினுங் காப்பாற்றும்பொழுது, பகுத்தறிவுள்ளவர்களாயும், இராஜவம்சத்திற் பிறந்தவர்களாயும், புண்ணியபூமியில் வசிப்பவர்களாயும், சகல தர்மங்களையுமறிந்தவர்களாயுமுள்ள தம்போன்றவர்கள் புத்திரன் போன்ற நிரபராதியான இவ்விராஜகுமாரனைக் கொல்வது தக்கதன்று?

* "கற்றவர் கடவுட் டானஞ்
சேர்ந்தவர் கலைக ளில்லா
ரற்றவ ரந்த ணாள
ரன்றிப மகளிர் போல்வார்க்
குற்றமே தா ரிடுக்கண் வந்தா
லுதவுதற் குரித்தன் றாயிற்
பெற்றவில் வுடம்பு தன்னாற்
பெரும்பய னில்லை யன்றே!" (கூக)

ஆகலின், தாம் ஒருவேளை, இக்கொடுங்கோலரசனுக்குப்பயந்து மோகத்தினுலாவது அவிவேகத்தினுலாவது, நிரபராதியான இப் போஜகுமாரனைக் கொன்று விடுவீராயின் தமக்கு மகா கோரமான பாதகங்கள் நேர்ந்துவிடும்.

மானியைக்குற்ற மின்றி
மாய்ப்பவர் நரகந் தன்னில்,

* சூடாமணி.

வானமுள்ளளவும் வீழ்ந்து
மனம்வெந்து தவிக்கிற்பாரே! (கூ௨)

என்று தர்மசாஸ்திரங்களெல்லாம் முறையிடுகின்றனவல்லவோ? இக்கொலைபுரிவதானது தம்மை யழிப்பதுமன்றித் தம்குலத்தையும் பலத்தையும், இகத்தையும் பரத்தையுங்கூட நாசஞ்செய்துவிடும்.

(௭) இராகம் - சாவேரி - தாளம் - ஆதி.

பல்லவி.

விடும் விடும் கொடுமையை !விறையேனையா
படுநரகில்வீழப் - பார்க்கின்றீர் !

அநுபல்லவி.

அடுக்குமோ தமக்கிந்த-அறியாத பாலகனைப்
பிடித்துவதைச்செய்துப்-பெருங்கொலைபுரிவது ? — விடும்.

சரணம்.

இறந்தபின் நம்முடன்-எவைவருமறமின்றி ?
அறத்தினும் மேலான - ஆப்தனுண்டோ சொல்வீர் !
தருமமொன்றே நம்மைத் - தாங்கித்தலை காக்கும்
அருமை நேசனைப்போல - அங்குமிங்குமெங்கும்!-விடும்.

ஆகலின் தாம் எப்படியாவது இக்கொடிய காரியத்தை நீக்கி இளவரசரைக் காப்பாற்றவேண்டும்.

போஜ:—சகே! காளிதாசா! நீ ஏன் இத்துக்கத்தைப் பார்க்கவந்தனை ? இது இவருடைய பிழையன்று! எல்லாம் விதியின் செயல் !

(௮) இராகம்-பியாகடை - தாளம் - ரூபகம்.

பல்லவி.

விதியின் செயலன்றோ - வீரர்களழிவது !
விதியைவெல்லவும்போமோ ?

அநுபல்லவி.

பதியாம் கண்ணனைக்கொண்ட - பாண்டவர் நொந்ததும்
மதியிற் சிறந்தபலி - மாலாற்கட்டுண்டதும்— விதியின்.

சரணங்கள்.

இராமன் கானகஞ்சென்று - இனியாளைப்பிரிந்ததும்
இராவணனடியோடே - இலங்கையிலழிந்ததும்— விதியின்.
நளமகாராஜன் தன் - நாட்டையிழந்ததும்
களங்கமில்லாச் சந்த்ரன் - கட்டழிந்திருந்ததும்— விதியின்.
சேனைத்தலைவர்நீது - சிறிதேனுங் குற்றமில்லை
போனஜன்மத்தில் யான் - புரிந்தவினை ஈது ! விதியின்.

(வத்ஸராசனை நோக்கி) வத்ஸராஜரே ! ஏன் இன்னுந்தாமதம் ? உமது கடமையை நடத்திவிடும். (திரும்பியுந் தலையைக்குனிந்து காட்டல்.)

வத்ஸ:—(ஆன்மகதமாய்) ஆ ஆ ! என்னகோரமான பாவத்தைச் செய்யத்துணிந்தேன். அதற்கென்றேகொண்டுவந்த இக்கட்கங்கூட இக்கொடுஞ்செயலைப் புரியவஞ்சி என் கரத்திலிருந்து என்னை வேண்டிக்கொள்வது போற் கீழே வீழ்ந்து வணங்கும்பொழுது, யான் எவ்விதக்கொடும் பாதகத்துக்குடன்பட்டேன். யுத்தத்தில் ஒருமுறை என் பிராணனையேகாப்பாற்றின இம்மகானுபாவனையோ கொல்லத்துணிந்தேன் ! என்னைச் சுடவேண்டும் ! இனி என்னுயிர்போயினும், இந்திரபராக்ரியான இராஜகுமாரனைக்கொல்லேன் ! (போசனை நோக்கிப் பிரகாசமாய்) இளவரசே ! என்னை மன்னிக்கவேண்டும் ! இதே கட்கத்தினால் உன்னைக்கொன்றுவிட்டு, உன்தலையைக்கொண்டுவந்து ஒப்புவிப்பதாக அச்சண்டாளன் முஞ்சனுக்கு யான் உறுதிமொழி கொடுத்துவந்தபோதிலும், அவன் தனதாஸ்தியெல்லாமெனக்கே கொடுக்கின்றேனென்று சொன்னபோதிலும், யானினி உன்னைக்கொல்லேன் ! அபயந்தந்தேன் ! எழுந்திரு ! எழுந்திரு !!

காளி:—இப்பொழுது தான் உம்மைப்பார்த்தால் வத்ஸராஜரென்று தோன்றுகின்றது. இவ்வளவு நேரம்வரை யாரோ ஒரு கொடிய கொலைபாதகன் போலிருந்தீர் !

போஜ:—வத்ஸராஜரே! இது சரியன்று! பேசாமல் ராஜாஞ்ஞையை நடத்திவிடும். பிறபாடு உமது தலைக்கே கேடுசம்பவிக்கும். எனக்காக நீர் உயிரிழப்பது தகுதியன்று!

வத்ஸ:—இளவரசே! உனது நற்குணத்தையான் எவ்வாறு புகழ்வேன்? நீ யொன்றுக்கும் பயப்படவேண்டாம். என் தலைபோனபோதிலு முன்னைக்கொல்லேன். இது நிச்சயம். எழுந்திரு! எழுந்திரு!!

போஜ:—நீர் இறக்க யான் உயிர்த்திரேன்! முடித்துவிடும் அரசனது கட்டளையை! வீணாய் இராஜதண்டனைக்கிடமாவீர்!

வத்ஸ:—ஐயோ! இத்தர்ம சங்கடத்திற் கென்னசெய்வேன்? ஒன்றுந் தோன்றவில்லையே!

காளி:—வத்ஸராஜரே! ஒரு சங்கடமுமில்லை! யான் சொல்லும்படி செய்வீர்களாயின் ஒருவருக்குங்கெடுதியுண்டாகாது!

வத்ஸ:—அஃதென்ன? அஃதென்ன?

காளி:—நீர் போஜகுமாரரைக் கொன்றுவிட்டதாகவே ஒரு கிருத்ரிமமான சிரசைக்கொண்டு காட்டி அரசனிடத்தில் மெய்ப்பித்துவிடும். இளவரசரும் மாறுவேஷங்கொண்டு சில நாள் வெளியிற்சஞ்சரிக்கட்டும். நாமதற்குப்போஜகுமாரரை இராஜ்ஜியத்தில் ஸ்தாபிக்கத் தகுந்த யோசனைசெய்வோம்.

வத்ஸ:—காளிதாசா! இது தகுந்தயோசனையே! இப்படிச் சிலநாள் நம்மிளவரசர் மறைந்திருப்பாராயின் யானும் சீக்கிரத்திலேயே அவரை இந்நாட்டில் நிலைநாட்ட நன் முயற்சி செய்கின்றேன்.

காளி:—இராஜகுமாரா! நீ இவ்வாறு செய்வது நலமெனத்தோன்றுகின்றது. நீ யொன்றுக்குமஞ்சவேண்டாம்.

நான் உயிருடனிருக்கும் வரையில் அப்பாதகன் முஞ்ஜனைத் தண்டிக்காமல் விடுவதில்லை.

வத்ஸ்:—இராஜகுமாரா! உனது நண்பன் சொன்னவாறே முடித்துவைக்காவிடில் யான் வத்ஸராஜனல்லேன்.

போஜ:—இத்துர்ப்பாக்கியனை என்னிமித்தமாய்நீங்கள் வருத்தமடைவது நியாயமன்று. எனக்கிவ்விராஜ்ஜியத்தைப் பெறவேண்டுமென்னுமவா எப்பொழுதுமிருந்ததில்லை. என்சிற்றப்பனே இவ்விராஜ்ஜியத்தை யாளட்டும். யான் எங்கேயாகினும் வேறு நாடுசென்று என் வாழ்நாட்களைத் துறவியாய்க் கானகத்திற்கழிக்கின்றேன். என் சிறியதந்தையாருக்கொருகெடுதியும் செய்யவேண்டாம்! யான் போய்வருகின்றேன்! உங்களிருவருக்குமனேகவந்தனம்.

காளி:—சகே! யானுன்னை எப்படிப்பிரிந்திருப்பேன்? நீ எங்கே சென்ற போதிலும் உன்செய்தியை மாத்திரமெனக் கடிக்கடி தெரிவித்துக் கொண்டிருக்கவேண்டும். நான் அதிசீக்கிரத்திலேயே இவையெல்லாம் நமதுஆசிரியருடன் சொல்லி, உன்னை இவ்விராஜ்ஜியத்தில் ஸ்தாபிக்கும்படி தக்க முயற்சிசெய்கின்றேன். எதற்கும் நீ இவ்வேஷத்துடன் செல்வது தகுதியன்று. இதோ இக்காவியங்கியைமேலே தரித்துக்கொள்! (தான் போர்த்திருந்த காவியங்கியைப் போசனிடங்கொடுத்தல்).

போஜ:—நண்பா! என்னை இம்முறையும் நீயே காப்பாற்றினாய்! இப்பேருதவிக்கு யான் என்னகைம்மாறு செய்யப் போகின்றேன். உனக்குஎன் னுயிரையே அர்ப்பிதஞ்செய்தாலும் போதாது. யான் இந்நாட்டிற்குள்வராமலேயே வேறு எங்கேயாகினும் சென்று சிலநாள் கழிக்கின்றேன். (கண்களில் நீர்பெருக, காளிதாசனைத்தழுவி) காளிதாசா! பிராணநேசா! யான் போய்வருகின்றேன்! வத்ஸராஜரே! யான் போய் வருகின்றேன்!!

(நிஷ்கிரமித்தல்)

காளி:—(சிறிது நேரம் கண்ணீர் ததும்ப, போசன்போகும் வழியை நோக்கி) வத்ஸராஜரே! போஜகுமாரரை இவ்விராஜ்ஜியத்தில் நிலைநாட்டத்தாம் தக்க உதவிகள் புரியவேண்டும். யானும் புத்திசாகரரிடஞ்சென்று இதைப்பற்றியோசிக்கின்றேன்.

வத்ஸ:—(மனம் நொந்து) காளிதாசா! நம்மிளவரசருக்காக எவ்வித உதவிகளையுஞ்செய்ய யான் சித்தமாயிருக்கின்றேன்! அதற்கத்தாட்சியாக இதோ என்கையடைகொடுத்தேன்.

(இருவரும் நிஷ்கிரமித்தல்.)

---

## நான்காங் களம்.

---

இடம்.—தாரைநகர்: ஸாவித்திரீ தேவியின் அரண்மனை வாயில்.

ஸாவித்திரீ தேவியார் தரங்கவதியுடன் பேசிக்கொண்டு மேன்மாடத்திலிருந்தபடி பிரவேசித்தல்.

தரங்கவதி:—(ஸாவித்திரீ தேவியாரை நோக்கி) அம்மணீ! தங்கள் அருமைப்புதல்வர் நேற்றிரவு விலாஸவதி தேவியின் அந்தப்புரத்திற்குச் சென்றனராமே? என்ன செய்தியோ?

ஸாவித்திரீ:—(சந்தோஷத்துடன்) ஆமாமடி! நேற்றுத்தான் அவனுக்கு இந்நற்புத்தி தோன்றியது. இதுவரை அப் புத்திசாகரர் பேச்சைக் கேட்டுக்கொண்டு என் கண்மணி விலாஸவதியைக் கொஞ்சமேனுங் கவனித்தானல்லன். அப்படியிருந்தும் அப் பெண்மணி அவன் மீது விரோதமாய் ஒருவார்த்தை சொல்லுவாளல்லள்! அவளைப் பொறுமையிற் பூமிதேவி யென்றே சொல்லவேண்டும்.

தாரங்க:—ஆமாம் அம்மணி! அவர்களைத் தர்மதேவதை யென்றே கொள்ளவேண்டும். கபடமென்பதே அவர்களுக் கின்னதென்று தெரியாது. ஆ ஆ! அப்புண்ணியவதிக்குச் சமானமாக யாரைச் சொல்லலாம்! கல்வியிற் கலைமாதே! அறநெறியில் அருந்ததியே! கருணையிற் கௌரியே! எழிலில் இந்திராணியே! அப்பெண்மணியின் நன்னடக்கை மற்றவர் களுக்குத் தவஞ்செய்தாலும் அமையுமா? அவர்கள் பத்தரை மாற்றுத்தங்கம்! பதிவிரதா சிரோமணி! மஹாலக்ஷ்மிக்கும் இவர்களுக்குமென்னபேதம்?

* "மண்மடந்தையர் தம்முளும்
வாசவனுறையும்
விண்மடந்தையர் தம்முளு
நிகரிலா விறல்வேற்
கண்மடந்தையர் தங்குழு
லருந்ததி கற்பிற்
பெண்மடந்தை கருப்புடையளிந்
திரையினு மெழிலாள்!" (௩௩)

ஸாவி:—அதற்கு ஐயமுண்டோ? என் செல்வ மரு மகளைப்போலத் தேடக்கிடைக்குமா? அம்மாதாரசியை யான் மருமகளாய்ப் பெற்றது என்னுடைய பாக்கியமே! அவளு டைய விநயத்தையும் ஸௌஜந்யத்தையும் யான் என் சொல் வேன்? அவள் எங்களுக்கு மருமகளா? அன்று அன்று! எங்கள் குலதெய்வதமே இப்படி உருவெடுத்து வந்திருக்கின்றது!

தாரங்க:—ஆமாம், அம்மணி! அவர்கள் தீண்டா நெருப்பு! அவர்கள் மீது ஈஷத்தாயினும் தோஷமுரைக்க முடியுமோ!

ஸாவி:—இவள்மீது தோஷஞ்சொன்னால் நாவழுகிப் போமே! இவள் மழையை நோக்கிப் பெய்யென்றாற் பெய்யும்!

* அரிச்சந்திரபுராணம்.

வெயிலை நோக்கிக்காயென்றாற் காயும்! அவளுடைய சௌந்தரியத்தையானென்ன வர்ணிப்பேன்!

* "பயிர்கரிந்தனவும் பட்டமாமரமும்
பண்டைநாளுக்க வெள்ளென்பு
முயிர்பெறற் பொருட்டுப் பளிதமும்பாலு
மொழுகிய தேனுமா ரமுதுங்
குயிலினிற் குரலுங் கிளியினின் மொழியுங்
குழலும்யா ழுங்குழைத் தழைத்து
மயிலியற் சாயல் வாணுத றனக்கு
மலரயன் வகுத்ததேன் மொழியாள்!" ()

இத்தனை நாளாய் இப்படிப்பட்ட வநிதாரத்நத்தை மணந்தும் பார்க்கக்கூடத் தோன்றாமற் போயிற்றே என் போஜனுக்கு!

தரங்க:—அவர் என்ன செய்வார்? எல்லாம் நம் மந்திரியார் செய்யுங் காரியந்தான்!

ஸாவி:—ஆம்! அவர்தாம் இச்சம்பந்தத்திற்கு ஆதிமுதல் ஆக்ஷேபமாய் நின்றார்! தெய்வாதீனம்! என் மைத்துனரே இதனை முன்னின்று முடித்துவைத்தார்.

(நேபத்தியத்திற்குட் கலகலசப்தம்).

தரங்க:—(செவிகொடுத்து) இருங்களம்மணீ! நமது அரண்மனைவாயிலண்டையில் எதோ சப்தமொன்று கேட்கின்றது!

ஸாவி:—(செவிகொடுத்து) ஆமாமடி! இதென்னவோ திடீரென்று பெருங்கூச்சலாயிருக்கின்றது!

தரங்க:—(கீழே நோக்கி) அம்மணீ! இதோ ஒரு பெருஞ் ஜனக்கூட்டம் இறைச்சலிட்டுக்கொண்டு இவ்வழியேவருகின்றது பாருங்கள்!

---

* அரிச்சந்திர புராணம்.

ஸாவி:—(தரங்கவதியுடன் மேன்மாடத்தின் வெளித்தாழ்வாரத்திற்குச்சென்றுவுற்றுநோக்கி) இதென்னவோ பெருங்கோலாகலமாயிருக்கின்றதே! இப்பௌரர்களிற் சிலர் கட்கத்தையும், சிலர் பல்லத்தையும், சிலர் தோமரத்தையும், சிலர் பிராசத்தையும், சிலர் குந்தத்தையும், சிலர் பரசுவையும் கையிலெடுத்து வருகின்றனர்! என்னவோ அமர்க்களம் நேர்ந்ததுபோல் தோன்றுகிறது!

தரங்க:—ஆம் அம்மணீ! இவர்களது மத்தியில் வஜ்ஜிரத்தாலடியுண்டவர்போலும், பேய் பிடித்தவர்போலும், கண்ணீர் ததும்ப, தேகம் வெயர்க்க, கண்டம் கலங்க, ஆழ்ந்தகுரலுடன் என்னவோபேசிக்கொண்டு நமது மந்திரியார் புத்திசாகரர் பரபரப்புடன் இவ்வழியே வருகின்றார் பாருங்கள்!

ஸாவி:—என்ன செய்தியோ தெரியவில்லையே! என்னருமைச் செல்வன் இராத்திரி விலாஸவதியின் அந்தப் புரத்திற்குச் சென்றவன் உதித்து ஜாமப்பொழுதாகியும் இன்னும் இங்குத் திரும்பிவரவில்லையே! ஏனோ என் மனம் இவர்களைக் கண்டதுஞ் சஞ்சலப்படுகின்றது!

(பின் மேற்சொன்னவாறு அநேக பௌரர்கள் சுற்றித் தொடர்ந்துவர, புத்திசாகரர் பரபரப்புடன் பிரவேசித்தல்).

புத்திசாகரர்:—அந்தோ! இவ்வநியாயம் எங்கே அடுக்கும்! ஐயோ நான் நகரில் ஒருநாளிராமற்போய்விடில் எவ்வளவு காரியம் நடந்துவிடுகின்றது! பாவியான் இந்நகரை விட்டு ஏன் சென்றேன்? என் கண்மணி போஜனில்லாமல் இவ்வரண்மனை பாழாய்க் காணப்படுகின்றதே!

*'சுந்தரப் போஜனில்லாத்
தொல்லரண்மனையின் வாழ்வு
சந்திரனில்லா வானந்
தாமரை யில்லாப் பொய்கை

* விவேகசிந்தாமணி.

மந்திரி யில்லா வேந்தன்
மதகரி யில்லாச் சேனை
தந்திகளில்லா வீணை
தலையில்லா மங்கைபோலாம். (௩௫)

ஆ ஆ! என்ன நேரிடினும் போஜனை ஒருபொழுதுங் கைவிடேனென்று சிந்துலமஹாராஜருக்கு வாக்களித்தேனே! இப்போதுயான் என்செய்வேன்? என் வாக்குக்கு லோபம் வந்துவிட்டதே! சுவாமித் துரோகத்துக் காளாய்விட்டேனே! ஐயோ அப்பொழுதே அவனை விலாஸவதியினிடஞ் செல்லவேண்டாமென்று கட்டாயப்படுத்தாமற் போய்விட்டேனே! ஒருவேளை போஜன் எங்கேயாகிலுஞ் சென்றிருப்பனோ? சீ! இதென்ன வீண் மயக்கம்? அவன் செல்லத்தக்க இடமு மொன்றுண்டோ? நிச்சயமாய் அப்பாதகன் அவனைக் கொன்றுதான் இருக்கவேண்டும்! ஹே ஈசா! போஜன் பட்டத்துக்கு வருவானென்று நம்பியிருந்த இப்பேதையை இப்படிப்பரிதவிக்கச் செய்வது நின் திருவருளுக்கழகோ? ஆபத்பாந்தவன் அநாதரக்ஷன் என்னும் நினது ஸார்த்தகமான பெயர்கள் நிரர்த்தகங்களாகவாயினவோ?

பௌரர்:—ஐயா, என்ன? என்ன?

புத்தி:—ஐயோ! தர்மமென்பதே போய்விட்டதே! இனி இருள் மூடிவிடும்! உலகம் அழிந்துவிடும்! ஹரி! ஹரீ! அப்படிப்பட்ட உத்தமனுக்கே அக்கதிநேரிடில்—ஹா! (பெருமூச்செறிதல்)

பௌர:—ஐயா! என்ன செய்தியோ? நம் நகருக்கு ஏதாயினுங் கஷ்டகாலம் நேர்ந்ததோ?

புத்தி:—கஷ்டகாலமா! இராஜவதம்! ஸத்தியவிநாசம்! அதர்மவிஜயம்!

ஸாவி:—(கேட்டு) ஐயோ! இவரது வார்த்தை ஒவ்வொன்றும் என் மனத்திற் புதிதுபுதிதாய்ச் சங்கடங்களை யுண்டுபண்ணுகின்றதே! என் செல்வன் க்ஷேமமாயிருப்பனோ!

பௌர:—அந்தணர்சிகாமணியே ! தாம் உரைப்பது எங்களுக்கொன்றும் புலப்படவில்லையே ! தம்முடைய முகத்தைக் காணும்பொழுதே ஏதோ பெரும் ப்ரமாதமொன்று நேரிட்டிருப்பதாய் விளங்குகின்றது !

புத்தி:—(கண்ணீர் சொரிய ஆழ்ந்தகுரலுடன்) ஏ ராஜகுமாரா ! உன்னைவிட்டு மிந்நகரத்துளோர் உய்ந்திருப்பரோ ?

ஸாவி:—(விசனத்துடன்) அந்தோ ! என் கண்மணி போஜனைப்பற்றி தான் இவர் கூறுகின்றனரோ ?

தரங்க:—அம்மணீ ! அமங்களமுரையாதீர்கள் !

பௌர:—நம்மினவரசர் போஜகுமாரரா ? அவருக்கு வந்த ஆபத்து என்னவோ ?

புத்தி:—(துக்கத்தினற் கத்கத ஸ்வரத்துடன்)

*"இன்றுதாரை யிழந்தது காப்பினை !
துன்றுநாமகள் சோர்வினளாயினள் !
ஒன்றுபாவலரி யாவரு மூன்றினர் !
என்றுபோஜனவ் விண்ணினையெய்தவே!" (கூக)

ஸாவி:—(கேட்டுச்சோகாக்கிராந்தையாய்) ஹா ! சிந்துலராஜகுலதிலகா ! நீயோ விண்ணுலகம் புக்கனை? (மூர்ச்சித்துத் தரங்கவதிகையிற்றாங்கப்பட்டு வீழ்தல்).

தரங்க:—தேவீ! ஆற்றுதலடைவீர் ! ஆற்றுதலடைவீர் ! !
(ஓடிச்சென்று விசிறிகொண்டு வீசுதல்).

பௌர:—ஹா! ஹா!! ஹா!!! என்ன! என்ன!! என்ன!!! எப்படி ! எப்படி !! எப்படி !!! என்ன கொடுமை ! என்ன கொடுமை!! என்ன கொடுமை !!! சீ ! தெய்வத்திற்குக் கண்ணில்லை !

* போசராச சரித்திரம்.

**தரங்க:**— இதுவும் வாஸ்தவமாயிருக்குமோ? நேற்றுக்கூட யான் அவரைப் பார்த்தேனே! ஏதக அசௌக்கியங்கூட வொன்றுமில்லையே! இப்படித் திடீரென்று இறப்பதற்குக் காரணமென்ன? இதில் ஏதோ மோசமிருக்கவேண்டும்!

**பௌர:**—அவர் எப்படி இறந்து விட்டனரோ?

**ஸாவி:**—(பிரமை கொண்டவள்போல் எழுந்து) ஹா! புத்திரகா! புத்திரகா!! புத்திரகா!!! நீ இம்மாநிலம் முழுதும் ஆளுவாயென்று எண்ணியிருந்தேனே!

**புத்தி:**—அந்தோ! அவர் இறந்தவிதத்தை நீங்கள் அறிவீர்களாயிற் சும்மாவிரீர்கள்! கொலையுண்டன்றோ பரதேசியாய் இறந்தனர்!

**பௌர:**—ஹா! ஹா!! என்ன விந்தை! என்ன அநீதம்! நம்மிளவரசருக்குந் தீங்கிழைக்கத் துணிந்தவன் யாவன்? நாங்கள் இக்கணமே அவனைக் கொன்று பழிதீர்க்கின்றோம்! அன்றேல் எம்முயிர்களையும் மாய்த்துக்கொண்டு அவருக்குத் துணையாய் விண்ணுலகம் செல்கின்றோம்!

**புத்தி:**—அவசரப்படுகின்றீர்களே! இதுபற்றியே யான் தனியாயிருக்கவேண்டுமென்பது?

**பௌர:**—எதற்கும் நாங்கள் அஞ்சோம்! இப்படிப்பட்ட காரியத்தைச் செய்த கொலைபாதகனை நாங்கள் துண்டம் துண்டமாய் வெட்டிவிட்டுத் தாம் வீட்டிற்குச் செல்வோம்!

**புத்தி:**—ஐயோ! பேதையர்காள்! ஏனிந்த வீண்சபலம்? உங்களுடைய நன்மைக்காகவே சொல்கின்றேன்! பொல்லாத ராஜாஞ்ஞைக்குள்ளாவீர்கள்? இது தர்மத்திற்குக் காலமன்று! பேசாமற்செல்லுங்கள்!

பௌர:—அப்படிக்கொத்த சிந்துல மஹாராஜரின் புதல்வரே கொலையுண்டு சாகும் பொழுது, ராஜாஞ்ஞையை எங்களை என்ன செய்யக்கூடும் !

புத்தி:—ஆனையைப் பூனைகள் வெல்லுமா? அரசனே அநியாயஞ்செய்தால் அவனை யடக்கயாவராலாகும் ?

பௌர:—நல்லது! நம்மிளவரசனைக் கொலைசெய்தவன் எவனோ !

புத்தி:—அவனது பெயரைச் சொல்வதற்குக்கூட அருவருப்பாயிருக்கின்றது! நமது மஹாராஜா அவர்களே இப்படிச் செய்தால்—

பௌர:—ஹா ! ஹா ! ஹா ! அட பாவீ ? க்ஷத்திரியாதமா ! எதற்காகவடா அவ்விளங்குமரனைக் கொன்றாய் !

புத்தி:—வேறெதற்கு ? அவனது நாட்டைக்கைப்பற்றுவதற்கே !

ஸாவி:—ஹா ! வத்ஸா ! சிற்றப்பனால் எக்கதியடைந்தனை ? நின் பொருட்டு யான் அநுஷ்டித்துவந்த நியமங்களும் உபவாசங்களும் நிஷ்பலமாய்ப் போயினவோ ? இனி யாரைவேண்டி உயிர் வாழ்வேன் ? ஆ குமாரா ! உனது திருமுகத்தையானென்று காண்பது ?

* " நல்லோர் வகுத்த முறையா மறங்க
ளெட்டி லொன்று குறையேயும்
இல்லோரை யற்ப மிகவேழ மிறக்கு
மிறையன்றி யேற வுகவேம்,
சொல்லோரை மறுத்துமுரையோமுரைத்த
துறவோர்கள் புத்திகடவேம்,
எல்லோர் தமக்கு மினிதேவிளைப்ப
மேதாகவந்த திதுவே !" (கஎ)

* அரிச்சந்திர புராணம்.

* "மறைநீதி யுற்ற புறநாடழித்து
வருசேனை யாழ்வதறியேம்,
அறைநீதி முற்று முணராவமைச்சை
யணிவாயில் வைத்து மறியேம்,
குறையேயிழைத்து வினையே விளைத்த
குடிதைக் திருந்து மறியேம்,
இறையே தவத்தின் விளைவே யெமக்கு
மிதுவோ விதித்த விதியே!" (௯அ)

அந்தோ! இன்னமுமென் தக்கஹிருதயம் பிளந்துபோகவில்லையே! ஹா ஆர்யபுத்திரகுலதிலகா! ஹா அரவிந்தாக்ஷா! ஹா அப்ரதிமப்ரபாவா! ஹா அகிலஜநசரண்யா! மூடையாய்ப்போய்விட்டேன். மைத்துனனை நம்பி முழுமோசம் போய்விட்டேன்! ஆ குழந்தாய்! உன்னைவிட்டு யான் க்ஷணமேனும் பிரிந்திருப்பேனோ? இதோ உன்னுடன் கூடவேவந்துவிட்டேன். (திடீரென்று மூர்ச்சித்து வீழ்தல்.)

**தராங்க:**—ஆ ஆ! என்ன சங்கடம்! என்ன சங்கடம்!! எப்படிச் சகிப்பதிதை! (விசிறியினால் லாவித்திரீ தேவியாருக்குபசரித்தல்.)

**போஜ:**—ஹா! ஹா! என்னகாலம்! அவ்விளங்குமரனை இம்பாவி முஞ்ஜராஜனே கொன்றனன்! இதையறிந்தும் நாம் சும்மாவிருக்கலாமா? இக்கொலைபாதகனை அதஞ்செய்து விட்டல்லவோ நாம் மறுகாரியத்தைச் செய்யவேண்டும்.

**புத்தி:**—நண்பர்காள்! இதுவே நம்முடையமுதற்கடமை. இப்படிச் செய்தாற்றான் நாம் சிந்துலஹாராஜருடைய குணத்தைத் தீர்த்துக்கொள்ளலாம். அவர் உயிருடனிருக்கும்பொழுது நமக்குச் செய்த நன்மைகள் நம்மாற்கணக்கிடமுடியா! இத்துரோகி ராஜ்ஜியத்திற்கு வந்ததும் நியாயமே போய்

* அரிச்சந்திரபுராணம்.

விட்டது ! களவும், கொலையும், கலவியுமே எங்கும் நிறைந்தன ! இராஜ்ஜியத்திற் காசைப்பட்டு நமது தர்மப்பிரபு சிந்துல மஹாராஜருடைய ஏக புத்திரனும், தைரியமும் தர்மமுமே வடிவெடுத்து வந்தாற்போலிருந்த போஜகுமாரனையே கொன்றுவிட்டான் ! தர்மத்தை ரக்ஷிப்பதற்காக ஏற்பட்ட அரசரே இப்படிச் செய்யப்புகின் இனி உலகில் எதுதான் நிலைபெறும் ! ஆயினும் 'கெடுவான் கேடு நினைப்பான்' என்பது மாத்திரம் பொய்போகாது! அதர்மம் இப்பொழுது விருத்தி யடைந்தபோதிலும், அதற்கும் ஒரு காலத்தில் க்ஷீணதசைவரும் ! எப்பொழுதும் கிருஷ்ணபக்ஷமே தழைக்குமா ? ஆயினும் பொறுமையுடன் எதையுஞ் செய்யவேண்டும்.

**பௌர:**—இனிப்பொறோம்! பொறோம் !! பொறோம்!!! இப்பொழுதே அப்பாதகனைக் கொன்றுவருவோம்.

**புத்தி:**—(ஆன்மகதமாய்) ஆகா ! நாம் அவசரப்பட்டுவிட்டோம் ! ஆயினும் இவர்கள் பழிதீர்த்தே விடுவார்கள் என்று நம்புகின்றேன்.

**பௌர:**—(கட்கத்தை உருவிக்கொண்டு) இக்கட்கத்தினால் அப்பாவியை இக்கணமே கண்டதுண்டஞ் செய்துவருவேன் ! (பல்லத்தை நீட்டிக்கொண்டு) இப்பலத்தினாலவனை இப்பொழுதே பரலோகமோட்டிவருவேன் ! (தோமரத்தை எடுத்துக்கொண்டு) இத்தோமரத்தினாலவனைத் தொலைத்துவருவேன்! (பிராசத்தைக் கையிலேந்தி) இப்பிராசத்தினாலவனைப் பிளந்துவருவேன்! (குந்தத்தைக் கையிற்பிடித்து) இக்குந்தத்தினாலவனைக்குத்திவருவேன்! (பரசுவைக் கையிலெடுத்து) இப்பரசுவினாலவனைப் பறக்கடித்து வருவேன் !

(பிரவேசித்து).

**காளிதாசன்:**—(பரபரப்புடன்) நண்பர்காள்! இது சரியன்று ! சரியன்று ! வீணாய் நுங்களது பிராணனைத் துறக்கவேண்டிவரும் ! பொறுத்துச் செய்யுங்கள் ! பொறுத்துச் செய்யுங்கள் !!

**புத்தி** :—காளிதாசா ! எப்படி நாம் பொறுப்பது! போஜ குமாரன் போயும் நாம் பிழைத்திருக்கவேண்டுமா ? இத்தர்ம யுத்தத்தில் நம் முயிரை யிழந்தால்தானென்ன ?

**காளி** :—அடிகாள் ! அதைப்பற்றி யான் சிந்திக்கவில்லை ! என் பிரிய நண்பன் போஜனுக்காக என் பிராணனைக் கொடுக்க யான் சர்வசித்தனாயிருக்கின்றேன் ! ஆயினும், நாம் தக்க யோசனை செய்து பிறகு இப்படிப்பட்ட காரியத்திற் பிரவேசிக்கவேண்டும். திடீரென்று கை வைத்துக்கொண்டால் தடாலென்று விழவேண்டியதுதான் ! அப்படியாவதிற்பலன் யாது ?

**புத்தி**:—ஆம் ! ஆயினும் நாம் சும்மாவிருப்பது தர்மமா ? நம் ஸாவித்திரிதேவியார் இதைக்கேட்டால் என் செய்வள் ?

**பௌர**:—அடாடா ! பாபீ ! என்ன கொடுஞ்செயலைப் புரிந்தாயடா ? இன்னுமுன் தலைமீது இடிவிழவில்லையே ! அத்தர்மதேவதை ஸாவித்திரியம்மா இச்செய்தியைக் கேட்டால் எப்படி உயிர்தரிப்பள் ?

**காளி**:—நண்பர்காள் ! நீங்கள் செய்யப் புகுங்காரியம் மிகவும் சிலாக்கியமானதே ! ஆயினும் இவ்விஷயத்தைத் தீரவிசாரித்தீர்களா ? போஜகுமாரர் கொலையுண்டு இறந்தாரென்பது உங்களுக்கெப்படி நிஷ்கரிஷையாய்த் தெரியும் ? அப்படித்தான் இறந்திருப்பினும், அவரைக் கொன்றவன் இன்னானென்று நிச்சயித்தீர்களா ? அவசரப்படுவதிற் பயனென்னை ? இவையெல்லாம் முற்றுந் தெரிந்துகொண்டல்லவோ இவ்வித காரியத்திற் பிரவேசிக்கவேண்டும். இவற்றையெல்லாம் கண்ணுற்கண்டவர் இங்கு எவராயினுமுளரோ ? வெளியிற் போகிறவர் பேச்சைக் கேட்டுக்கொண்டும் ஒரு வினைபுரியலாமா ? ஆகலின், எல்லோரும் தத்தமிடத்திற்குச் செல்லுங்கள் !

புந்தி:—என்ன சாக்ஷியம் வேண்டும்? நம்மிளவரசரைக் கொலை செய்யக்கொண்டுபோன இராஜ சேவகர்களே இவ்வநியாயத்தைப் பார்த்ததாகச் சொல்லுகிறார்கள்! வத்ஸராஜன் தான் அவனைக் கொலைசெய்தனனாம்!

காளி:—அடிகாள்! தாமே இப்படி அவசரப்பட்டால் மற்றையோர்களைப்பற்றிக் கேட்பானேன்! வத்ஸராஜருடைய நடத்தை முற்றுந் தெரிந்திருந்தும் தாங்கள் இப்படிமொழிவது தகுதியன்று!

பௌர:—அவனது நடத்தைதெரிந்தேதானிருக்கின்றது! நம்மிளவரசரைக் கொலைசெய்யத் துணிந்தவன் எதற்குத்தான் அஞ்சுவான்! எல்லாம் அரசனுக்குத் தகுந்த சேனைத்தலைவன் தானே! இவ்விருவரையுமே செக்கில்வைத்தாட்டவேண்டும்

காளி:—நண்பர்காள்! பின்பு நுங்களையே நொந்துகொள்வீர்கள்? வத்ஸராஜர் அப்படிப்பட்டவரல்லர்! இவ்விஷயம் முற்றும் சந்தேகத்திற்கிடமா யிருக்கின்றது!

புந்தி.—ஆயின், நீ என்ன செய்யவேண்டுமென்று சொல்கின்றாய்?

காளி.—அடிகாள் எதைச் செய்தாலும் நிதானித்துச் செய்யவேண்டும்! எது எவ்வழியாய்ச் செய்தாற் பயன்படுமோ அதனை யறிந்து செய்வதன்றோ நன்மையை விளைக்கும்!

புந்தி:—உடனே செய்தாலன்றோ எதுவும் பயன்படும்?

காளி:—அடிகாள்! தாமுரைப்பது வாஸ்தவமே! ஆயினும், நாம் இவ்வளவு அவசரப்பட்டுச் செய்வது தகுதியன்று! பொறுப்பதனால் ஒன்றும் மிஞ்சிப்போகாது? ஆகலின், தாமிவர்களைத் தத்தமிடங்களுக்குச் சத்தமிடாமல் இச்சமயம் அனுப்பிவிடுங்கள்! பிறகு வேண்டும்பொழுது இவர்கள் உதவிசெய்யச் சித்தராகவே யிருப்பர்.

பௌர :—நாங்கள் உதவிசெய்ய எப்பொழுதும் சித்தரா கவே யிருக்கின்றோம்.

காளி.—இதுதான் தங்களைப்போன்ற தர்மிஷ்டர்களுக் கழகு! இதுவே நங்கள் காரியங் கைகூடுமென்பதைக் குறிப் பிக்கின்றது!

புத்தி :—நண்பர்காள்! அப்படியாயின் நீங்கள் இச்சம யம் செல்வீர்கள்! உங்களுடைய உதவிவேண்டிய பொழுது யான் தெரியப்படுத்துகின்றேன்!

பௌர :—சரி (நிஷ்கிரமித்தல்).

காளி :—(புத்திசாகரரை நோக்கி) அடிகாள்! இப்படிக்கொத்த கோலாகலத்தையும் நாங்களே பார்த்துக்கொண்டிருக்கலாமா? இவ்வமர்க்களமெல்லாம் தேவியாருக்குத் தெரியவந்தால் அவ ர்களது பிராணனெவ்வாறாகும்? தேவியாரின் அரண்மனைவா யிலுக்கெதிரிலேயே இவ்வளவு காரியத்தையுஞ்செய்து விட் டார்களே. இவ்விஷயமெல்லாம் தேவியாருக்குத் தெரிந்து தானிருக்கவேண்டும்.

புத்தி :—ஆம்! நாமொரு நிமிஷமுந்தாமசிக்கலாகாது! இக்கணமே தேவியாரிடஞ்சென்று அவர்களைச் சமாதானப்படு த்துவோம்வா! (இருவரும் பரிக்கிரமித்தல்.)

தரங்க :—ஐயோ! அப்பொழுது சென்ற மூச்சு இன்னுந் திரும்பி வரவில்லையே! என்செய்வது? இத்தருணம் காளிதா சரிடஞ் சென்றால்தான் இவர்களது பிராணனைக்காப்பாற்றத் தக்கவழிதேடலாம். (செவிகொடுத்து) இதென்ன காலோசை கேட்கின்றது? யாவரிங்கே வரக்கூடும்? (நோக்கி) தெய்வாதீ னம்! காளிதாசரே நமது மந்திரியாருடன் இதோவருகின்றார்! (காளிதாசனும், புத்திசாகரரும் மேன்மாடத்திற்குவர, அவர்களருகிற்சென்று காலில் வீழ்ந்து) ஐயா! நீங்கள் தான் இத்தருணம் தேவியாரைக்காப்பா ற்றவேண்டும்.

**புத்தி** :—ஆஹா! இதென்ன பரிதாபம்! நாம் நினைத்தது போலவே தேவியார் மூர்ச்சித்து வீழ்ந்திருக்கின்றனரே! இவர்களுக்கு நாம் என்ன சமாதானஞ்சொல்வோம்.

**தரங்க**:—(தேவியாரைப்பனிநீர் தெளித்தெழுப்பிக்கொண்டு) அம்மணீ! இதோ நமது மந்திரியாரும் தங்கள் புதல்வரின் நண்பர் காளிதாசரும் வந்திருக்கின்றனர் பாருங்கள்!

**ஸாவி** :—(கண்விழித்துக்கொண்டு) ஹா! வத்ஸா! நீயும்வந்தாயோ? (நோக்கி) ஹா கஷ்டம்! கஷ்டம்!! பாவியேன் ஏன் விழித்துக்கொண்டேன்? ஹா! புத்திரா! உன்னைப் பறிகொடுத்தும் யான் உயிருடனிருக்கின்றேனே!

**காளி** :—தாயே! அமங்களமறையாதீர்கள்? யான் சொல்வதை முற்றும் கவனித்துக் கேளுங்கள்!

**ஸாவி** :—காளிதாசா! என்ன சமாசாரம்? நினது நண்பனெங்கே?

**காளி** :—அம்மணீ! அதைப்பற்றித்தான் சொல்வதற்குத் தங்களிடம் வந்தேன். நேற்றிரவு பதினைந்து நாழிகைக்கு முஞ்ஜராஜர் நமது சேனைத்தலைவர் வத்ஸராஜரை யழைத்துச் சென்று, அவரிடத்தினின்றும் போஜனைக் கொன்றுவிடும்படியாய் ஓர் உறுதிமொழி வாங்கிக்கொண்டனராம்!

**புத்தி** :—ஹா ராஜகுமாரா! நீ இறப்பதற்காகத்தான் இவ்வளவு மேதாவியாய் வளர்ந்தனையோ? ஐயோ! நான் கொடும்பாவியாய்விட்டேனே!

**காளி** :—அடிகாள்! தாங்கள் இப்படி அவசரப்படலாகாது!

**புத்தி** :—பிற்பாடு என்ன நடந்தது? வத்ஸராஜனும் இதற்குடன்பட்டனனோ?

**காளி:**—ஆம்! அப்படி யுடன்படும்படி நேரிட்டது. அதற்குள் நம்மிளவரசரும் ஏதோ எதிர்ச்சையாய் விலாஸவதி தேவியாரின் அரண்மனைக்குச் சென்று, தம்மிடம் தான் செய்த பிரதிஞ்ஞையை நினைத்துக்கொண்டு, வெளியிற் சென்று, நகரத்தில் நடக்கும் விசேஷங்களை யெல்லாம் அறிந்துகொள்வதற்காக நமது பிரணதார்த்திஹரர் கோவிலுக்குட் சென்றனராம்.

**புத்தி:**—பிற்பாடு! பிற்பாடு!!

**காளி:**—பிறகு, நம்மிளவரசர், இவர்கள் பேசிக்கொண்டிருந்ததை யெல்லாங் கேட்டு மனம் பொறுக்கமாட்டாமல், தனியாய்த் தன்னுயிரை மாய்த்துக்கொள்ளுவதற்காகப் புவனேசுவரிஆலயத்திற்குச் செல்லும் சொடிவழியே பைத்தியம்பிடித்தவர்போற் போய்க்கொண்டிருந்தார். நானு அப்பொழுது கோவிலுக்குட்சென்று திரும்பி வந்துகொண்டிருந்தபடியால் அவரை எதிர்ச்சையாய்ச் சந்திக்கலாயினேன்.

**புத்தி:**—மேலே என்ன நடந்ததோ? இராஜகுமாரன் இப்பொழுதெங்கேயிருக்கின்றனன்?

**காளி:**—நான் அவரைச் சமாதானஞ் செய்துகொண்டிருக்கும்பொழுது வத்ஸராஜருடைய கிங்கரர்கள் இருவர் அவரது உத்தரவைக்காட்டி நம்மிளவரசரைப் பிடித்துக்கொண்டு சென்றனர்கள்! அவ்விடத்திற்கு நானும் அவர்களுக்குத் தெரியாமலே பின் சென்றேன்.

**ஸாவி:**—என்ன? என் செல்வனை அவ்விடத்திற்குக் கொண்டுபோய்க் கொன்றுவிட்டனரோ?

**காளி:**—அம்மணி! ஏனிப்படி அமங்களமான மொழிகளை யடிக்கடி யுரைக்கின்றீர்கள்! இராஜ குமாரர் க்ஷேமமாயிருக்கின்றனர்!

**ஸாவி:**—அப்பா! என் வயிற்றிற் பாலைவார்த்தனை!

**புத்தி:**—(சந்தோஷத்துடன் குதித்துக்கொண்டு)

*"இன்று தாரை யிளைக்தது காப்பினை
தான்று நாமகள் சோர்விலளாயினள் !
ஒன்று பாவலரியாவரும் மூன்றினர்
என்று போஜனிம் மண்ணினை யெய்தவே!" ( )

ஆயினும் அவ்விடத்தில் என்ன விசேஷம் நடந்ததோ அதை யுரைப்பாய் !

**காளி:**—வத்ஸராஜரும் அவ்விடத்தில் முன்னதாகவே நம்மிளவரசரைக் கொன்றுவிடுவதென்று நிச்சயித்துக்கொண்டு உருவின கத்தியுடன் கரையாத சித்தத்துடன் வந்திருந்தனர் ! பிறகு எப்படியோ அவருக்கும் மனமிரங்கிற்று! நானும் அச்சமயத்தில் அவ்விடஞ் சென்றேன். பிறகு நாங்கள் யோசனை செய்து இராஜகுமாரரைச் சிலநாள் மாறுவேஷத்துடன் நகரத்திற்கு வெளியிலிருக்கும்படி சொல்லி யனுப்பினோம் !

**ஸாவி:**—ஹா! புத்திரா ! நீ இப்பரதகண்டம்முற்றும் ஆளுவாயென்று நினைத்திருந்தேனே!நீ இப்படிப்பரதேசியாய்ப் பரிதபிப்பதையறிந்து நான் எப்படிச்சகிப்பேன் ? (பாடுதல்).

(சு) இராகம் - பரஸ; தாளம் - சாப்பு.

பல்லவி.

மைந்தா ! உனைக்காண்பேனோ - இனிநான்
மைந்தா ! உனைக்காண்பேனோ !

அநுபல்லவி

மகிமையாய் ராஜ்யத்தில் - வாழ்ந்ததெல்லாம் போச்சோ?
மன்னர்வந்து பணிந்து - மகிழ்ந்ததெல்லாம் போச்சோ?—மை.

* போஜராஜ சரித்திரம்.

சரணங்கள்.

ராஜாதி ராஜனாய் - ரமித்திருந்த நாட்போய்
தாசானு தாசனாய் - தவிப்பது மழகோ?— மை.
என்னென்று சொல்வேன்யான் - என்றன் கதியையிப்போ
தேற்கவனந்தனில் - இருக்க விதியோ புத்ரா!— மை.

ஐயோ! இவையெல்லாம் எண்ணவும் ஆற்றிலேனே! எப்படி யான் பொறுப்பேன்.

**காளி** :—அம்மணீ! சகலமுமறிந்ததாமே இப்படித் துயரமுறுதல் தக்கதன்று! நமது அடிகள் இருக்குமளவும் தாங்கள் ஒன்றுக்கு மஞ்சவேண்டியதில்லை! இனி இராஜகுமாரரைத் தங்களிடம் க்ஷேமமாய்க்கொண்டு ஒப்பிப்பது எங்கள் பாரம்.

**புத்தி** :—அம்மணீ! இன்றுமுதல் இரண்டு மாதத்திற்குள் தங்கள் செல்வனை இவ்விராஜ்ஜிய சிம்மாசனத்தில் ஸ்தாபிக்காவிடில் யான் புத்திசாகரனல்லன்!

**ஸாவி** :—அஃதேது? அசாத்தியம்! அசாத்தியம்!! நானும் என் செல்வனை அந்நிலையில் இவ்வுடலத்துடன் பார்க்கப் போகின்றேனோ? வீண் மனோரதம்! அந்தரத்தில் அரண்மனையமைப்பதேயாம்! இன்னும் எவ்வளவு துன்பங்கள் ஒன்றின் மீதொன்றாய் வரக்காத்துக் கொண்டிருக்கின்றனவோ?

**காளி** :—தாயே! ஏனிவ்வாறு வீணாய்ச்சஞ்சலப்படுகின்றீர்கள்? ஈசனருள் இருப்பின் எது தான் கிடையாது? (பாடுதல்.)

(எ) இராகம் - மோகனம் - தாளம் - ஆதி.

பல்லவி.

ஏனுங்கட்கிக்கவலை? - ஏனிந்தப்பாமரமும்?

அநுபல்லவி.

ஆனந்தனருளிருப்பின் - ஆகாதது மொன்றுளதோ?

சரணங்கள்.

சித்தரடி நித்தமுமே - பத்தியாய்ப் பணிபவற்கு
சித்திக்குமே எவ்வினையும் - சித்தந்திடங்கொள்வீர்— ஏ.
சிட்டர்பதந் தொட்டணைவோர் - கெட்டாத தோரிட்டங்களும்
கட்டாயமாய்க் கிட்டிவரும் - திட்டாந்திரமட்டாக்ஷரம்— ஏ.

**ஸாவி** :—செல்வனே! நீவிர்தாம் என் புத்திரனைக் காப்பாற்றவேண்டும்!

**காளி** :—அம்மணி! அவருக்கு யாதொரு குறையுமில்லை! இனி விட்டுவிடுங்கள் கவலையை!

**ஸாவி** :—இப்பேருதவிக்கு யான் உங்களிருவருக்கும் என்ன கைம்மாறு செய்யப்போகின்றேனோ?

**புத்தி** :—இது எங்களுடைய கடமை! இனி அம்முஞ்ஜனைக் கொன்று போஜனை ராஜ்ஜியத்தில் ஸ்தாபிப்பது எங்களுடைய காரியம்! தாங்களிதைப்பற்றிச் சிறிதேனும் கவலைப் படவேண்டியதில்லை.

**ஸாவி** :—எல்லா முங்களுடைய அநுக்கிரகமே! (தரங்கவதியுடன் நிஷ்கிரமித்தல்).

**புத்தி** :—(காளிதாசனை நோக்கி) அப்படித்தலைவாங்கிவிடும்படியான குற்றம் யாது செய்தனன் நம்போஜன்?

**காளி**:—எல்லாம் பொய்க்குற்றமே! அப்பாதகன், நம்மிளவரசர் விலாஸவதிக்கு விஷங்கொடுத்துக் கொல்லமுயன்றதாகக் குற்றஞ்சாட்டினான்.

**புத்தி** ;—சரி! நான் நினைத்ததுபோலவே முடிந்துவிட்டது. அதற்காகவல்லவோ இராஜகுமாரனைப் பட்டத்திற்கு வருவதற்குமுன் விலாஸவதியினிடஞ் செல்லவேண்டாமென்று சொன்னேன். யான் சொல்லித்தான் என்ன பயனாயிற்று. போஜன் அதை அலட்சியஞ்செய்து விட்டனனே!

**கரளி** :—அடிகாள் ! மற்றதையுங்கவனமாய்க் கேட்கவேண்டும் ! பிற்பாடு வத்ஸராஜரும், தாம் முஞ்ஜராஜனுக்கு வாக்குக்கொடுத்தபடி ஒரு கிருத்ரிமத்தலையைப் போஜனுடையதென்று காட்டிவிட்டு, இளவரசரைக் கொன்றுவிட்டதாகவே இராஜனுக்கு மெய்ப்பித்துவிட்டனன் ! முஞ்ஜனும் அதை மெய்யென்று நினைத்து இராஜ்யந்தனக்கு நிஷ்கண்டகமாய்க் கிடைத்து விட்டதென்று பெருமைபாராட்டி வருகின்றனும் ! இராஜகுமாரரென்னவோ க்ஷேமமாயிருக்கின்றார் ! இதுதான் சமாசாரம் ! இதற்குமேல் தங்களுக்குத் தெரியாததொன்றுமில்லை.

**புத்தி** :—(சற்று யோசித்து) நல்லது ! இதுவும் நமக்கு ஹிதமாகவே முடிந்தது. இதைக்காரணமாய் வைத்துக்கொண்டே முஞ்ஜனை எதிர்க்கும்படி பிரஜைகளைத் தூண்டிவிடுகின்றேன் ! காளிதாசா! நீயொரு உபகாரஞ்செய்யவேண்டும்.

**காளி** :—எதுவேண்டுமாயினுஞ் செய்யக்காத்துக்கொண்டிருக்கின்றேன். ஒரு பூர்வபீடிகையு மில்லாமற் சொல்லுங்கள் !

**புத்தி** :—அப்படியாயின், நீ உடனே உஜ்ஜயினி நகரஞ் சென்று, அந்நகரத்தையாண்டுவரும் ஆதித்தியவர்ம மகாராஜரிடத்தில் நானுரைத்ததாக இவையெல்லாம் தெரிவித்து, எப்படியாயினும் இப்பாதகன் முஞ்ஜன்மீது படையெடுத்து வரும்படி செய்யவேண்டும்! நானும் அதற்குள் இவ்விடத்திலிருந்து தகுந்த எற்பாடுகள் செய்து பிரஜைகளை யெல்லாம் முஞ்ஜனுக்கு விரோதமாய் எதிர்த்தெழும்படி செய்விக்கின்றேன் ! நீ சீக்கிரஞ்செல்லவேண்டும்.

**காளி** :—இதுவே நம் சேனைத்தலைவர் வத்ஸராஜருடைய அபிப்பிராயமும். அவரும் சமயத்தில் நம்முடன் சேர்ந்து கொள்வதாக வாக்களித்தனர் ! எல்லாந் தெய்வானுகூலத்தால் சுகமாகவே முடியுமென்று நினைக்கின்றேன் !

**புத்தி** :—வத்ஸ ராஜரே ! இப்பொழுதுதான் உமது குணங்களையுள்ளபடி அறிந்து மெய்ச்சுகின்றேன் ! நல்லது! காளிதாசா, நீ சீக்கிரம் வீட்டுக்குச்சென்று, வேண்டியவற்றைச் சேகரப்படுத்திக்கொண்டு, விரைவாய் உஜ்ஜயிநீ நகரஞ்செல்! நானும் மேல் நடக்கவேண்டிய விஷயங்களை யாலோசித்து நடத்துகின்றேன் ! இனியொரு நிமிஷமேனுந் தாமதித்திருக்கலாகாது.

(இருவரும் நிஷ்கிரமித்தல்).





# நான்காம் அங்கம்.

## முதற்களம்.

இடம்.—தாரைநாட்டுக்கும் உஜ்ஜயிநீ நாட்டுக்கும் மத்தியில் ஒரு பயங்கரமான வநாந்தரம்.

(போஜன் *தயரப்பட்டுக்கொண்டே விசீதவேஷத்தைப் பிரவேசித்தல்.*)

**போஜன்:**—(*கருணமாய்ப் பாடிக்கொண்டு*).

(க) இராகம் - பூரிகல்லியாணி. தாளம் - ரூபகம்.

பல்லவி.

அபயம் சிவனே !
ஆபத்பாந்தவனே !

அநுபல்லவி.

உபயப்பிராஷ்டனுகி - ஒன்றியாய்ப்போகின்றேன்
அபயந்தந்தென்றனை - ஆபத்தினீக்குவாய்! அபயம்.

சரணங்கள்.

நாடுநகரும்விட்டு-நடக்கக்குதிரையற்றுக்
காடுமலைகளின்று - காலாற்கடக்கலானேன் ! அபயம்.
பதியும்சதியுமென்றன்-பங்காளி கைக்கொள்ளக்
கதியற்றுக் கசடன்போற் - கானகம்புகலானேன் ! அ
தீனசரண்யனே - தேவாதிதேவனே !
தீனன்யான்படுந்துயர்-தெரியாதோ நினக்கின்னும்? அ.

ஹே ஈசா! நான் இப்படி நாடிழந்து, நகரமிழந்து, காட்டிலே வந்து, பனியால் நனைந்து, வெயிலாலுலர்ந்து, தனியாய்க்கிட

ந்து, மெய் சோர்ந்து மலிந்துபோதல் நின் கருணைக்கழகோ? காலைமுதலிது வரையிலும் இக்கொடுங்காட்டிலலைந்து திரிகின்றேன்! ஒரு மனுஷப்பிராணியையும் இப்பயங்கரமான பிரதேசத்திற் காண்கிலேனே! இரவோ கொடியவர்களின் இருதயம்போல் மிகவும் பயங்கரமான இருளுடன் வந்து விட்டது! அப்படியே,

செந்தழற் கதிரோன் சோர்ந்து
சிந்துவி னலையின் மூழ்க,
பந்தமென் றுடுக்கள் தோன்றப்
பறவைக ளடங்கக் கூட்டில்,
மந்தமா யடித்த காற்றும்
மரங்களி லயர்ந்து நிற்க,
அந்தமி லிருளாற் சூழ
வடங்கின வோசை யாவும்! (க)

ஐயோ! பசிதாகம் மேலிடுகின்றதே! எங்கேயாகினுஞ் சென்று ஒரு கை தண்ணீர் குடித்துத் தாகசாந்தியாயினுஞ் செய்யலாமென்றால், கண்ணுக்கெட்டியவரையில் ஒருபொட்டு நீராயினுங்காணப்படவில்லையே! அந்தோ! இப்பயங்கரமான காட்டில் யாரைக்காண்பேன்? எவ்விதம் பிழைத்திருப்பேன்? இச்சமயத்தில் யாரெனக்குதவி பண்ணுவார்கள்? எல்லோரும் பலவானுக்குத்தானே அநுகூலஞ் செய்வார்கள்! யாருக்கென்றன் குறைகளையுரைப்பேன்! எப்படி நான் இக்கஷ்டங்களையெல்லாம் பொறுப்பேன்? யான் இன்னுனென்று பிறருடன் சொல்வதற்குக்கூட வெட்கமாயிருக்கின்றதே! ஆ சிற்றப்பா! உனது தந்திரமே தந்திரம்! இவ்வற்ப ராஜ்ஜியத்திற்காசைப்பட்டு என்னை எவ்வித ஸ்திதிக்குக் கொண்டுவந்துவிட்டனை? யான் உனக்கு யாது தீங்கிழைத்தேன்? ஆஹா! நின் ஆசையின் மயக்கமே மயக்கம்!

தாயென்றுந் தந்தை யென்றும்
தம்பிமார் தமைய ரென்றும்
சேயென்றுஞ் சுற்ற மென்றும்
சேர்ந்தவ ரென்று மெண்ணார்!
மாயமா மாசையென்னும்
மாதுகை வலையிற் சிக்கிற்
தீயன யாவுஞ் செய்வர்
சிறிதுமஞ் சாரே தற்கும்! (உ)

அடே துரோகி! நான் பதியைப் பறிகொடுத்ததற்காகத் துயரப்படவில்லை! எனது ஆசை நாயகி விலாஸவதியைவிட்டுவந்ததற்காகவும விசனப்படவில்லை! இப்பரதகண்டம் முற்றுக்கும் யான் ஏகசக்கிராதிபதியாய் வருவேனென்று பெரியோர்கள் சொல்லினரே, அதற்கும் யான் ஆசைகொள்ளவில்லை! நிர்மலமாகிய யசோவர்மனுடைய வயிற்றிலுதித்து, என்னைப் பத்து மாதஞ்சுமந்து, நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்த என் தாயைக்குறித்து மாத்திரம் விசனப்படுகின்றேன்! அம்மா! ஸாவித்திரீ! இப்பாவியேன் ஏன் உன் வயிற்றில் ஜெனித்தேன்! நீ என் கதியைக் கேள்விப்படுவாயாயின் உன்மனம் எவ்வாறு பரிதவிக்கும்! ஐயோ உன்னை யார் சமாதானஞ்சொல்லி ஆற்றுதலடைவிக்கப் போகின்றனர்! ஹா! ஹதவிதி! ஹதவிதி!! என்னகாலம் நேர்ந்துவிட்டது! ஐய்யா! நான் எதற்கென்றழுவேன்? என்னையே பந்துவாக நினைத்திருந்து இப்பொழுது இக்கொடுங்கோல் மன்னனிடத்திலிருந்து கஷ்டப்படும் என் தந்தையார் ஆண்டுவந்த பிரஜைகளின் பொருட்டு அழுவேனோ? என்னிடத்தில் உள்ளன்பு பாராட்டி மேலுக்கு மாத்திரம் கண்டிப்பாயிருப்பவர்போல் காட்டிவந்த எனது பரமாசாரியரான புத்திசாகரரை நினைத்து அழுவேனோ? எனக்குக் கண்ணுக்குக் கண்ணாய் உன்னுடல் போல் என்றும்

பிரியாதிருந்த எனது நண்பன் காளிதாசனைக்குறித்து அழுவேனோ? ஒரு கஷ்டமுமறியாத எனதருமைத்தாய் இச்செய்தியைக் கேட்டுப் படப்போகின்ற வருத்தத்தை நினைந்து அழுவேனோ? அல்லது இவ்வளவு கஷ்டங்களையெல்லாமடைந்தும் கற்போலக் கரைந்துருகாத என் பொருட்டுத்தான் அழுவேனோ? அந்தோ! உயிரை* மாய்த்துக்கொள்வோமென்றாலும் மகா பாதகம் நேர்ந்துவிடுமே! ஆன்மஹத்தி செய்கிறவர்கள் அந்த தாமிஸ்ர நரகங்களில் விழுந்து இடைவிடாது தவிப்பரன்றோ?

"அஸூர்யா நாம தே லோகா
அந்தேந தமஸா வ்ருதா:!
யாம்ஸ்தே ப்ரேத்யா பிகச்சந்தி
யேகேசாத்மஹநோஜநா:" (௩)

என்றல்லவோ மறைகளெல்லாம் முறையிடுகின்றன! ஐயோ யான் என்செய்வேன்? எவ்விடஞ் செல்வேன்? ஒன்றுந்தெரியவில்லையே! ஈசா! உன்னைத்தவிர எனக்கு வேறு கதியுமுண்டோ? நீதான் இவ்வேழையை இத்தருணமுங்காப்பாற்றவேண்டும். (பாடுதல்)

(௨) இராகம் - கமாஸ். தாளம் - ரூபகம்.

கண்ணிகள்.

கருணைபுரிந்தென்றன் - கவலைத்திராயோ
தரையிற்றவிக்குமெனைத் - திரும்பிப்பாராயோ? (௧)
அடவியிலழுமென்மீ - தன்புவைப்பாயோ
படமுடியாதென்றன் - பசியைத்தீர்ப்பாயோ? (௨)

ஐயோ! என்னவோ மயக்கம் வருகின்றதே! இதோ இம்மரத்தடியிற்சென்றுசற்றுச்சயனித்துக்கொள்வோம்! (அப்படியே மரத்தடியிற்சென்று) ஈசா! நீதான் இவ்வேழையின் கஷ்டத்தை நீக்கிக் காத்தருளவேண்டும்! (சயனித்துக்கொண்டு)

*"கடலமுதே! தேனே! என் கண்ணே! கவலைப்
படமுடியாதென்னைமுகம் பார்நீபராபரமே!" (௪)
*"என்புருகிநெஞ்சம் இளகிக்கரைந்துகரைந்
தன்புருவாய்நிற்க வலைந்தேன் பராபரமே!" (௫)
*"இன்று புதிதன்றே? எளியேன் படுந்துயரம்
ஒன்றுமறியாயோ வுரையாய் பராபரமே!" (௬)

(சோர்ந்து நித்திரைபோதல்.)

ஜயபாலனைச் சேர்ந்த வீரன், சூரன் என்னுமிரண்டு பில்லர்கள் பிரவேசித்தல்).

**வீரன்:**—(ஒரு கட்பாண்டத்தைக் கைக்கொண்டு) அடா அப்பா! இன்னிக்கிப்பட்ட பாடு போதும் போதும்! இனிமேலே ஆயுசுக்கும் வேண்டாம்!

**சூரன்:**—காடெல்லாம் சுத்தியடிச்சாண்டா அந்தப் பாவி! கை கால் எல்லாம் ஜிவ்ஜிவ்வென்று வலிக்குதுரு!

**வீர:**—போரது! எவனுவைது ஆப்பட்டானு! இவ்வளவு கஷ்டப்பட்டத்துக்கு இப்போதென்ன வாயிலடிச்சிக்கிறது?

**சூர:**—சாமீ! போரும் போரும்! இன்னிக்கி எவன் முகத்திலே முழிச்சமோ? காலமே முதல்கொண்டு ஒரு பருக்கை கூட கிடையாது!

**வீர:**—பின்னை என்னடா வயித்தெரிச்சல்! (கையிலிருக்கும் கட்பாண்டத்தை நோக்கி) இது இராத பூட்டாக்கே நம்ப சத்துதாண்டா போகணும்.

**சூர:**—வயித்தெரிச்சலா? பின்னெயும் வயித்தெரிச்சலா! எங்கப்பன் அந்த சாணுரப்பய்யன் நல்லாயிருக்கணும்! (வீரனிடத்திலிருந்து கட்பாண்டத்தைக்கையில் வாங்கிக்கொள்ளுதல்).

* தாயுமானவர்.

வீர:—ஆம்டா! அவன் இருக்கானே மெத்த நல்லவண்டா? இன்னிக்கி நாம்ப பாடுபட்டுவந்ததைப் பார்த்துவிட்டு அவனே ரொம்ப கள்ளு ஊத்திக்கொடுத்தாண்டா!

சூர:—(கட்பாண்டத்தை வாயண்டை கொண்டுபோய்) அடே மினுக்குதடா! (பூன்று நுரையை ஊதி) கள்ளுக்குச் சமானமென்னடா யிருக்குது. இத்தைதாண்டா அந்த பாப்பாருங்க அமுதமென்றுங்க! (கொஞ்சமுட்கொண்டு) தம்பீ! என்னுப்போ? (பற்களைக் கடித்துக்கொண்டு) பிளிக்குதுடா! பிளிக்குது!!

வீர:—அண்ணே! இந்த முளகாயே கடிச்சிக்கிண்டையானா நல்லா யிருக்கும் (மடியிலிருந்த மிளகாயை யெடுத்துக்கொடுத்தல்).

சூர:—(மிளகாயை வாங்கிக் கடித்துக்கொண்டே மறுபடியுங்கொஞ்சம் கள் அருந்தி) ஆமாந்தம்பி! (தலையை யசைத்து ருசியை அபிநயித்து) என்னமாயிருக்குதென்றே? (ஆட்டம் ஆடிக்கொண்டு) வெகு சொகுசு! (மறுபடியும் கொஞ்சம் கொட்டையிட்டுக்கொண்டே கள்ளருந்தி மயக்கங்கொண்டு) அண்ணே! நாம்ப எங்கே யிருக்கோம்?

வீர:—(சிரித்து) ஆம்டா! மானத்திலே யிருக்கோமடா!

சூர:—(பூராய்க்குடித்துவிட்டு) என்னு வெதல்லரே! எழ்ழ் (ஏப்பம் விட்டு) எங்கேரா? மா மா மானத்திலேயா? ஏழ்ழ் (திரும்பியும் ஏப்பம்விட்டு) மா மா மா மானத்திலே சூசூசூசூரியன் தம்பி.

வீர:—ஏண்டா ஜாஸ்தியா குடிச்சிட்டையோ? (கட்பாண்டத்தை நிமிர்த்து பார்த்து) ஏம்ஹூ—ம! சரிதான்! பூராவிட்டுட்டே!

சூர:—யார்ர்ர்ராவன் நம்மளண்டே ஜாஸ்தியா பேஷரது? என்னும்மா! பபபபபத்திரம்! நம்பளேயாரென்னு பாத்துக்கிணே! நாம்யக்ஷயக்ஷயக்ஷயக்ஷமான்! ஷேஷேஷேஷேவகன்!!

வீர:—என்னடா குடிச்சிட்டி உளற்றே! ஏண்டா அல்லாத்தையும் குடிச்சிட்டையோ?

சூர:—யார்ர்ரா குடியன்? நீ குறியனுடா நான் குகுகுகு குற்றியனுடா? (வீரனைப் பிடிக்கப்போய்க் கீழே விழுதல்).

வீர:—(சூரனைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு) அடே! இந்த மொட்டைப் பசங்கதனத்தை நம்பளண்டே காட்டாதேன்னு எத்தனைவாட்டி சொல்லியிருக்கேன்.

சூர:—(வீரனை ஒருமரம் என்று நினைத்துக்கொண்டு கையால் ஆட்டிக்கொண்டு) மரமா தம்பி! மர்ர்ர்மா யிது?

வீர:—என்னடா மொட்டைப்பயலே! ஒதைக்கிறேன் பார்! விடடா!! (சூரனைத் தூரே உதைத்துத் தள்ளுதல்).

சூர:—(மெல்ல எழுந்து உட்கார்ந்து) அழே! மொழ்ழே கிழ்ழே எண்ணையோ பபபபபபல்லை தட்ஷிப் போழுவேன்! நநநநம்பளை என்னன்னு பாபாபாபாழ்த்திண்டே! வொர்வொவொவொருகுத்து! (முன்னுக்குக் கை நீட்டுவதுபோல் நினைத்து பின்னுக்குப் போதல்).

வீர:—(ஆனந்தமாய்) நமக்கு வவுத்தெல்லாம் நிறைய பசியாயிருக்குது! இந்தப் பட்டி மவனோடே நமக்கென்ன வீம்பு! தண்ணி சொகுசாதான் இருக்குதுபோலத் தோணுது! நம்பளுங் கொஞ்சங் குடிப்போம்! (கீழே யிருக்கும் கட்பாண்டத்தை எடுத்துப் பார்த்தல்).

சூர:—ஹஹஹஹ! அட்ராஷக்கே!

வீர:—வடுவொப்பயல் அல்லாத்தையுங்குடிச்சிட்டாண்டா! அத்தான் தூக்கியடிக்குது பயலை. (மிகுதி கள்ளை ஒரு பொட்டும் விடாமல் குடித்துக்கொண்டு) ஏண்டா! என்னடா கனைக்கிறே! மூக்குமட்டும் ஏத்திட்டகொழுப்போடா? அவ்! (மெள்ள ஏப்பம் விடுதல்).

சூர:—ஆம்ம்மண்டா! ஹா! ஹா! ஹா! ஹா! பூழ்ச்சியே குழிச்சேம்! (பாடிக்கொண்டு) அம்மாயி! அம்மாயீ!!

வீர:—பட்ட கஸ்டங்களுக்கெல்லாம் இதுதாண்டா நல்ல மருந்து! ஆத்தாடி! கால் வவுருகூட ரொம்பலை! அதுக்குள்ளே பூமியெல்லாம் உருளைப்போல சுத்துது!

சூர:—ஹீ! ஹீ! ஹீ! ஹீ! ஹூ! ஹூ! ஹூ! ஹூ! (பாடிக்கொண்டு) அம்மாயி! அம்மாயி !! அம்மாயி அம்மாயி அம்மாயி அம்மாயி !

வீர:—என்னடா ! அம்மாயினை நினைச்சிக்கிட்டையோ! நேத்திராத்திரி ரொம்ப மலப்புதானோ ?

சூர:—ஆ டர்ர்ரா ! பூ! பூ! பூ! பூ! புசம் ! (முக்கால் வீரன் பேரில் எச்சில் தெறிக்கத்துப்புதல்).

வீர:—என்னடா ! பேலே எச்சிலே பூயரே! வேணு மோடா பூசை !

சூர:—தூ! தூ! தூ! தூ! (திரும்பியும் வாயாலெச்சிலைத் தெறித்தல்).

வீர:—எண்டா! சும்மாயிருக்கேன்னிட்டு மேலே மேலே வர்ரையோ? பார்த்துக்கோ! இதோ உன்னைக் காலைவாரி யிழுத்துப்போட்டுர்ரேன் ! (ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டு கைகலந்து புரளுதல்).

(காலபாசன், விரூபாக்ஷன் என்னும் ஐயபாலனைச் சேர்ந்த வேஷிரண்டு பில்லர்கள் பரபரப்புடன் பிரவேசித்தல்.)

காலபாசன்:—தம்பி! இவ்வளவு நேரமாச்சே ! அவங்க வந்திட்டிருப்பாங்களோ? இன்னிக்கி ராசாமவன் பட்டணத்திலே யில்லையாம்! அங்கே தான் போய்க் கொள்ளையடிக்கவேண்டுமாம் !

விரூபாக்ஷன்:—ஆமாண்ணே! அந்தப் பயங்க இருக்காங்களே வீரனும் சூரனும், நமக்கு முன்னே வந்தாங்களே! எங்கே போயிருப்பாங்கோ ?

கால:—அந்தத் திருட்டுப் பயங்களா? சாணுங்கடைதான் ஒண்ணு இருக்குதோ இல்லையோ ? .வேறே எங்கே போயிருப்பாங்க !

விரு:—ஆமாண்ணே! அங்கேதான் போயிருப்பாங்கோ! அதிலெயும் அந்தப்பய்யனிருக்குரானே சூரன்! அவன் மொடா குடியன் எங்கிரேன்!

காலா:—போடா! போடா! மொடாகுடியனு? பிப்பாகுடியண்டா! அவன் சம்பாதிக்கிற துட்டெல்லாம் பின்னே எங்கே போவுதுன்னு பாத்துக்கிட்டே! அந்தத் தண்ணிக்குதான் எல்லாம் போவுது!

விரு:—(கோசகு) நில்ருண்ணே நில்லு! இங்கேஎவங்களோ ஒத்தன்மேலே ஒத்தன்விழுந்து கட்டிக்கிட்டு சண்டை போர்ராங்க! (இருவரும்பார்த்தல்).

சூர:—என்டா! போருமா! இனிமே நம்பளண்டே வாயாடினேயோ மண்டையை ரண்டாய்ப் பளந்துடுவேன்! (வீரனைக் கீழே தள்ளி மமுக்குதல்).

வீர:—அடே! உனக்கு ஏதோ கிட்டிக்கிண்டதின்னிக்கி! என்னைக் குரியாய் விட்டுடு! இல்லாட்டா— (எழுந்திருப்பதற்குப் பிரயத்தனப்படுதல்).

சூர:—இல்லாட்டா என்னுடா செஞ்சிடுவே! இன்னமே என் சோலிக்கி வராதே! வராதே!! வராதே!!! (முதுகில் தள்ளினபடி குத்துதல்).

வீர:—ஐயோ! பூட்டேன்! அம்மாடி பூட்டேன்!!

கால:—அடே! அந்தத் திருட்டுப் பசங்கதாண்டா இங்கே குடிச்சிட்டு சண்டை போர்ராங்கோ!

விரு:—அடே திருட்டுப்பயங்களா! இங்கே என்னடா பண்றீங்க? விடுங்கடா! நம்பயசமான் மெத்த கோவித்துக் கொண்டிருக்கிறாரடா!

சூர:—(வீரனை விட்டுவிட்டு) அடே! நீ சத்தே கோவித்து கோடா பார்ப்போம்! என்னமோ பலே பேசரையே! வீரனுக்கு விழுந்த உண்டே உனக்கு வேணுமோ?

விரு :—அடே முட்டாள்! என்னடா எசமான் கோவித்துக்கொள்ளுகிருரென்ருல் நீ கோவித்துக்கொள் பார்ப்போமென்கிறையே!

சூர :—பின்னே என்னடா? நாங்கள்தான் சோறு தண்ணிகூட யில்லாமல் அப்போபிடிச்சு அலைஞ்சிட்டு இங்கே விழுந்து கடக்கிரோமே! அதுக்குள்ளே கோவமென்னடா!

கால :—போயிட்டுப்போவுது! அவருடா கீழே! வீரனுடா?

சூர :—ஆமாண்டா? அந்த ஊனைப்பயல் நம்பளண்டை வாலாட்டப்பார்த்தாண்டா!

கால :—அல்லடா! அவனைப்பத்தி சொல்லலேடா? அதோ அந்த மரத்தின் கீழே யாரோ படுத்திக்கொண்டிருக்கிருப்பலேயில்லே?

வீர:—(எழுந்து உட்கார்ந்து, உடம்பைத் தடவிக்கொண்டு) ஆத்தாடி! இப்போதான் உயிர் வந்தது!

சூர :—இந்தக் காட்டிலே எவங்கடா யிருக்கப்போருங்கோ! ஏதானு புலி கரடி படுத்திருக்கும்! வேறெ என்ன இருக்கப்போவுது?

கால :—இல்லேயடா! நீ வேணுமானு எழுந்திருச்சுப்பாரேன்! அதோ என்னமோ செகப்பா தெரியலே?

வீர :—(சோகமி) என்னமோ மூச்சுக்குரல்கூட கேட்குதடா!

விரு :—இல்லேயடா! இந்த மரத்தில் இரத்தக் காட்டேரியிருக்கு மென்பாங்க! ஒருவேளே அதுவாதாண்டாயிருக்கும்?

சூர :—அம்மாடி! அதுவாயிருந்தாச்சுனு நம்பளே பாத்தாட்டாக்கே விடுமா? அத்தோடே ஆள் பைசல்தானே!

வீர:—(நடுங்கிக்கொண்டு எழுந்து) என்றும்மா? ம்ம்ம்ம்மூத்தக்காட்டேரியா? ஐயோ நாநாநாநா பத்திரம் (ஓடுதல்).

கால:—இல்லையடா! இது என்னமோ வேறெதாண்டா படுத்து யிருக்குது! (அருகிற்சென்று நோக்கி)

(௧) இராகம்-காதநாமக்கிரியை. தாளம்-அடசாப்பு.

நில்லுங்கள் வருமிங்கே காசு !—(பயந்து பின்வாங்கி) அல்ல
கொல்லும் பருத்துக் கொழுத்தபிசாசு !
அப்பப்பா! இது என்ன ரூபம்—ஐயோ !
தப்பிப்பிழைப்பதே மெத்தப்ரதாபம் !— அப்ப!

சூர:—(வெகு தைரியத்துடன் அருகிற்சென்று).

அடியுங்கள்! பிடியுங்கள்! தாவி—(பயந்து பின்வாங்கி) அம்ம!
குடியைக் கெடுக்கும் கொடியமூதேவி!— அப்பப்பா.

வீர:—(கோபத்துடன் விரைந்து சமீபஞ்சென்று).

திருட்டுப்புரட்டுப் பசாரி !—(பயந்து பின்வாங்கி) சத்து !
இருட்டில்விரட்டு மிரத்தக்காட்டேரி !— அப்பப்பா!

வீரு:—(வெகுதைரியமுள்ளவன் போல் நடித்து முன்வந்து)

அடபோடா! இவளாரோ நீலி!—(பயந்து பின்வாங்கி) பூதப்
படைசூழப் பவனிபோம் படபத்ரகாளீ!— அப்பப்பா!

எல்லோரும்:—(பயந்து பக்தியுடன்)

அம்மா! அக்கா! ஆயே! தாயே!—(கைகூப்பி) எம்மைச்
சும்மா விட்டுச்செல்லும் வந்தனந்தாயே!— அப்பப்பா!

சூரன்:—(சற்று யோசித்து) அடே! இல்லையடா! இது என்னமோ பேசாமெ படுத்துக்கினுயிருக்குது. அப்பா! நம்பகூசப்போட்டத்துக்கு பிசாசு காட்டேரி காளியாயிருந்தாக்கே நம்மளே இந்நேரம் சும்மா விட்டிருக்குமா? அப்பவே எழுந்திருச்சு அல்லாரையு மொரேயறையாயறைஞ்சிட்டிராதா? இது

வேறே என்னமோடா! (போசனருகிற் சென்று நோக்கி) அடேடேய்! இது யாரோ ஒரு பொம்பளே தள்ளாதெ படுத்திக்கிட்டுருக்கிறாப்போல தோணுதடா!

வீர:—(தைரியங்கொண்டு தூரத்திலிருந்தபடியே) என்னும்மா!நானப்பவே சொல்லலே! அவதாண்டா நம்ப அம்மத்தாயி! உங்களேச் சும்மாங்காட்டிக்கும் பயங்காட்ட ஓடினேன்!

விரு:—ஆம்டா! எவளோ அசந்து தூங்கிறுப்போலெ தாண்டா இருக்குது! (சமீபம் பரிக்ஷை மித்தல்)

சூர:—அடே! எனக்குக்கெட்ட கோபம்வரும்! கிட்டே போகாதே! அவளே யாரென்னு பாத்துக்கிணே! எம் பெஞ்சாதிடா! (கிட்டே சென்று) அடியே! அடியே! அடி அம்மாயி!

கால:—அடே மொட்டைப்பசங்களா! என்னடா வெட்டிவார்த்தை பேசறைங்கோ! அந்த சோப்பு புடவையை பார்க்கச்சையே தெரியலே! இவ எம் பெஞ்சாதி அவுரூபமாச் சேடா! அடி அவுரூபம்! (சமீபஞ்சென்று)

(௬) இராகம் - நவரோஸ், தாளம் - ஆதி.

எழுந்திருடி—நீ
பழந்தருகிறேன்,
விழுந்துகை கூப்பி—மருவுவோம்
மொழிந்து மனமொப்பி!

கேடாத அமுதே!
தொடாத அரும்பே!
விடாமலுனேவேண்டி—சொகுசுள
முடாயி தருவேண்டி!

சூர:—(தட்டிக்குதித்து காலபாசனைத் தள்ளிக்கொண்டு முன்வந்து)

பாவாய்! நானுன்னிடம்
ஆவல்மிகக்கொண்டேன்!

காவாய்நீ இத்தருணம்—பூஜிப்பேன்
பூவாலெ யுன்சரணம் !—கொடாத.

**வீர:**—(இருவரையுந் தள்ளிக்கொண்டு)

மஹாதனவானெனைச்
சஹாயமாய்க்கொளில்
விஹாரம் நியடைவை—தருணீ!
மஹாதேவனைப் புகழ்வை!—கொடாத

**வீது:**—(இம்மூவரையும் அரேதள்ளிவிட்டு தான் முன்சென்று)

காடுமுழுதுஞ்சுற்றி
ஓடிவந்தேனிதோ
நாடியுனைப்பெண்ணே!—சுகம்பெறக்
கூடுவோம் நாம் கண்ணே!—கொடாத.

**நால்வரும்:**—(ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு)

கொடாத அமுதே
தொடாத அரும்பே
விடாம லுனை வேண்டி-சொருசா
,, பலேபலே
,, ருசியுள்ள
,, நல்லநல்ல
முடாயி தருவேண்டி!

**சூர:**—(எல்லாரையுந்தள்ளிவிட்டு) அடே ! நீங்கள் கிட்டெவந்தைகளோ காலை ஒடிச்சி விடுவேன். (சமீபஞ்சென்று போசனைத்தட்டி எழுப்புதல்)

**வீர:**—அடே! உனக்கு மூஞ்சியிலே மீசை யிருந்தாலென்னோடே நில்லடா ! (சூரனைப் போசன்மீது தள்ளிக்கொண்டு கைகலத்தல்)

**போஜ:**—ஐயோ இஃதென்ன? (எழுந்து கண்களை விழித்துக்கொண்டுஆச்சரியமாய்) யார் நம்மை இங்கே இத்தருணத்தில் தட்டி எழுப்பக்கூடும்? ஒருவேளை நம் சிற்றப்பனுடைய வேலையாட்

களோ? (சுற்றி நோக்கி) ஓகோ! இவர் யாவரோ நம் நாட்டைச் சேர்ந்தவர் அல்லர்! இவர்கள் உடையைப் பார்த்தாலேபயங்கர மாயிருக்கின்றது. இக்காட்டிலிவ்வேளையில் இவர்கள் இங்கு வந்ததென்னோ? (பிரகாசமாய்) ஐயா! நீவிர் யாவர்? எங்கிருந்து வருகின்றீர்கள்? ஏனிப்படி மேலே விழுகின்றீர்கள்?

சூர:—என்னடி! இதுக்குள்ளேயே மறந்துட்டையோ? (போசன் தோள்மீது கைபோடல்)

போஜ:—(சூரன்கையை விசிறித்தள்ளிவிட்டு) என்ன குடித்தவன் போல் மேலே விழுகின்றாய்! தூரத்தில் நில்லடா?

வீர:—ஆம்! போருமாடா மொட்டைப்பயலே! பார்த்துக்கிட்டையா? எம் பெஞ்சாதி அம்மத்தாயி என்னுட்டு நான் அப்பவே சொல்லலே? (போசனைக்கட்டியணைதல்).

போஜ:—(வீரனையும் விசிறித்தள்ளிவிட்டு எழுந்து நின்று) யாரடாமுழு மக்கள்களா? உங்களுக்கு மூளையிருக்கின்றதாயில்லையா? ஸ்திரீ புருஷனென்பதுகூடத் தெரியவில்லைபோலும்? சீ! குடிகாரப் பயல்களே! விலகி நில்லுங்கள்! (இவ்விருவரையும் ஒவ்வோரறை கொடுத்துக் கீழேதீட்டல்).

கால:—ஆமாண்டா! குரலைப்பார்த்தால் புருசன்போல தாண்டா யிருக்குது?

விரு:—ஆம்! எவனோ கொழுத்த ஆசாமிதான்! இவனைப் பிடிச்சாக்கே என்னமனு கிடைக்கும்.

கால:—அடே! அப்படியானு நீ மெள்ளப்போய் பிடிச்சுக் கோடா! நானுங்கூடவரேன்.

போஜ:—(ஆன்மகதமாய்) இவர்கள் கிராதர்கள்போலிருக்கின்றனர்! எதாயினும் கொள்ளையடிப்பதற்கு வந்திருக்கலாம். இவர்களிடத்திலிருந்து மெதுவாய்த் தப்பித்துக்கொண்டு செல்வதே நலம்! (எந்தப்பக்கமாய்ப் போகலாமென்று பார்த்தல்.)

கால:—(போசனை மடக்கிக்கொண்டு) அப்பேன்! எங்கே போக லாமென்னு பார்க்கே? நம்மையுமந்த சொத்தப் பசங்களென்னு நினைச்சிட்டையோ?

போஜ:—அப்பா! நீ பெரிய மனுஷந்தான்! உனக்கொரு நமஸ்காரம்! யான் அவசரமாய்ப் போகவேண்டியிருக்கிறது. மறிக்காமல் வழியைவிட்டுச் செல்! (ஒரு புறமாய்ப்போகப் பார்த்தல்)

கால:—நானுந்தானப்பேன் அவசரமாகப் போகவேண்டும்! சத்தே பொறுத்துக்கொள்! (மார்பில் கைகொடுத்துக் கட்டுதல்)

போஜ :—(அவனை தள்ளிக்கீழே நீட்டிவிட்டு) யான் யாரென்று நினைத்தாயடா? இனியாகிலும் புத்தியுடன் நடந்துகொள்! (திரும்பிப்போகும்பொழுது காலபாசன் போசனது இடதுகாலைக் கட்டியாய்ப்பிடித்துக் கொள்ளல்).

விரு:—(பின்னேவந்து மடக்கிக்கொண்டு) அடே திருட்டுப்பயலே! இவ்விருளில் எங்கேடா போகின்றாய்? நில்லுடா நில்லு! போனையோ சிண்டியைக் கிழித்துவிடுவேன்! (போசனுடைய இரண்டு கைகளையும் சேர்த்துக் கட்டுதல்).

போஜ:—(காலையுதறி வாங்கிக்கொண்டு பின்பக்கமாய்த்திரும்பி) அடே பேசாமல் இப்பொழுதே என்னைவிட்டகலு! வீணாய் மடிவாய் (ஒரு கையைவாங்கிக்கொண்டு).

கள்ளருந்தின கோலமோவிது
காட்டிலென்னை மடக்கிறாய்?
கள்ளன்போலுமே பின்னர்வந்துநீ
காட்டிவல்லமை துள்ளிறாய்!]

விரு:—(போசனது வலதுகையைக் கட்டியாய்ப் பிடித்துக்கொண்டு)

தொல்லையாமெமதெல்லைவந்து நீ
தூரமேகுவதெங்கடா?

பில்லராஜனின் மல்லன் நானடா
பின்னெதிர்த்தெனை வெல்லடா! (எ)

போஜ:—(கோபத்துடன் வலதுகையையும் திமிறிக்கொண்டு)

விட்டுநில்லெனை வெட்டுவேனுனை
வெட்டிவார்த்தை யிதேனடா?
மட்டியே யெமை யாவரென்றுநீ
மதியிற்கொண்டனை கூறடா!

விரு:—(கோபத்துடன் பற்களைக் கடித்துக்கொண்டு)

கெட்டதேளுங் கொடுக்கறுந்திடிற்
கிட்டுமோ விஷங்கொட்டுமோ?
கட்டியானுனைக் குட்டுவேனடா
கட்டடா அரைக்கச்சையை! (அ)

(போசனுடைய அங்கியைப் பிடித்துக்கொள்ளுதல்).

சூர:—(எழுந்து அடியைத் துடைத்துக்கொண்டு) அகப்பட்டுக்கிணடாண்டா துமிட்டிக்கா பட்டன்! இத்தாண்டா சமயம்! எழுந்து ஓடி யாங்கடா! கட்டியா பிடிச்சிக்கலாம்! (நால்வரும் போசனைப்பிடிக்கவர போசன் ஒருவரையும் கிட்டே வரவொட்டாமலடித்தல்).

(கரவதனை, தண்டபாணி என்னும் இரண்டு பில்ல ஸ்திரீகளுடன் ஜயபாலன் பிரவேசித்தல்).

**ஜயபாலன்:**—(பரபரப்புடன்) கரவதனை! இதென்ன கூச்சல்? யாரிங்கே சண்டை செய்வது?

**கரவதனை:**—மஹாப்பிரபு! நம்மவருடைய குரல்தான் கேட்கின்றது.

**தண்டபாணி:**—(சோக்கு) யாரோ வேறொருவனுடைய குரல்கூட கேட்கிறது.

ஜய:—(விரைந்து அருகிற்சென்று) என்னடா! செய்தி? இதென்ன சண்டை?

சூர:—யசமான்! இங்கே ஒரு மனுசன் அகப்பட்டுக்கொண்டான்?

ஜய:—எங்கே? எங்கே?

சூர:—இதோ நிற்கிறான் பாருங்கள்!

ஜய:—இச்சிறுவனா?

வீர:—சிறுவனா? அப்பாடி! அவன் கொடுக்கிற ஒவ்வோரறை ஒவ்வொரு லோகம் பொருமே! நல்ல சிறுவன்? நீங்களே அவனைக்கொஞ்சம் பிடிச்சுக்கொள்ளுங்கள் பார்ப்போம்!

ஜய:—(போசனை உற்றுநோக்கி, ஆன்மகதமாய்) ஆம்! சிறுவனாயிருப்பினும் மகாபலசாலிபோல் தோன்றுகின்றான்!

சர்வலோக பலத்தை யுந்திரணமாய்க்கொளுந் திருநோக்கமும்
பர்வதேந்திரன்போலுமே பெருந் தன்மையும் மனவூக்கமும்
சர்வனோவிவன்? சார்ங்கியோவிவன்? சந்த்ரனோ விவனிந்த்ரனோ?
கர்வமேயுருக்கொண்டதோ? கன வீரமே வடிவாயதோ? (கூ)

அன்றேல், இந்நால்வருக்குமிவன் ஈடுகொடுப்பனா? முகம்வாடியிருப்பினும் இவனது காம்பீர்யம் மாத்திரங் கொஞ்சமேனும் வாடவில்லை. இப்படிப்பட்டவன் ஒருவன் நமக்குக் கிடைப்பானாயின் நமது தொழிலுக்கு யாதொரு குறையும்வாராது! (பிரகாசமாய்) அடே! அவரைவிட்டுத் தூரே நில்லுங்களடா!

(அப்படியே நால்வரும் போசனைவிட்டுவிட்டு மரியாதையுடன் தூரமாய் நிற்க) யாரப்பா நீ! எங்கிருந்து வருகின்றாய்? நீ சிறு பிள்ளையாயிருந்து இம்மல்லர்களுடன் சண்டை போடுகின்றாயே! நீ யிங்கு வரக்காரணமென்ன? நீ யிருக்குமிடம்யாது?

போஜ:—(ஆன்மகதமாய், சயபாலனை நோக்கி) சரி? இவன்தான் இப் பில்லர்களுக்கெல்லா மரசன்போலும். இப்பொழுதிவனுக்கென்ன உத்தரந் தருவது? நம் நிலைமையை எவ்வாறு வெளியிடுவது? (சற்று யோசித்து) எதற்கு மிவ்வாறுரைப்போம்! (பிரகாசமாய்) ஐயா! யான் ஒரு பரதேசி! தேசசஞ்சாரஞ் செய்யலாமென்று புறப்பட்டுவந்தேன்! வழிதெரியாமல் இக்காட்டிலகப்பட்டுக்கொண்டு, பசிதாகத்தினாற் களைத்து இம்மரத்தடியிற் படுத்திருந்தேன்! இவர்கள்வந்து என்மீது வீழ்ந்து இவ்வாறு யுபத்திரவம் செய்கிறார்கள்!

ஜய:—(ஆன்மகதமாய்) ஆ ஆ! பசிதாகத்தினால் வருந்தியிருயிருந்தும் இவனுடைய காம்பீர்யத்தையுந் தைரியத்தையும் பார்க்குமளவில் மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது. இவனைஎப்படியாயினும் சாமோபாயத்தினால் நம்மல்லரில் ஒருவனாய்ச் செய்யவேண்டும். (பிரகாசமாய்) அப்பா! மெத்தவும் பசிதாகத்தினால் வருந்தினவன்போல் தோன்றுகின்றாய்? இதோ சிறந்த மதுவிருக்கின்றது! (கண்சாடைகாட்டக் காவதனையுந் தண்டபாணியும் ஒரு தங்கத்தட்டிற்பழவர்க்கங்களையும், இரண்டு வெள்ளிக்கலசங்களில் மதுவையும் நிரப்பிக்கொண்டு வைக்க) இப்பழங்களை யருந்தி, இம்மதுவையுண்டு தாகசாந்தி செய்துகொள்! (மதுகலசங்களிலொன்றைப் போசனிடம் நீட்டல்).

போஜ:—(பழங்களில்ஒன்றைமாத்திரம்மரியாதைக்காக எடுத்துக்கொண்டு) ஐயா! இவ்வித உபாகாரத்திற்காக யான் தங்களுக்கு மிகவும் வந்தனஞ் செலுத்தத்தக்கவனா யிருக்கின்றனன்! ஆயினும் நம்குலத்தில் மதுபானஞ்செய்வது வழக்கமில்லை! தாகமு

மதிகமாயில்லே. தங்களுக்கேன் இக்கஷ்டம்? (மதுகலசத்தைத் திருப் பிவிடுதல்).

ஐய:—அப்பா ! இதை யருந்துவதனல் ஒரு கெடுதியு மில்லே.

உலகினி லுயர்நல முடையது மதுவே
புலவரருந்திடும் புனலுமிம்மதுவே
கலேயுறுமறையவர் கடவுளும் மதுவே
பலவித சுகத்தையும் பயந்திடும் மதுவே! (௧0)

இதைத்தான் அமுதமென்றும் பிரும்மாநந்தமென்றும் தேவர் களும் துறவிகளுங் கொண்டாடுவார்கள் ! வேதங்களிற்கூட தெய்வங்களுக்குள் முதல் தெய்வம் மதுவென்று சொல்லப் பட்டிருக்கிறது. மேலும், இம் மது சாதாரண மதுவன்று! உயர்ந்ததேனுடன் சேர்க்கப்பட்ட திராக்ஷாரஸம் தவிரவேறென் றும் இதிற் சேர்க்கப்படவில்லே. தேகத்திற் சிரமமுண்டா கும்பொழுது அதை நீக்கி யானந்தத்தைக் கொடுப்பது மது வல்லவோ? நீ சும்மா இதைச் சாப்பிட்டுப்பார் !

போஜ:—ஐயா ! இது எம் சாதியாருக்கடுத்ததன்று. மேலும்யாவருக்குமே மதுபானஞ் செய்வதனல் விளையுங்கெடு திகளனேகம் !

*"அறிவையழிக்குஞ் செயலழிக்கும்
அழியாமானந்தனேயழிக்கும்
செறிவுமறிஞர் மதியாத
செருக்கைவிளேக்கு மின்றூளும் !
முறியும் வெறுப்புமிகவிளேக்கும்
முனிவுவிளேக்கும் பகையஞ்சாக்
குறிகள்விளேக்கும் நகைவிளேக்கும்
கொள்ளேல் மதுவுண்டலேவேந்தே"! ()

* பிள்ளையார் புராணம்.

ஐய:—நல்லது! உனக்கிஷ்டமில்லாதிருப்பதனால் இப்பழங்களையாயினுமருந்து! (இன்னுமிரண்டு பழங்களை எடுத்துக்கொடுத்தல்).

போஜ:—(பழங்களை வாங்கிக்கொண்டு) தங்கள் அன்புக்கு யான் என்ன பிரதி செய்யப்போகின்றேன்?

ஐய:—அப்பா! யானின்னானென்றுனக்குத் தெரிந்ததோ! என்னைத் தான் இப்பில்லர்களுக்கெல்லா மரசனென்று சொல்லுவார்கள்.

போஜ:—ஐயா! யான் முன்னரே தெரிந்துகொண்டேன்.

ஐய:—எங்களுடைய தொழிலுனக்குத் தெரியுமோ? பிறர் பொருளைக் கொள்ளை யடிப்பதுதான்! (காவதனை வெள்ளிக்கலசத்தை சபபாலனிடம் நீட்ட, வாங்கிபெருந்துதல்)

போஜ:—(ஆன்மகதமாய்) ஆகா! மிகவும் பரிசுத்தமான தொழிலே! (பிரகாசமாய்) யான் அப்பொழுதே அறிந்து கொண்டேன்.

ஐய:—(மதுவின் ருசியை அபிநயித்துக்கொண்டு) ஆ ஆ! இதனுடைய ருசியையானென்ன சொல்லப்போகிறேன்! நீ கொடுத்துவைக்கவில்லை! அது போகட்டும்! நானொன்று சொல்லுகின்றேன்! நீ யப்படி நடப்பாயாகில் உயிருள்ளளவும் உனக்கு யாதொரு கஷ்டமும் நேரிடாது.

போஜ:—ஆ ஆ! அப்படியே செய்யக் காத்துக்கொண்டிருக்கின்றேன்! சொல்லுங்கள் தங்கள் மனத்திலிருப்பதை!

ஐய:—அப்பா! உன்னையே இப்பில்லர்களுக்கெல்லாம் பிரதானியாய் நியமிக்க விரும்புகின்றேன். உனக்குச் சம்மதமா?

போஜ:—(ஆன்மகதமாய்) ஆ! இஃதென்ன விபரீதம்! இத்தொழிலுக்கும் நாம் உட்படவேண்டுமோ? இச்சமயம் நாம் இவன் சொல்லுகிறபடி சம்மதிக்காவிடில் யாது நேரிடுமோ?

இதற்கென்செய்வோம்? (யோசித்து) சரி! இப் பில்லர்களுடைய திருட்டுவழிகளை யறிவதும் க்ஷத்திரியர்களுக்குரிய தன்மையே! (பிரகாசமாய்) அப்படியே! தங்களிஷ்டப்படி!

ஜய:—அப்பா! மிகவுஞ் சந்தோஷம்! நீ இதுமுதலெனக்குச் சிறந்த மித்திரனாய் விட்டனை! உன் பெயர் என்ன? நீ வசிக்கும் நாட்டின் பெயர் யாது?

போஜ:—(ஆத்மகதமாய்) இவனுக்கென்ன விடைகூறுவது? எப்படி நமது வாஸ்தவப் பெயரை யுரைப்பது? நல்லது இவ்வாறுரைப்போம். (பிரகாசமாய்) ஐயா! என்னைச் சைந்துலன் என்றுரைப்பார்கள்! யானிருப்பது மாளவநாடு!

ஜய:—ஆஹா! உன் பெயரைக் கேட்கும்பொழுதே அச்சிந்துல மகாராஜருடைய ஞாபகம் வருகின்றது. உன் வீரத்தன்மைக்குச் சரியான பெயரே! இதோ இக்கடகத்தைப் பரிசாகப் பெற்றுக்கொள்! இது முன்னொருகாலத்தில் மகாவீரனை ஓரரசனுடைய கரத்தை யலங்கரித்தது.

போஜ:—(வணங்கி) எல்லாம் தங்களனுக்கிரகம்! (வாங்கிக் கொள்ளல்)

ஜய:—நண்பா! இப்பொழுது வெளிச்சமுனக்கிங்கு நன்றாய்த் தெரிகின்றதா?

போஜ:—அவ்வளவு நன்றாகத் தெரியவில்லை!

ஜய:—(ஒருவித மையைப் போஜன் கண்ணிலிட்டு). நல்லது! இப்பொழுது பார்! என்னவாயிருக்கின்றது?

போஜ:—(ஆச்சரியங்கொண்டு) ஆ ஆ! இஃதென்ன? பகல்போற் பிரகாசமாயிருக்கின்றதே!

ஜய:—நண்பா! நீ என்னுடைய பிரதானியாகி விட்டபடியால் உனக்கினி யாதொரு துன்பமும் நேரிடாது. நாங்கள் இன்றையதினம் தாராநகரத்து இராஜகுமாரனுடைய அரண்

மனையைக் கொள்ளையடிப்பதாகப் புறப்பட்டோம். அவ்விராஜ குமாரனை அவனது சிற்றப்பன் கொன்றுவிட்டதாக நமது தூதர்கள் மூலமாய் இன்று கேள்விப்பட்டேன். இப்பொழுது அவ்விடம் செல்லுவதற்காகவே நாங்கள் இவ்விடத்தில் ஒன்று கூடினோம். நீயும் எங்களுடன் வரும் பக்ஷத்தில் வேண்டிய ரத்தினங்களையும் ஆபரணங்களையுங் கொண்டுவரலாம். நாங்கள் சொற்பமான பொன் வெள்ளி முதலியவற்றுக்கு ஆசைப்படுவதில்லை. அற்பர்கள் வீட்டிற் பிரவேசியோம்! அரசர்கள் அரண்மனையிற்றான் புகுவோம்! இரத்தினாபரணங்களைத்தாம் தொடுவோம்! இதுவரை என் பாலிய சினேகிதனாகிய அச்சிந்துல மகாராஜரது புதல்வனுக்கஞ்சி அப்பட்டணத்திற் பிரவேசித்ததில்லை. அவனது சிற்றப்பன் அவ்வாபரணங்களைக் கைப்பற்றுவதற்கு முன்னரே நாமங்குச் செல்லவேண்டும். ஆகலின் சீக்கிரம் செல்லுவோம் வருகிறையா (போசனதுநெற்றியில் ஒரு பொட்டிட்டு) இப்பொட்டின் மகிமையால் நீ யொருவர் கண்ணுக்கும் புலப்படாமலே எவ்விடத்திலுஞ் சஞ்சரிக்கலாம்.

போஜ:—(ஆன்மகதமாய்) ஆஹா! என்ன காலம்! நம்மைக் கொண்டே நம்மரண்மனையைக் கொள்ளையடிக்கப் பார்க்கின்றனர்கள்! என்ன செய்வோம்? இதற்கு எவ்விதம் நாமுடன்படுவது? (சற்று ஆலோசித்து) காலம் இப்படி நேரிட்டுவிட்டது. இனி நாம் பின் வாங்குவது சரியன்று. எதற்கும் நம்மரண்மனையைத்தானே கொள்ளை யடிக்கப்போகின்றனர்கள்! இதனால் இதாருக்கு நாமொரு தீங்கு மிழைக்கப்போகிறதில்லை. இது நமக்குத் தெரிந்து நடந்தாற் பின்னொரு சமயத்தில் நமக்கே பயன்படும். இவர்களுடைய இரகசிய வியாபாரங்களையு மறியலாம். (பிரகாசமாய்) ஆகா! அப்படியே வருகின்றேன்.

ஜய:—அப்படியாயின் சீக்கிரம் போவோம் வாருங்கள்! (ஆன்மகதமாய்) இன்று நமக்கு வேண்டிய திரவியம் கிடைக்கு

மென்பதிற் சந்தேகமில்லை. இதற் கத்தாட்சியாகவே கடவுள் நமக்கு இம்மகாவீரனைக் கூட்டிவைத்தனர்!

(யாவரும்நிஷ்கிரமித்தல்)

---

## இரண்டாங் களம்.

---

### இடம்:—விலாஸவதியினரண்மனையில்

### ஒரு சோகாகாரம்.

(ஏகவேணீதரையாய்த் தலைமீது கைவைத்து விசனப்பட்டுக்கொண்டே தன்னந் தனியாய் வீற்றிருந்தபடி **விலாஸவதி** பிரவேசித்தல்).

**விலாஸவதி** :—(மெலிந்த குரலுடன்) ஹா! பிராணநாதா! உம்மைக்கொன்றும் பாவியேன் யான் ஜீவித்திருக்கின்றேனே! உலகத்தில் வநிதையருள் தம்புருஷரையும் மருந்து கொடுத்துக் கொல்பவருண்டோ? ஐயோ என் அன்பர் நலம் பெறுவாரென்று நம்பியன்றோ அம்மருந்தையான் அப்பாலிற் கலந்துவைத்தேன்! அதே எனக்குப் பிரதிகூலமாய் முடிந்ததே! இனி என்னிலும் மகாபாதகி இவ்வுலகில் ஜனிக்கப்போகின்றனளோ! (பாடுதல்).

(ரு) இராகம்-பியாகடை. தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஈசா! யான் என்செய்வேன்? -எவண்சகிப்பேனிதை
மோசம்போனேனையோ!

அநுபல்லவி

ஆசையுடன்வந்த- ஆருயிர்நேசரை
நேசமில்லாப்படி-நீலியான் கொன்றேனே!— ஈ.

சரணங்கள்.

ஏகபோகமாக - என் பிராணநாதரின்
தேகசுகத்தையான் - தேடியிக்கொடுமையை
போகத்தாற் புரிந்தவிம் - மூடையினுயிரின்னும்
போகவில்லையேயந்தோ - பொல்லாவுடலைவிட்டு!— ௬.

யோசக்காரி இவள் - முகம் பார்க்கலாகாதென்று
ஓசைசெய்யாமலே - ஓடியிறந்தாரோ ?
காசினியிலிவள்போற்-கடினைவேறில்லையென்று
கூசிமனம்நொந்து - குத்திக்கொண்டிறந்தாரோ?— ௭.

ஹா பிராணநாதா ! இப்பொழுதுதான் மலர்ந்து வருகிற செந்தாமரை யிதழ்போல் அகன்று நீண்டு கடைப்புறம் சிவந்து கருவிழிபொருந்தி கருணாரஸம் பொழிகின்ற நுமது திருக்கண்களினழகையும், மத்தகஜத்தையரித்துப் பர்வதாக்ரத்திலுலாவும் ஆண் சிங்கம்போல் நடக்கிற நுமது காம்பீர்யமான நடையினழகையும், சந்திரிகைபோற்குளிர்ந்தும் அமிருதம்போல் மதுரமுமான நுமது பிரியவசனங்களினானந்தத்தையும், புண்ணியசீலரான எந்த விண்ணுலகத்து மாதர்கள் பார்த்துங் கேட்டு மானந்திக்கப் போகின்றனரோ? ஹா பிராணேச்வரா! என்னுடைய தௌர்ப்பாக்கிய வசத்தினால் யானே உம்மைக் கொன்று, காற்றினாலடிபட்டுக் கடலிலாழ்கிற நாவாய்போல் இதோ துக்கசாகரத்தில் மூழ்கி நசிக்கின்றேன்! ஹா பிராணநாயகா! மூடையான யான் செய்த பிழைகளாலேயே லோகோத்தரமான ஸௌந்தரியமுள்ள நும்மைக் காணாமல், அலைகளால் மோதப்பட்டுக் கரைந்து க்ஷீணிக்கிற நதீதீரம்போல் விசனத்திற் கரைந்தழுகின்றேன்!

(பிரவேசித்து)

**தரங்கவதீ:—** (ஆன்கமதமாய்) இன்றாயினும் நம்மைக்காண விடைதருவளோ ? இத்தனைநாளாய் என்னுடன் பிரியமாய்ப்

பேசிக்கொண்டிருந்தவள் என்னைப் பார்க்கக்கூட மாட்டேனென்பதற்குக் காரணம் யாது? (செவிகொடுத்து) ஏதோ மெலிந்தகுரல் ஒன்று கேட்கின்றது! (நோக்கி) அந்தோ! நம் விலாஸவதீ தேவியாரின் குரலே! தெய்வாதீனம் கதவுதிறந்திருக்கின்றது! நல்லது! ஒருபுறமாய் மறைந்துநின்று இவள் சொல்லிக்கொள்வதைக்கவனித்துக்கேட்போம். (அப்படியே மறைந்து நிற்றல்).

விலா:—ஹா! கஷ்டம்! கஷ்டம்!! அநந்த கல்யாணகுணங்களால் அலங்கிருதரான அந்த ராஜீவாக்ஷரைப் பறிகொடுத்து இனி எப்படி யான் ஜீவிப்பேன்! ஆலாகலவிஷத்தையுண்ட வொருவன் ஜீவதாரணஞ்செய்வதரிதுபோல் இப்பர்த்திரு சோகமாகிற விஷத்தையுட்கொண்ட யான் இனி ஜீவிப்பது துர்லபம்! யான் மஹா கொடிய பாதகஞ் செய்தவள்! யானிப்படியே நசிக்கவேண்டியவள் தான்! ஐயோ! என் செய்வேன்? துக்கத்தால் தபிக்கின்றேன்! ஆசையாலழிகின்றேன்! பர்த்திரு சோகத்தால் வாடுகின்றேன்! ஹே ஈசா! இப்பாவி ஈடேறுவதற்கு ஒருவழியு மில்லையோ?

*"கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
கன்னெஞ்ச முருகவிலையே!
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
கற்பிக்க வொருகடவுளோ?
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்குமுண்டோ?
வானமாய் நின்றின்ப மழையா யிரங்கியெனை
வாழ்விப்ப துன்பரங்காண்!
பொல்லாத சேயெனிற் றாய்தள்ள னீதமோ
புகலிடம் பிறிதுமுண்டோ?

* தாயுமானவர்.

பொய்வார்த்தைசொல்லிலோ திருவருட்கயலுமாய்ப்
புன்மையே ஞவனந்தோ!
சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா விருக்கவருளாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே!'' (கஉ)

(களைத்து அறையில் ஒருபுறத்தில் மூர்ச்சித்து வீழ்தல்).

**தரங்கவதி:**—(ஆன்மகதமாய்) ஆஆ! என்ன மோசம்! என்ன மோசம்! அந்தோ! இம்மாது சிரோமணி ஒருகபடமும்றி யாது அப்பாதகன் முஞ்ஜராஜனது வார்த்தைகளை நம்பி, இராஜகுமாரர் இறந்துவிட்டதாக நினைத்து, துக்கசாகரதில் மூழ்கி, பசிதாகத்தைக்கூட கவனியாமல் இம்மூன்று நாளாய் இவ்வறைக்குள்ளேயே தன்னைத்தனியாய் அடக்கஞ் செய்துகொண்டு ஒருவர் முகத்தையும் பாரேனென்று பிடிவாதங்கொண்டு கரைந்துருகுகின்றாளே! (பாடுதல்).

(க) இராகம் - பியாக், தாளம் - ஏகதாளம்.

பல்லவி.

மாதுசிரோமணி - மலிகின்றாளே!
நாதனை நினைந்து - நலிகின்றாளே!

அநுபல்லவி.

வானினும் வீழ்ந்த-வநிதைபோலிவள்
தீனையாயிங்கே - தியங்குகின்றாளே!— மா.

சரணங்கள்:

ராஹுபீடித-ராகாசந்த்ரிகைபோல்
மோஹங்கொண்டிவள்-மூரணுகின்றாளே!— மா.
பனியில்வதங்கும் - பங்கஜப்பொய்கைபோல்
தனியாயிங்கிவள் - தவிக்கின்றாளே!— மா.

(சோகம்) ஐயோ! இஃதென்ன சங்கடம்? இதுவரை பேசிக்கொண்டிருந்தவள் ஏனோகீழே வீழ்ந்திருக்கின்றனள்? (சென்றுதொட்டு) அந்தோ மூச்சுக்குரல் கூடக்கேட்கவில்லையே ! இவள் மூர்ச்சித்தே விழுந்திருக்கிறாளென்பதிற் சந்தேகமில்லை. நல்லது! இதனையே வியாஜமாக வைத்துக்கொண்டு இவளருகிற்செல்வோம். (அப்படியே சென்று பிரகாசமாய்) அம்மணீ! எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்! ஏனிப்படிக்காரணமின்றி விசனப்படுகின்றீர்கள் ?

விலா:—(கண்விழித்து) ஹா! தரங்கவதியா? நீ ஏன் இங்கு வந்தனை? என்னைத்தனியாய் விட்டுச்செல்!

தரங்க:—அம்மணீ! தங்கள் மனத்திலிருக்கும் விசனத்தை என்னுடன் உரைக்கலாகாதா? தங்கள் மாமியார் ஸாவித்திரீ தேவியார் தங்களைக் காணவேண்டுமென்று பன்முறை சொல்லியனுப்பியும் தாங்கள் பாரேனென்று சொல்வதழகோ?

விலா:—(எழுந்துட்கார்ந்து, தைர்யத்துடன்) சகீ! தரங்கவதீ ! நீயொன்றுமறியாய்! யான் புரிந்த செயலை நினைக்க நினைக்க என் மனம் புண்ணுய்ப்பற்றி எரிகின்றது! (பாடுதல்).

(எ) இராகம்-பியாக்: தாளம்-ஏகதாளம்.

பல்லவி.

ஓசகி! யான் யாதுசெய்வேன்?
மோசம் போயினேன் !

அநுபல்லவி

ஆசையினு லறிவிழந்தே
அழியலாயினேன் !— ஓசகி.

சரணங்கள்.

காதலனைப்பறிகொடுத்தும்-கல்லுப்போலயான்
பூதலத்திற்பாரமாகிப் - புலம்பலாயினேன் !— ஓசகி.

இன்னவிதமென்கொழுநர் - இறந்தனரென்று
அன்னைகேட்கிலென்படுவாள்-என்னசொல்லாளோ!—ஐ

ஐயோ! புத்திரனினும் பத்துமடங்கு அதிகமாயென்னைப் பிரேமையுடன் பார்த்துவந்த என் மாமியார் இச்செய்தியை யறிந்தால் என்ன நினைப்பள்? அந்தோ! யான் யாவருக்குந் துரோகியானேனே! இந்தத்துக்கத்திற்கு இனிவிமோசனமேது?

**தூரங்:**—என்ன! என்ன! தாங்கள் சொல்வதெல்லாம் விந்தையாயிருக்கின்றது! தேவியார் இனித் தங்களைக்காணுமல் ஒருகணமாயினு முயிர்த்திரார்கள். வாருங்கள், தேவியார் அரண்மனைக்குச் செல்வோம்.

**விலா:**—சகி! நீ ஏன் என்னை வருத்துகின்றாய்? நான் இவ்வறையிலேயே உபவாசமிருந்து என்னுயிரைத்துறக்க நிச்சயங்கொண்டேன்! நீ பேசாமற் செல்லுவாய் (தூரங்கவதி முஞ்சன் வருவதைக்கண்டு கொஞ்சதூரஞ்சென்று மறைந்து நிற்றல்)

(பிரவேசித்து)

**முஞ்ஜன்:**—(காமாதுரனுய் விலாஸவதியைக்கண்டு ஆன்மகதமாய்) ஆ ஆ! பர்த்திரு சோகத்தினுல், வெள்ளம்வந்து வற்றிப்போன நதிபோலும், நீரினின்றும் பிடுங்கி யெறியப்பட்ட தாமரைக் கொடிபோலும், களிற்றினின்றும் பிரிக்கப்பட்ட பிடிபோலும், இளைத்துக் கறுத்து வாடி மலிந்திருந்த போதிலும் இவளுடைய அழகை யான் என் சொல்வேன்!

* "அன்னம் பழித்தநடை யாலம் பழித்தவிழி
யமுதம் பழித்தமொழிகள்
பொன்னம் பெருத்தமுலை கன்னங் கறுத்தகுழல்
சின்னஞ் சிறுத்தவிடையு

* விவேக சிந்தாமணி.

மென்னெஞ் சுருக்குமிவ டன்னெஞ்சு கற்றகலை
யென்னென் றுரைப்பதினிநான்
சின்னஞ் சிறுக்கியிவள் வில்லங்க மிட்டபடி
தெய்வங்க ளுக்கபயமே!" (கரு)

ஆஆ! இவளுடைய அபூர்வமான ஸௌந்தரியத்தைக்கண்டு இவளைச்சிருஷ்டித்த ப்ரும்மதேவனே மோகிப்பர்! அப்படியிருக்க வேறெந்தப் புருஷன் தான் யௌவனபரிபக்குவத்தால்அதிமனோகரமாய் விளங்கும் இவளுடைய அழகுக்குட்பட்டு மயங்கான்?

* "வண்டுமொய்த் தனைய கூந்தல்
மதனப்பண் டார வல்லி
கெண்டையோ டொத்த கண்ணாள்
கிளிமொழி வாயி னூறல்
கண்டுசேர்க் கரையோ தேனோ
கனியொடு கலந்த பாலோ
வண் டருங் கண்டார் விந்த
வணங்கினை வணங்கு வாரே!" (கச)

ஆகலின், இவளுடன் ஒரு நாளாயினுங்கூடி வாழாததேகம் எதற்கு? யான் இவளுடைய சுந்தரமான வடிவைக்கண்டு பாலியம் முதல் இவளை யெப்படியாயினும் மணம்புரியவேண்டுமென்று நினைத்திருந்தபோதிலும், எனது காரியத்தைச் சாதிப்பதற்காகவே இவளைப் போஜனுக்கு மணஞ்செய்வித்தேன்! இப்பொழுது நமது சூழ்ச்சியாற் போஜனும் சுலபமாகவே தொலைந்துவிட்டனன். இவ்விராஜ்ஜியமும் அகண்டகமாய் நம்

* விவேகசிந்தாமணி.

கைவசமாய்விட்டது. இவளையுமெப்படியாயினும் மணஞ்செய்துகொண்டால், நமது இஷ்டத்தைப்பரிபூர்த்திசெய்வதுமன்றி மகாராஷ்ட்ரமாகிய பூபாள நாட்டிற்கும் நாம் அரசனாய்விடலாம். (சிறிதுதூரம் பரிக்கிரமித்து) ஆயினும் இவளுடையமனத்தை எப்படித் திருப்புவது! எதற்கும் நம்மாலான முயற்சிகளைச் செய்துபார்ப்போம். இவ்விராஜ்ஜியங் கிடைத்ததுபோலவே இவளுங் கிடைக்கட்டுமே! நல்லது இதுவே தருணம்! இச்சமாசாரம் இன்னும் போஜனது தாய்க்குத் தெரிந்திராதென்றே நம்புகின்றேன்! அன்றேல், இவ்வநியாயத்தை நம்மிடத்தில் முறையிட்டிருப்பள்! நல்வேளையாய் நமது சகோதரி சாருமதியும் பூபாள நாட்டிற்குச் சென்றனள்! அவளுக்குப் போஜன் இறந்துபோன சமாசாரம் தெரிவதற்கு முன்னரே இவளை நம்மிடத்தில் மோகிக்கச்செய்து எப்படியாயினும் மணந்துகொள்ள வேண்டும். பிறகு இவ்விரண்டு செய்கைகளைக் கேட்டாலே இவ்விருவர்களும் மனம் வெடித்து இறப்பார்கள் ! இதுதான் அப்பிரதிபந்தங்கள் இரண்டனையும் ஒரேயடியாய்த் தொலைப்பதற்குச் சரியான உபாயம். (விலாஸவதியினருகிற்சென்ற பிரகாசமாய்) என் கண்மணி! எழுந்திரு ! எழுந்திரு ! ஆ! நீ இந்த ஸ்திதியிலிருப்பதற்காகவோ நான்பட்ட கஷ்டமெல்லாம் ?

விலா:—ஆ! தெய்வமே ! (தைர்ரியங்கொள்ளல்.)

முஞ்ஜ:—(ஆன்மகதமாய்) அந்தோ! இவள் இவ்வாறு துயரப்படுவதைக்கண்டு என் மனமுங் கலங்குகின்றதே! இவளெப்படி ஆறுதலடைவள்? ஆயினும் இவளுடைய அழகையான் என் சொல்வேன் ?

(அ) இராகம்-கல்யாணி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

பாக்கியமே பாக்கியம் - இம்மங்கையைப்
பார்ப்பவரே சிலாக்கியம் !

அநுபல்லவி.

பாக்கியமே பாக்கியம் - பாரினுளிவள்சிலாக்கியம்
பால்வடியுமிவள் - பாலிகையே போக்கியம் !— பா.

சரணம்.

இகபரமிரண்டிற்கும் - எனக்கிவளேயோக்கியம்
என்றுமென்மனத்தினின் - விலகாதிவள்வாக்கியம்!
சகந்தனிலிவளுடன் - சுகிப்பதுவேசிலாக்கியம்
தரித்திரத்திசையிலுமிவளே பெரும்பாக்கியம்!— பா.

எப்படியிருப்பினு மிவளே மணந்து கொள்வதேசரி! (பிரகாசமாய்) ஆ! விலாஸவதி! நீ இப்படித் துயரப்படுவதுஞ் சரியோ? உன்னைக்கண்டு நின்பெரியோர்கள் துயரப்படுவதையாயினும் நீ யோசிக்கவேண்டாமா ?

விலா :—ஆம்! என்பெரியோர்கள் என்னைக்கண்டு துக்கிக்காமல் என்செய்வார்கள்! என் அருமை மாமியார் இம்மூன்று நாளாய்க் கொடிய துயரத்தினால் வருந்தி என்முகத்தைக் கண்டாவது தனது சோகத்தைக் கொஞ்சம் போக்கிக் கொள்வதாய்ச் சொல்லியனுப்புகின்றார்கள்! ஆயினும் யான் இவ்விதக் கொடுஞ்செயலைப் புரிந்துவிட்டு என் மாமிமார்களை எப்படிக்காண்பது? மாமா! யானின்னும் இக்கொடிய உயிரை வைத்திருக்கின்றேனே? என்னையும் அவருடன் அக்கினியில் ஸம்ஸ்காரஞ் செய்துவிட்டிருக்கலாகாதா ?

முஞ்ஜ :—என் கண்மணீ! இது நீ செய்த பிழையன்று! நீ செய்ததெல்லாம் அவனுடைய நன்மைக்காகவேதான்! விதியின் செயல் அவன் அப்படி இறக்கவேண்டியிருந்தது! நீ இதையறிந்தும் இப்படி அன்னபானமில்லாமல் வருந்துவது தகுதியன்று!

விலா :—மாமா! பதியைக் கொன்றுவிட்டும் யான் இன்னும் ஜீவித்திருக்கவேண்டுமோ?

**முஞ்ஜ:**—(ஆன்மகதமாய்) அந்தோ! இவளது துக்கத்திற்குக் கங்குகரையில்லை போற்றோற்றுகின்றதே! இவளுடைய மனத்தையான் எப்படித்திருப்புவது? எனதெண்ணம் சுலபமாய் நிறைவேறுமா? (விலாஸவதியை நோக்கி) ஆஆ! இவளுடைய ஸர்வஜனமோஹனமான வடிவினழகைக்கண்டும் யான் சும்மாவிருப்பேனோ? எப்படியாயினும் இவளை மணந்துகொள்வதே சரி! (பிரகாசமாய்)ஹா! விலாஸவதி! நீ இவ்வாறு விசனப்படுவதனாலெனக்கொன்றுந் தோன்றவில்லையே! இதற்காகவோ யான் உன்னை இவ்வளவு அருமையாய் வளர்த்தேன்!

ஐயையோ வென்ன செய்வேன்?
அகத்திலும் நினைத்தே மல்லேம்
வெய்யவன் குலத்து தித்தோன்
வீழ்வனென் றெக்கா லத்தும்!
தையலே யுனக்கு வேண்டாம்
தரணிபன் சுதனே நீயும்
பையவே மறந்து வேறு
பாவனைக் கொள்ளு வாயே! (கரு)

**விலா:**—என்னை அருமையாய் வளர்த்த மாமா! தங்களுக்கேனிந்த வீண்சபலம்! இனி வியர்த்தமன்றோ என்னுடைய வாழ்க்கையெல்லாம்! அப்படியிருக்க, இப்பாவியேனைப்பற்றித் தங்களுக்கேன் இவ்வீண்கவலை! இனி எனக்கு மரிப்பதேதான் சுகத்தைத்தரும்!

**முஞ்ஜ:**—பேதாய்! இதென்ன இவ்வாறெல்லாம் சிந்தித்துக்கொண்டிருக்கின்றனை? புருஷரை இழந்த ஸ்திரீகளெல்லாம் பதியுடன் கூடவேயா இறந்துவிடுகின்றார்கள்? வைதவ்யத்தையடைந்தும் எத்தனை வனிதைகள் சுகமாய் வாழ்ந்திருக்

கவில்லே! போனதைப் பற்றிச்சிந்திப்பதிற் பயனென்னே? இனி நடக்கவேண்டியதைப் பற்றி யோசிப்பாய்!

" ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும்
மாண்டார் வருவாரோ மாநிலத்தில்?"

நான் உயிருடனிருக்கும்வரை உனக்கு யாதொரு குறையும் வாராது! வீணுய் இவ்வாறு தேகத்தைக் கிலேசப்படுத்திக் கொண்டு வருந்துவதிற் பயனென்னே? உத்தமநாயகர்களுடன் சுகித்திருந்த ஸ்திரீகள்கூட இப்படி விசனப்படார்களே. ஆ! அவன் இந்நேரம் உயிருடனிருப்பானுயின், நீ அவ்வே சிக்கு அடிமையாகவல்லவோ போயிருக்கவேண்டும். உன்னு டன் கூடேனென்று சபதஞ்செய்த அப்பாவி இருந்தென்ன இறந்தென்ன?

விலா:—(காதிற்கைவைத்து) ஹா! கிருஷ்ணை! கிருஷ்ணை!! இக்கொடிய பேச்சுக்களையெல்லாங் கேட்கவோ யான்இன்னும் உயிர்தரித்திருக்கின்றேன்? (வேறொரு பக்கம் திரும்பிக் கொள்ளல்).

முஞ்ஜ:—விலாஸவதி! நீ இப்பொழுது சகல போகங்களையு மனுபவிக்கத்தக்க தருணியாயிருக்கின்றனே! இவ்வேஷமுனக் குத் தகுதியன்று! என்றுல் இரக்ஷிக்கப்பட்டுவருகிற நீ இம் மாதிரி வருந்துவது யுக்தமன்று!

விலா:—(ஆன்மகதமாய்) ஹா! என்ன கஷ்டம்! என்னகஷ் டம்! யாவரையுந் துக்கிக்கச்செய்வதற்காகவே இப்பாவியே னுவி வஜ்ஜிரம்போற் கடினமாய்ச் சிருஷ்டிக்கப்பட்டதோ! ஐயோ என் மனத்திலிருப்பதை யறியாமல் எனக்கு நன்மை யைச் செய்யவேண்டு மென்றல்லவோ என்மாமா இவ்வாறெல் லாம் கூறுகின்றனர்! எங்கும் பரவி எரியும் நெருப்பை ஏரா ளமாய் நெய்யைக் கொட்டி யணைப்பதுபோலல்லவோ யிருக் கின்றது எனது நெஞ்சத்திலிருக்குந் துக்கத்தைத் தணிப்பதற் காக இவர் செய்யுமுபாயம்! இவர் சொல்லும் ஒவ்வொரு வார்த்

தையும் நாராசம்போலன்றே என் காதில் விழுகின்றது! (பிரகாசமாய்) ஹா மாமா ! இனி இத்தாருண்யத்தினற் பிரயோஜனம் யாது! அவருடன் எனது தேகஸௌபாக்கியமும் பாழாய்ப்போய் விட்டதன்றே?

முஞ்ஜ:—ஹே சுந்தரீ! ஏனிப்படி வருந்துகின்றாய்? கடைந்தெடுத்த ஸ்வர்ண பிம்பம்போல் திவ்ய காந்தியோடு விளங்குகிற உன்னுடைய தனுவினிணையில்லா வெழிலையும் பரிபூர்ணமான யௌவன பாக்கியத்தையும் வீணை பிடிவாதத்தால் நீ யனுபவியாமற் கெடுத்துவிடாதே! சகல ஸாம்பிராஜ்ய போகத்தையுந் தரத்தக்கவனாய் யானிருக்கும்பொழுது; நீ இந்நிலையிலிருக்கத்தகுமோ? லாவண்யஸமூகமே உருவெடுத்து வந்தாற்போல் விளங்குமோர்யுவதி, திவ்யபரிமளத் தைலந்தடவி, மஞ்சள் நீராட்டி, அகிற்புகையூட்டி, ஆபரணங்கள் பூட்டி, அழகாகப் பின்னலிட்டுப் பூச்சூட்டி, கூந்தலை யலங்கரிக்காமல், உச்சிவகிடுமின்றி ஒரேசடையாய்த் தன்னழகிய கேசபாசத்தைப் பாழடையச் செய்வதழகோ ? நவரத்தினமிழைத்த ராஜ சிம்மாசனத்திலுட்கார்ந்து, புஷ்பாலங்கார சோபிதமான திவ்விய மஞ்சத்திற் படுத்துச் சுகித்திராமல்,இவ்விதம் தாபஸிபோல் தரையிற் புரண்டழுவது நேர்த்தியோ? சிறந்த பொன்னுடையைத் தரியாமல் புழுதியாலுங்கண்ணீராலும் மலினமடைந்த இவ்வழுக்கு வஸ்திரத்தை யுடுப்பது முறையோ? திவ்ய ரசங்களமைந்த அன்னங்களும் பானங்களும் யதேஷ்டமாகவிருக்கத் தீர்த்தாகாரமின்றி இவ்வறைக்குள் உபவாசமிருந்துவதங்குவது சரியோ?—

விலா:—அந்தோ ! பதியையிழந்த பாவையர்கட்கு இப்பூஷணங்களாலு மாடைகளாலு முபசாரங்களாலும் என்ன பிரயோஜனம்! தந்தியில்லாத வீணையும், சக்கிரமில்லாத இரதமும்போலுமன்றே பதியில்லாத ஸ்திரீகளின் வாழ்க்கை ?

**தாரங்கவதி:**—(மறைவாய் ஆன்மகதமாய்) ஐயோ! எல்லாம் அதி கருணமாயிருக்கின்றதே !

**முஞ்ஜ:**—(ஆன்மகதமாய்) ஆஹா! இவளுடைய மனது மகத்தான துக்கத்தில் ஆழ்ந்திருக்கின்றது! இவளை நன்மொழிகளினாலேயே வசப்படுத்தவேண்டும்! (பிரகாசமாய்) ஹே திவ்யசுந்தரீ! உன் சுந்தரவடிவைக்கண்டு யார்தாம் மோகங்கொள்ளார் ?

கோமகளே! நினதுதிரு வைப வத்தைக்
கொஞ்சமும்நீ யறிந்திட்டா யல்லை போலும்!
நாமகளு நின்னுவின் சிறப்பைக் காணில்
நான்முகனின் நல்வாயி லொளிந்து கொள்வள் !
பூமகளு நின்புருவ வனப்பை நோக்கில்
பூவிடையிற் றலைவணங்கி மறைந்து நிற்பள்!
பாமகளு நின்பார்வை யழகைப் பார்க்கில்
பருவதத்தின் குகையிடையே பதுங்கிச் செல்வள் !

அடி பேதாய்! இந்த்ராதி தேவர்களும் உன்னைக்காணில் வியா மோகங்கொண்டு தத்தம் பத்தினிகளைத் தள்ளிவிட்டு உன்னைப்பத்நியாயடைய நித்தமும் சிரசில் வைத்துப் பூஜிப்பார்களே! அமிருத கலைகளா லகில லோகங்களையும் ஆனந்திப்பிக்கின்ற பூர்ணேந்துவையொத்த வதனமுடைய ஹே ஸுமுகி ! உனது அங்கஸௌந்தரியம் முற்றும் பார்க்கப் பதினாயிரங்கண்களிருப்பினும் போதா !

**விலா:**—(சோகாக்கிராந்தையாய்) ஹா! பிராணநாதா ! (மூர்ச்சித்து வீழ்தல்).

**தாரங்க:**—(மறைவாய்) ஆஹா ! என்னவஞ்சனை ! என்ன வஞ்சனை! இராஜகுமாரரைக் கொல்லப்பார்த்ததுமன்றி பாதி

வ்ரத்யமே வடிவெடுத்து வந்தாற்போலிருக்கும் இப்பேதையை யுங் கெடுத்துவிட எண்ணங்கொண்டனனே! பாபம்! இவள் என் செய்வள்? இவ்வஞ்சகனது வலையிலகப்பட்டுக்கொண்டு இருளாற் பிரதிபாதிக்கப்படுகிற பிரகாசம்போல், இம்மாது சிரோமணி கருத்து நொந்து களைத்துருகுகின்றாள்! நாம் உடனே தேவியாருக்கிதைத் தெரிவிக்கவேண்டும்! இனி ஒரு கணமேனுந் தாமதிக்கலாகாது! (நிஷ்கிரமித்தல்).

**முஞ்ஜ:**—(விலாஸவதியைத் தட்டி எழுப்பி) ஆ! என் கண்மணி எழுந்திரு! எழுந்திரு!

* "ஈண்டு நாளு மிளமையு மீண்டில
மாண்டு மாண்டு பிறிதுறு மாலைய
வேண்டு நாள்வெறி தேவினிந் தாலினி
யாண்டு வாழ விடருழன் றாழ்தியே!" (கஎ)

ஹே சுந்தரீ! சர்வலோக மோகனமான நினது சரீரத்தை இப்பொழுது யௌவன ஸம்பத்து அடுத்திருக்கின்றது! அது நீர்க்குமிழிபோற் சொற்பகாலவாழ்வுள்ளது! அஃது உன்னை அதிக்கிரமித்துப் போய்விடில், பிரவாகத்தால் தள்ளுண்டுபோன ஜலம்போலும், வெயிலில்வதங்கிப்போன ஜாஜிமலர்போலும் திரும்பிவாராது! ஆகலின் சகல சுகங்களையு மனுபவிப்பதற்கு யோக்கியமான இவ்விளம்பருவத்தை வீணாக்கிவிடாதே! திவ்யாபரணங்களைப்பூணு! திவ்யோபசாரங்களைப்பேணு! எனது அந்தப்புரஸ்திரீகளுக்கெல்லாம் மேலான பதவியையடைந்து எனக்கிஷ்டமகிஷியாய், இத்தாரா ராஜ்ஜியத்திற்குப் பட்டமகிஷியாய் வாழ்ந்திரு!

**விலா:**—(மூர்ச்சைதெளிந்து கண்விழித்தெழுந்து) ஹா! இதென்ன! கனவோ யான் காண்பதும் கேட்பதும்? என்மாமாவும் இப்

* கம்பராமாயணம்.

படிச்சொல்லுவரோ? அல்லது நான் புரிந்த துஷ்கிருத்தியமே இவ்வாறு வடிவங்கொண்டு என்னை வருத்துகின்றதோ? ஐயோ! என்செய்வேன்? என்ன கொடிய ஜன்மங்கொண்டேன்! சீ! சுடவேண்டுமிச்சன்மத்தை! (முகத்தைத்திருப்பிக்கொள்ளல்.)

முஞ்ஜ:—ஹே பீரு! ஏனிப்படிச்சிந்தித்துக் கஷ்டப்படவேண்டும்? ரூபத்திலும் யௌவனத்திலும் பாக்கியத்திலும் உனக்கனுரூபனான என்னைப் பர்த்தாவாகவடைந்து சகலபோகங்களையுமனுபவித்தலைப்பார்.

விலா:—(ஸம்ப்ரமத்துடன்) என்ன! என்னசொன்னீர்? (கோபத்துடன் எழுந்திருத்தல்).

முஞ்ஜ:—ஏ கோமளாங்கி! இப்படியேன் வீணாய்க்கஷ்டப்படவேண்டும்? இறந்துபோன கணவன் திரும்பியும் வருவனோ? வேண்டாம்! இவ்வீணான சிந்தனைகளெல்லாம் விட்டுவிட்டு, உயர்ந்த ஆபரணங்களாலுமாடைகளாலும் நின்னழகிய தேகத்தையலங்கரித்துக்கொண்டு, நாட்டிய ஸங்கீதகேளிகள் நிறைந்த இராஜசபையிற் சத்திரசாமராதியுபசாரங்களுடன் ஸிம்மாஸனத்தின்மீது ராஜராஜேசுவரியாய் வீற்றிருந்து என்னைக்களிக்கச்செய்வாய்!

விலா:—(கோபத்துடன்) போதும்! போதும்! நிறுத்துமித்துர்ப்பாஷணையை! யாரிடத்தில் இவ்வசனங்களை மொழிவது?

முஞ்ஜ:—ஏ விலாஸவதீ! நீ இம்மாதிரி கோபித்துக்கொள்வதுமழகாயிருக்கின்றது! இப்பொழுதுதான் உன்னுடைய புருவக்கொடியானது கோபத்தினாற் குடிலமாகி மன்மதனுடைய வெற்றிக்கொடியின் சோபையை யதிக்கிரமிக்கின்றது! திடீரென்று துடிப்பதனால் நினது அதரபிம்பமும் மந்தமாருதத்தினாலசைக்கப்பட்டு மலர்ந்துவரும் பந்தூக புஷ்பம்போல் அதிககாந்தியோடு விளங்குகின்றது!

**விலா :**—(பெருமூச்செறிய, அதிக கோபத்துடன்) அடே பாபீ! எனிப்படி வீணுய்க்குழறுகின்ருய்! உன்னுடைய ராஜ்ஜியத்தையும் ஸம்பத்தையுமிச்சித்து உனக்குடன்படும்ஸாமான்னியஸ்திரீ என்று என்னையுமெண்ணினையோ? உன்னுடைய மகிஷிகளுக்குள் அக்ரமகிஷியாயிருந்து உன்னுடைய ஐசுவரியத்தைப்புஜிப்பது எனக்கொருதிருணமடா! மூடா! இந்த வினயத்தாலும் பிரியவசனங்களாலும் என்பாதிவ்ரத்யத்தை உன்னாலசைக்கலாகாது! அடே தூர்த்தா! என்னை ராஜஸ்திரீ என்றும் உனது மருமகள் என்றுங்கூடச்சற்றும் யோசியாமல் என்ன அடாத வார்த்தைகளையெல்லாம் உரைத்தனை? வேறொருவராயிருப்பின் உன்னுவை இக்கணமே கண்டித்திருப்பேன்! என்னையாரென்று நினைத்தனை? நான் அந்தப் புண்யபுருஷருக்கே யுரியபாதிவ்ரத்யவ்ரதம் பூண்ட தர்மபத்நீ! பரபுருஷனை உன்னையடைந்து இன்பமனிக்கத்தக்க ஸ்திரீயல்லேன். சீ! என்முன் நில்லாமல் விரைந்துசெல்! (எழுந்து வேறொருபக்கஞ்செல்லல்)

**முஞ்ஜ:**—அடி!சண்டி!நீஇப்பொழுதுரைக்கும்கர்ணகடோரமான பிரதிமொழிக்கு உன்னை இந்நேரம் சித்திரவதை செய்திருப்பேன்!வரம்பின்றி மனம் போனவாறெல்லாம்என்னுடைய அந்தஸ்தையும்கௌரவத்தையும்சிறிதேனும்யோசியாது குரூரவசனங்கள் மொழிந்தனை! கேவலம் ஸ்திரீஜாதியான நீ மஹாராஜாவான வெனக்குச் செய்யும் இவ்வவமானத்தால் மிகுந்த கோபத்தை யடைந்திருக்கின்றேன்.நீ என்மனத்திற்கிசையுநிமித்தம் ஸர்வஸ்வத்தையு முனக்கர்ப்பணஞ் செய்வதாக வாய்மொழிதந்தும், என்னை யொருபொருட்டாய் எண்ணுமல் திக்காரஞ் செய்கின்ருய்! ஆயினும் உன்மீதெனக்கிருக்கும் காதலானது எனக்குண்டாகும் கோபத்தை யடக்குகின்றது. ஏ முக்தே! ஸகலமனுஷ்யரும் காமத்திற் கீடுபடுகின்றனர்; காமத்திலேயே பரமசுகத்தை யனுபவிக்கின்றனர். மனிதர்கள் எவ்விடத்திற் காமத்தாற் கட்டுப்படுகின்றனரோ, அவ்விடத்

தில் தோஷங்களை விசாரிக்கின்றனர் அல்லர் ; அபராதங்களை யும் பார்க்கின்றனர் அல்லர்! இதுதான் உன் விஷயத்தில் என க்குண்டாயிருக்கும் க்ஷமைக்குக்காரணம். இராஜாதிராஜன், மஹாப்பிரதாபன் யான் உன்னைக் காமுற்றனன் ! நீயோ என்னை அடைய விரும்பாது அலமந்து போஜனையே நினை ந்துவியாமோகங் கொண்டிருக்கின்றாய்! அவ்வறப்பயல் கொலை யுண்டிறந்ததற்குக் காரணமுனக்குத் தெரியுமா ? நீ பாற்செம் பில் மருந்து கலந்து வைத்ததுமாத்திரமன்று: எனக்கு விரோத மாய் எதிர்த்தெழுந்ததே அவன் இறந்ததற்கு முதற்காரண மென்றறிவாய்! உனது ரதியை யிச்சிக்கின்ற வென்னுடைய பல பௌருஷ விக்கிரமங்களையும் பெருமையுமறியாத நினது கெட்டகாலமாதலால் என்னைத் தூஷித்தனை! என்முன் உன் னால் என்ன செய்யக்கூடுமென்று நினைக்கின்றாய்? உன்னைப் பலாத்காரமாய் புணருவது எனக்கொருவிஷயமா ? மதனலீலை யையறிந்தவனாதலால் உன்னைப் பிரார்த்திக்கலாயினேன். காமுற்றவிடங்களிற் சீற்றங்கொள்ளாதது காமிகளின் குணமா தலின், நீ செய்த விவ்வபராதங்களை யெல்லாம் பிரணயலீலை யென்றுமானித்து உன்னை க்ஷமிக்கின்றேன் ! சிருங்கார விலாஸ யோக்கியையான ஹே மனோரமே! நீ இப்பொழுதாயி னும் தீர்க்காலோசனை செய்து என் மடியிலேறிச் சகல சுகங்க ளையுமனுபவிப்பாய்! அஹோராத்திரமென்னோடு கூடிக் கிரீடிப் பாய்! ஸமஸ்த ராஜ்ஜியத்தையும் தனத்தையும் உன் வசப்படுத் திவிடுகின்றேன்! அவற்றை விரும்பியமட்டுமனுபவி. எனக்குச் சிருங்கார ரஸத்தைமாத்திரங் குறைவரக் கொடு. உன்னு டைய மன்மதலீலையாலெனக்குத்திருப்தியளி. இதுதானென் னுடைய பிரார்த்தனை: மற்ற விஷயங்களிலுன்னுடைய ஆஞ்ஞையையே செல்லட்டும்!

(பரபரப்புடன் ஸாவித்திரீ தேவியாரும், புத்திசாகரரும், தரங் கவதியை முன்னிட்டுக்கொண்டு பிரவேசித்தல்).

**புத்திசாகரர்:**—யான் அப்பொழுதே சொல்லவில்லையா! அப்பாதகன் எதற்கு மஞ்சானே!

**ஸாவித்திரி:**—ஐயோ! யானென்ன மோசம்போனேன்! அவன் இதுவரை இப்படிப்பட்டவனென்று தெரியாமற்போயிற்றே!

**புத்தி:**—ஏதோ சம்பாஷணை கேட்கின்றது! என்னவோ சற்று மறைந்து நின்று கேட்போம். அதனாலேயே தங்களுடைய சம்சயம் நிவர்த்தியாகலாம்.

**தரங்கவதி:**—ஆம்! அம்மணீ! விலாஸவதிதேவியாரின் குரல் கேட்கின்றது. நாமிப்படி நின்று கேட்போம் வாருங்கள்! (அப்படியே மூவரும் மறைந்து நின்று கேட்டல்).

**விலா:**—(பெருமூச்செறிந்து கத்கதஸ்வரத்துடன்) அடே துரோகீ! என்பதியைக்கொன்று என்னையும் பெண்டாளவாடா நினைத்தனை? அந்தோ! யான் என்னமோசம் போனேன்! என்ன மோசம்போனேன்!! அடே க்ஷத்திரியப்பதரே! கௌரவர்கள் அழிந்துபோவதற்குச் சகுனிவாய்த்ததுபோல், நீ எனக்கு மாமனாக எங்கிருந்து வாய்த்தாயடா! ஆஹா! உனது வஞ்சனைவார்த்தைகளைக்கேட்டு யான் என்னவெல்லாம் செய்யலாயினேன்!

'கானலை நீரென் றெண்ணிக்
கடுவெளி திரியு மான்போல்

வானுறு மிலவு காத்த
மதியிலாக் கிள்ளை யேபோல்,

தேனினைக் கண்டு தும்பி
தியங்கிய தகைமை யேபோல்

நானுனை மாம னென்று
நம்பியே நலிய லானேன்.' (௧அ)

ஐயோ! என்னகபடம்! என்னகபடம்!! தர்மமே உருவெடுத்து வந்தாற்போல் ஒருகுற்றமுமறியாத என் கணவனூர்மீது இல்லாதபழிகளையெல்லாம் சொல்லி, இப்பேதையைக் கொண்டே அவரைக்கொன்றதுமன்றி, என் கற்புநிலையையும் கெடுக்கவாடா வந்தனே? ஸ்திரீகளுக்கு ஸகல குணங்களிலும் பாதிவ்ரத்யமன்றோ முக்கியமான ஆபரணமாயிருக்கின்றது! ஐயோ! பாதகா! என்னை இப்படிக்கெடுப்பதற்கோ வெகு அன்புள்ளவன்போற் பாதுகாத்து வந்தனை!

முஞ்ஜ:—அடி மூடே! நிறுத்துவாய் உன் அதிகப் பிரசங்கத்தை! ஜாக்கிரதை! நீ செய்யுமிப்பிடிவாதத்திற்கு உன்னைக் கண்டார்கண்டு சிரிக்கும்படி அவமானிப்பேன். பெண்பிள்ளையென்பதுகூட யோசியாமல் உன்னைச் சித்திரவதை செய்வேன்! இப்பொழுதும் உன்னை க்ஷமிக்கின்றேன்; என் மனோரதத்தைப் பூர்த்திசெய்.

ஸாவி:—(மறைவாய்) ஆஹா! கேட்டீர்களோ? என்ன வஞ்சனை! என்ன வஞ்சனை!! பாபம்! இவள்மீது ஒரு குற்றமுமில்லை! எதற்குமினி நாம் சும்மாவிருப்பது நலமன்று!

புத்தி:—(மறைவாய்) அம்மணி! சற்றுப்பொறுங்கள்! இன்னும் என்ன சொல்லுகிறார்களோ கேட்போம்! (அப்படியே கவனித்துக் கொண்டிருத்தல்.)

விலா:—(பயத்துடன் ஆன்மகதமாய்) அந்தோ! யான் என்செய்வேன்? எப்படி இக்கொடியன் கையினின்றும் தப்பிச்செல்வேன்? ஐயோ! என்ன புத்திஹீனையானேன்! அவ்வளவு தூரம் வேண்டியும் என் மாமியார் அவர்களின் பேச்சைக் கேட்காமற் போனேனே! இக்கொலை பாதகனும் பழிபாவத்திற்கஞ்சுவனோ? பலாத்காரமாய் எனது கற்புநிலையை யழிக்க முயன்றாலும் முயலுவன்! என்செய்வது? (சற்றுநேரம் மௌனமாய்க் கபோலத்திற் கரத்தைவைத்து) சரி! இப்படிச் செய்வதுதான் யுக்தம்!

வேறுகதி என்னவிருக்கின்றது? (பிரகாசமாய்). அரசே! தாம் இப்படிச்சொல்வதுசரியன்று! பதிசென்றவிடத்திற்கு ஸ்திரீகள்செல்வார்கள் என்று, ஸாதுக்கள் உரைப்பார்களே! நிலவு சந்திரனைக் கணமேனும் பிரிந்திருக்குமா? மின்னற்கொடி மேகத்தைவிட்டு ஒரு நொடிப்பொழுதேனு மகன்றிருக்குமா? இப்படிஅசேதனமான பதார்த்தங்களிற்கூட இவ்வித தர்மமிருக்கும்பொழுது உத்தமமான மனுஷ்ய ஜன்மத்தை யடைந்த யான் என் அன்பரைப் பறி கொடுத்தும் மற்றொருவனை மணப்பேனோ ?

(அ) இராகம் - தந்நியாசி. தாளம்-ஆதி.

பல்லவி.

மணந்தபின் - மணக்கலாகுமோ ?
அணங்குநாம் - யாது செய்வேன் !

அநுபல்லவி.

கணவன்பின் - செல்லாவிட்டால்
வணங்க வொரு - தெய்வமுண்டோ ?—மணந்த.

சரணங்கள்.

கல்லென்றாலுங்-கணவனென்பார் !
புல்லென்றாலும்-புருஷனென்பார் !
சொல்லொணாத-வார்த்தையெல்லாம்
சொல்லியென்னை-வருத்தவேண்டாம் !— மணந்த

ஒருவனுக்கு—மாலையிட்டு
மருவலாமோ-மற்றவரை ?
சிறுமையான-மங்கையரும்
சிரிப்பரன்றோ-இவளையென்றும் !— மணந்த.

கற்புநிலை-கெட்டழிந்தால்
தற்பரனுந்-துணைசெய்வானோ?
புற்புதமாம்-வாழ்க்கையிலே
அற்பருமித்-தொழில்புரியார்!— மணந்த.

ஹா! ஹா! அந்தத் திவ்யசுந்தர மன்மதனைக் கொன்றுவிட்டும் யான் மற்றவரை மணந்துகொள்ளவேண்டுமோ? வேண்டாம்! ஸகல தர்மங்களையுமறிந்த தாமே இப்படி யுரைப்பது சரியன்று!

* "காமங் குறித்துப் பாவத்திற்
கலந்த பேதை யாருள்ளும்,

வாமங் கனிந்த பிறன்மனையை
மதிக்கும் பேதை யோர்பயத்தாற்

றமங் கிழக்கு மறம்பொருள்போற்
சாற்று மின்ப மிருதகனாற்

றேமங் குதிப்பப் பிறன்மனைவி
தோள்கா முறுதல் சூழேலே!" (கக)

முஞ்ஜ:—அடிபேதாய்! பரதாரவிச்சை கொள்ளலாகாதென்பது சரியே! சகல சாஸ்திரங்களையு மறிந்திருக்கின்ற யான், ஒருபொழுதும் தர்மத்திற்கு விரோதமாய் நடப்பேனென்று நினைக்கவேண்டாம்! யானுன்னை மணந்துகொள்வதாகச் சொன்னேனேயன்றி இராக்ஷஸர்களைப்போற் பலாத்காரமாகவாயினும், அல்லது பரபுருஷனைப்போலாயினும் உன்னைக் கூடுவதாகச் சொல்லவில்லையே!

விலா:—அரசே! இவ்வித காரியத்திற்கு உலகத்தார் சம்மதியார்கள்! ஒருவனை மணந்த பிறகு மற்றொருவனை மணக்கக் கூடாதென்று வேதங்களும் சாஸ்திரங்களும் முறையிடுகின்றனவே! இதனால் எனக்கு மாத்திரமன்று, உமக்கும் மகத்தான பாதகம் நேர்ந்துவிடும்! வேண்டாம்! இப்பாவியின்மீது வைத்திருக்கும் காமத்தை நீக்கும்!

* பிள்ளையார் புராணம்.

* 'அந்தர முற்றா னகலிகைபொற்பா
லழிவுற்றான்
இந்திர னொப்பா ரெத்தனை யோர்தா
மிழிவுற்றார்!
செந்திரு வொப்பா ரெத்தனை யோர்நின்
றிருவுண்பார்
மந்திர மற்றா யுற்ற துரைத்தாய்
மதியற்றாய்!' (உ௦)

**முஞ்ஜ:**—அடி பயசிலே! ஒரு புருஷனை மணந்துவிட்டால் அவனெப்பொழுதுமா பதியாய்விடுவன்? அவனை இறந்துபோன பிறகுகூடப் பதியென்று கொள்வது அஸங்கதமாயிருக்கின்றதே! சாஸ்திரங்களிற்கூட ஸ்திரீகளுக்கு ஐந்து ஸந்தர்ப்பங்களிற் புநர்விவாகம் விதிக்கப்பட்டிருக்கின்றதே!

"நஷ்டே ம்ருதே ப்ரவ்ராஜிதே
க்லீபே ச பதிதே பதௌ
பஞ்சஸ்வாபத்ஸு நாரீணாம்
பதி ரந்யோ விதீயதே" (உக)

என்று நாரதர் முதலிய மகர்ஷிகள் சொல்லியிருக்கின்றனரன்றோ! அப்படியிருக்க நீ சஞ்சலப்படுவது அழகன்று. யானுன்னைக் க்ஷணபங்குரமான காமோபசாந்திக்காக விச்சிக்கின்றேனென்று நினைக்கவேண்டாம். ஹே விலாஸவதி! யான் உன்னுடைய திவ்யசுந்தரமான ஆக்ருதியைக்கண்டு, நீ குழந்தையாய் வளர்ந்துவந்ததுமுதல், உன்னை மணந்துசுகித்திருக்க விருப்பங்கொண்டேன். உனது கடாக்ஷவீக்ஷண்ணியத்தில் யான் ஈடுபட்டேன். உன் லாவண்யவலையில் யான் கட்டுண்டேன். ஹே கல்யாணி! சிந்தையால் வேதனைப்பட்டுக் கண்ணீர் விடுகிற

* கம்பராமாயணம்.

இந்நிலைமையை விட்டுவிடு! உன்னுடைய நவயௌவனம் ஸபல மாகும்படி என்னைப் பர்த்தாவாகக்கொள்!

விலா:—ஹா பாபீ! உத்தமமான க்ஷத்திரியகுல த்திலுதித்து, உண்மையான சாஸ்திரங்களைக் கற்றாய்ந்தறிந்த நீயே இப்படிமொழிவது சரியோ? போஜகுமாரருக்கே யுரியவ்ளான வென்னை நீ இச்சிப்பது தகுதியன்று! மஹா தார்மிகரும் புண்ணிய சீலருமான சூரஸேன மஹாராஜரது குலத்திலுதித்தேன். துஷ்டநிக்கிரஹம் சிஷ்டபரிபாலனம் என்னும் இருவகை தர்மத்தையும் நிலைநிறுத்தி ஸத்தியத்தையே திடவிரதமாகக்கொண்டு விளங்குகிற ஸ்ரீ சிந்துலமஹாராஜருடைய குலத்தை யடைந்தேன். சுத்தவீரரும் ஸத்தியஸந்தருமான போஜகுமாரருக்கு மாலையிட்டேன். அப்புருஷோத்தமரையடைந்து, உத்தமோத்தமமான பதிவ்ரதா தர்மமார்க்கத்தில் எந்நாளும் இருக்க விரும்பிய யான், ஸர்வலோக நிந்தியமான இவ்வநுசித காரியத்தைச் செய்யத்துணிவேனோ? குலத்தையும் கீர்த்தியையும் குணத்தையும் என்னையும் அழிக்கத் தக்கதான இப்பாபகிருத்தியத்தையோ யான்செய்வேன்? வேண்டாம்! இவ்வேழையின் மீது உனக்குண்டாயிருக்கும் காமத்தை நிவர்த்திசெய்.

* 'காமமே குலத்தினையும் நலத்தினையுங்
கெடுக்கவந்த களங்கமன்றிக்
காமமே தரித்திரங்க ளனைத்தினையும்
புகட்டிவைக்குங் கடாரமற்றுங்
காமமே பரகதிக்குச் செல்லாமல்
வழியடைக்குங் கபாடமின்னுங்
காமமே யனைவரையும் பகையாக்கிக்
கழுத்தரியுங் கத்தி தானே!' (உஉ)

* விவேக சிந்தாமணி.

அரசே! உலகத்தில் மனைவிமார்கள் பாணிக்கிரஹண காலத்தில் அக்கினிசாக்ஷியாய்ப் பிறர்முகத்தைப்பார்ப்பதில்லையென்றுபிரமாணஞ் செய்துகொடுப்பதைநீர் அறியீரோ? இப்படிப்பட்ட பிரமாணத்தை உல்லங்கனஞ்செய்பவர்கள் சந்திரசூர்யர்களுள்ளளவும் அவியாத அக்கினியில் வீழ்ந்து பரிதவிப்பர்களென்று வேதசாஸ்திரங்கள் முறையிடுகின்றனவே! விவாகமென்பது ஐஹிகமான ஓர் ஒப்பந்தத்தைப்போல் நினைத்தபொழுது நீக்கக்கூடியதன்றே! அஃதெக் காலத்திலும் அவிழ்க்கக்கூடாத மனைவியையும் புருஷனையும் ஒன்று செய்விக்கும் முடியன்றோ? அப்படியிருக்க, உத்தமமான மநுஷ்ய ஜன்மத்தையடைந்து, உயர்ந்த குலத்திற்பிறந்து, உத்தமனுக்கு வாழ்க்கைப்பட்டு, உறுதியான வழியைக்கண்ட உத்தமிகளும் ஒருவனை முன் மணந்துவிட்டு மற்றொருவனையும் மணப்பரோ ?

"ஸக்ரு தம்சோ நிபததி
ஸக்ருத் கந்யா ப்ரதீயதே !
ஸக்ருதாஹ ததாநீதி
த்ரீண்யேதாநி ஸக்ருத் ஸக்ருத்" (உரு)

என்றல்லவோ தர்மசாஸ்திரங்கள் கூறுகின்றன !

* "மனமொத்து நினைந்தணி வாக்கதனாற்
புனிதற்கெதிர் சொற்றது பொய்த்துளதே
லினிமெய்ப்பரி சப்படு மேழையரும்
தனிதப்புவர் நன்னிறை தாரணிமேல்!" (உச)

**முஞ்ஜ:**—அடிபேதாய்! ஏனிப்படி வீண்கவலைப்படுகின்றாய்! என்னுடைய காதலின் பெருமையை நீயறியாய்! உன்னைக் காட்டிலும் மேலானதெனக் கொன்றுமில்லை !

* பாரதம்.

செந்நீர்ப்பவளச் செவ்விதழ்வாய்
அந்நீர்ப்பதும முகத்தாள் நீ
முந்நீர்ப்புணரி மகியுமென்றன்
வெந்நீர்க்கடமா விருகொம்பாம்! (உரு)

ஆகலின், இவ்வழுகைக் கோலம் நினக்குவேண்டாம்! என்னுடனிப்பொழுதே மணக்கோலத்தையடை! என் கண்மணி! ஏனின்னும் யோசிக்கின்றாய்?

**விலா:**—வேண்டாம்! என்மீதுமக்குண்டாயிருக்கும் ஆசையை யொழித்து, ஸாதுக்களாற் காண்பிக்கப்பட்ட மார்க்கத்தைக் கைப்பற்றும்! உம்மையே திருஷ்டாந்தமாக வெடுத்துக்கொள்ளும்! உமக்கு யனேக பத்தினிகளிருக்கவில்லையா? அவர்களெல்லோரையும் பரபுருஷர் தர்சிக்கவும் துர்லபமாய்ப் பாதுகாத்து வருகின்றீரன்றோ? அவ்வண்ணமே மற்றவர்களுடைய ஸ்திரீகளையும் பார்க்கவேண்டாமா?

**முஞ்ஜ:**—(திருட்டுச்சிரிப்புடன் ஸரஸமாடிக்கொண்டு) அடி! என் காமக்கிழத்தி! இன்னுமெவனடி யிருக்கின்றான் என்னிலுஞ் சிறந்தவன் உன்மனத்தைக் கவர்ந்துகொள்ள? நானே உன்மீது ஆசைகொண்டேனடி!

‘நானே கரும்படி நீயே யதன்ரஸம்
நாயகியே!
தேனேயுன் வாயிதழ் தந்தென்னை மெல்லவுஞ்
சேர்ந்தணைவாய்!
தானே புணரமனமிள காதெனைத்
தள்ளுவையோ
மானே விடேனுனை நீபோவ தெங்குசொல்
மாமயிலே!’ (உசா)

**விலா:**—(பயஸம்ப்ரமத்துடன்).

* "முன்னாக மணந்த முனைக்குரிசி
றன்னுயு விறந்திடி னுந்தகைநா
டொன்னுள்கொளி னும்மவ னுற்றிடினு
மென்னுயக னேயவ னென்றறிவீர்!" (௨௭)

**முஞ்ஜ:**—(பரிஹாஸத்துடன்) அவ்வந்நாடி போஜனு ?

**விலா:**—அவர் எப்படியிருக்கட்டும்சரியே ! அவரை யன்றி வேறொருவரையுங் கண்ணுற்றுப்பாரேன்!

மனதுடன் மணந்த போதே
மன்னவன் றனயன் போஜன்
எனதுயர் நாத னுன்!
என்னதான் வந்தா லென்ன ?
இனியவ ரடியைச் சேர்வான்
இறப்பதா லென்ன போகும் ?
கனவிலு மவரை யன்றிக்
கருதிடே னெவனை யுந்தான்! (௨௮)

**முஞ்ஜ:**—அடி வஞ்சகீ ! இத்தர்மோபதேசமெல்லாம் யாரிடத்திற் செய்யப் பார்க்கின்றனை! யான் இவற்றிலெல்லாம் திருப்தியாய் விடுவேனென்று நினைக்கவேண்டாம். நீ செய்யுங்காரியம், தானே வரும் ஸம்பத்தைக் காலாலுதைத்துத் தள்ளி யோட்டுதல் போலிருக்கின்றது! இப்பொழுதேகுறியாய் என் அபிப்பிராயத்தைப் பூர்த்திசெய். வீணாய் மடியவேண்டாம்!

**விலா:**—(கோபத்துடன் முஞ்சனைத் திக்கரித்துக்கொண்டு) அடே பாபீ! ஏனடா வீணாய் அழிந்துவிழுகின்றாய் ! வழிமறித்தடிக்கும் கொடிய கள்ளர்கூட இத்தகைய செயலைப்புரியார்களே! வேண்டாம்! உன்மனத்தை என்னிடத்தினின்றும் விலக்கிக்கொள்!

---

* பாரதம்.

பழிசெயுங் கொடிய கள்வா !
பாதகா! உனக்கு நல்ல
வழிபெற வோநீ யிந்த
வார்த்தைகள் சொன்ன தென்னை ?
இழிதகை யாளா ! தீய
எண்ணமொன் றேனுங் கொள்ளாய்
அழிவினை விளைக்கு மாசை
அறவொழித் தகன்றி டாயே ! (உகூ)

**முஞ்ஜ:**—நான் நல்லதனமாய்க் கேட்டால் நீ உடன்படமாட்டாய்! கள்ளரைப்போலவே யுன்னைக் கட்டாயப்படுத்துவதே சரி! (காமாந்தனாய் விலாஸவதியைத் தீண்டமொரு மடக்கிக்கொண்டு பாடுதல்.)

(௬) இராகம் - பியாக். தாளம் - ஏகதாளம்.

கண்ணிகள்.

மாயனது மாயைபோல்—கிளியே!
மானிடரைமயக்கும்,
மாயமின்னொளியே—கிளியே !
மார நிகேதனமே ! (க)

சந்திரபிம்பமோடி—கிளியே !
ஸரஸ ஸரோருஹமோ ?
சின்மயவின்பமோடி—கிளியே
சீர்பெறுமுன்வதனம் !— (உ)

முல்லைமுகுளங்களோ—கிளியே
முத்துவரிசைகளோ !
முக்தர்கள் ஆநந்தமோ—கிளியே
முகத்திலுன் பல்லணிகள் !— (௩)

**விலா :**—(கண்ணீர் சொரிந்து பயஸம்ப்ரமத்துடன்) ஹா கஷ்டம் ! இனியான் என்செய்வேன்! யாரென்னை இத்தருணம் காப்பா

ற்றுவர்? ஹே ஈசா! நீதான் என்னை இக்கொடியவன் கையி னின்றும் காப்பாற்றவேண்டும்!

ஹே கௌரீச்வர! ஹே புராந்தக! விபோ!
ஹே சர்வ! ஹே சங்கர!
ஹே கோவிந்த! முகுந்த! மாதவ! ஹரே!
ஹே க்ருஷ்ண! ஹே கேசவ!
ஹே காயத்ர்யதிநாத! நாத ஜகதோ!
ஹே தேவதேவேச்வர!
ஹே குப்தாகில லோகஸஞ்சய நமோ
ஹே தீநஸம்ரக்ஷக!

அந்தோ! அபலை யான் மாள்கின்றேன்! மாள்கின்றேன்!! (மூர்ச்சித்து வீழ்தல்).

ஸாவி:—(தரங்கவதியுடன் புத்திசாகரரை முன்னிட்டுக்கொண்டு பரபரப்புடன் முஞ்சனருகிற் சென்று) அடே பாபீ! பாபீ! என்னகாரியஞ் செய்கின்றாயடா! இப்பேதையை வஞ்சித்துக்கெடுக்க முயலுவதோ ஆண்மைத்தனம்? ஐயோ! மனத்திற்கொள்ளாது வெளிநகைப்பாய்ப்பேசினாலும், நனவிலன்றிக் கனவில் நினைத்தாலும் பரதாரவிச்சையானது யாவர்க்கும் பகை, பழி, பாவம் அச்சங்களையுண்டுபண்ணிப் பெருமையைக் கெடுக்குமே! அடே துரோகீ! நற்குலத்திற்பிறந்து இப்படிப்பட்டபுத்தி ஏனடா! அடே விஷப்புழுவே! உனது தீச்செயல்களால் யாது பயனையடைந்தனை? நெஞ்சத்தில் ஓயாதபயமும் நடுக்கமும் துன்பமும் உற்றதன்றி, வேறு இன்பத்தையும் நீ காணப்போகிறதுண்டோ! சீ! சுடவேண்டுமுனது நாய்ப் பிழைப்பை!

முஞ்ஜ:—(நோக்கி, அச்சங்கொண்டு, தைரிய முள்ளவன்போல் நடித்துக்கொண்டு) என்ன! அதிகமாய்க்குழறுகிறாய்? நினது அந்தஸ்தைக்கவனித்துப் பேசு! உன் புத்திரன் போனவழிக்கு நீயும் செல்வாய்! (ஸாவித்திரீதேவியாரைத் தள்ளிக்கொண்டு வெளியிற்செல்லயத்தனித்தல்).

**புத்தி** :—அடே துராத்மன்! என்னடா திருடனைப்போற் பதுங்கியோடுகின்றாய்! நீ செய்த வஞ்சனைகளெல்லாமெங்களுக்குத்தெரியாவென்று நினைக்கவேண்டாம்! அடே மூட! மற்ற தோஷங்களுக்கெல்லாம் ஒவ்வொரு பிராயச்சித்தமுண்டு! ஆதரவற்றஅபலைகளைப் பலாத்காரஞ்செய்து,அவர்களது பாதிவ்ரத்யத்திற்குப் பங்கத்தைச்செய்ய முயலுவோர்க்கு யாதொரு பிராயச்சித்தமும் கிடையா! அடே நீசா! நீ செய்யத்துணிந்த காரியமானது,ஒருவனை மதங்கொண்டயானைபின்னே துரத்த, முன்னே ஒரு பதினாறடி வேங்கைப்புலி வந்து பாய, அவன் அந்த ஆபத்திற்குப்பயந்து பூரணமாய் பிரவஹிக்கும் எதிரிலிருக்கும் ஓராற்றில் குதிக்க, அதில் ஜலவேகத்தால் அடித்துக் கொண்டு போகும்பொழுது ஒரு பயங்கரமான முதலை யவனது காலைப்பிடித்து விழுங்க, அதற்குள் அவன் தாகசாந்தி செய்வதற்காக அங்குள்ள நீரைக்கொஞ்சம் அள்ளிக்குடித்துச் சந்தோஷிப்பதுபோலல்லவோ இருக்கின்றது! அடே மந்தபுத்தே! இவ்வற்பசுகத்திற்காக எவ்வளவு பாவங்களையும் பழிகளையும் நின் தலையின்மீது வைத்துக்கொண்டனை? இவ்வற்ப ராஜ்ஜியத்திற்காசைகொண்டு நிரபராதியான போஜகுமாரனைக் கொல்லப்பார்த்ததுமன்றி—

**முஞ்ஜ**:—(நடுக்கத்துடன்) என்ன! என்ன! என்ன சொல்கின்றீர்? (மயக்கங்கொள்ளல்).

**புத்தி**:—(யோசித்துத் தான் சொன்னதைத் திருத்திக்கொண்டு) ஆம்! இராஜ குமாரனைக் கொன்றதுமன்றி, அவனது தர்மபத்தினியாகிய இப்பதிவ்ரதா சிரோமணியையும் காமாந்தனாய்க் கெடுக்கவாடா வந்தனை?

**முஞ்ஜ**:—(ஆன்மகதமாய்) அப்பா! இப்பொழுது தான் என் பிராணன் வந்தது! (மறுபடியுந் தைரியங்கொள்ளல்) என்ன?

**புத்தி**:—அடே! பாபீ! நீ செய்த விவ்வபராதங்கள் ஒருபோதும் வீணாய்ப் போகுமென்று நினைக்கவேண்டாம்! நீ

செய்த இப்பெருங் குற்றத்தினுல் அநேக கோடி ஜனங்கள் நிறைந்த இப்புராதனமான நகரே பாழடையப்போகின்றது! அஃதுடன் நீயும் உன்னினத்தாரோடு நாசமடையப் போகின்ருய். அக்காலம் வருவதற்கு இன்னும் வெகுநாளிருக்குமென்று நினைக்கவேண்டாம். இப்படிப்பட்ட அத்யுத்கடமான பாபங்களுக்குச் சீக்கிரதண்டமாதலால், அது வெகு ஸமீபத்திலேயே யிருக்கின்றதென் றறிவாய்.

**முஞ்ஜ**:—(விரைந்து பரிக்கிரமித்துக்கொண்டே) அதையுந்தானறிகின்றேன்! (நிஷ்கிரமித்தல்).

**ஸாவி**:—(விலாஸவதியினருகிற்சென்று நோக்கி) அந்தோ! இஃதென்ன பரிதாபம்! ஸர்வாலங்கார யோக்கியையான என் கண்மணி, பூஷணங்களற்றுப் புழுதிபடிந்து தேகம் மலிந்து பெருங்காற்றினு லடிபட்டுக் கீழே வீழ்ந்து, வாடின புஷ்பங்களோடும் வதங்கின பல்லவங்களோடும் கிடக்கிற ஒரு விருக்ஷசாகைபோற் கட்டாந்தரையில் வீழ்ந்து கிடக்கின்றனளே! (உற்று நோக்கி) ஐயோ! அணைந்துபோன அக்கினிபோல் இவளது ஆவியும்விளங்கக் காணுமே! அந்தோ! என் கண்மணி உயிருடனிருப்பளா? (அருகிற்சென்று விலாஸவதியின்மார்பைத்தடவிக்கொண்டு) தெய்வாதீனம் இப்பொழுதுதான் ஒரு மூச்சு வருகிறதுபோலிருக்கின்றது! (தரங்கவதியை நோக்கி) தரங்கவதி சீக்கிரம் அவ்விசிறியை எடுத்துக்கொண்டுவா!

**விலா**:—(கண்விழித்துக்கொண்டே) ஹா! பிராணநாதா! நீதான் இப்பாவியின் குற்றங்களை யெல்லாம் பொறுத்தருளவேண்டும்! உம்மால் க்ஷமிக்கப்படுகிற வரையிலும் யான் நற்கதியை யடையேன்! (பாடுதல்).

௪0) இராகம்-காம்போதி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

நாதா! நாதா!—நான் செய்தபிழைகளைப்
பேதை யிவளென்று-பொறுப்பீர்!

அநுபல்லவி.

பூதலம்போன்மிகப் - பொறுமையுள்ளவென்றன்
காதலனே க்ஷமிப்பீர்!— நாதா.

சரணம்.

இப்பெரும் பாவத்தை - இயற்றியபின் யானும்
இப்புவியிலுயிர்-இனித்தரிப்பேனோ!
இப்பொழுதே மூட்டி - எரியனலின் வீழ்ந்து
எப்பிறப்பிலேனும் - இணைபிரியேனும்மை ?— நாதா.

ஐயோ! நானிப்படி என் மாமனால் மோசம்போனதை அவர் எப்படி அறியப்போகின்றனர்! வேறு லோகத்திலாயினும் அவருடன் யான் கூடுவேனோ! (யோசித்துப் பயத்துடன்) அந்தோ! கஷ்டம்! யான் ஏன்கண்விழித்தேன்! என்னையார் இத்தருணம் இக்கொடியன் கையினின்றுங் காப்பாற்றப்போகின்றனர்! ஐயோ! அழிகின்றேன்! அழிகின்றேன் (மறுபடியும்மூர்ச்சை கொள்ளல்).

ஸாவி :—(தரங்கவதி விசிறிகொண்டு விலாஸவதிக்கு வீச) ஆ! என் கண்மணீ! என்னைக்கண்ணுற்றுப் பாராயோ? ஆ! என்செல்வியே! எழுந்திரு! எழுந்திரு!!

விலா :—(கண்விழித்துக்கொண்டு நோக்கி) ஆ! இஃதென்ன விந்தை! என் அருமை மாமியாரா ?(விரைந்தெழுந்து) அம்மணீ! என்னை மன்னிக்கவேண்டும்! (காலில்வீழ்தல்).

ஸாவி :—(தழுவியெடுத்து) அடிபேதாய்! நீ என்ன குற்றஞ் செய்தனை நான் மன்னிப்பதற்கு!

விலா :—(கண்ணீர்சொரிய) அம்மணீ! யான் புரிந்த செயலை என் சொல்வேன்?

**வாழாத வண்ணம்யான் வாது செய்யும்**
**வஞ்சகரை நம்பியே யழிய லானேன்!**

பாழான மாமனது சொன்ம தித்துப்
பதிஹத்தி யான்செய்து பதிதை யானேன் !
ஏழையான் செய்தவிப் பாத கத்தை
எண்ணும லென்மீது கருணை செய்வீர்!
தாழாத தாரைநகர்த் தேவி யேயென்
தாபத்தை நீக்குவீர் பிழைபொறுத்தே! (௩க)

ஸாவி:—(விலாஸவதியின் கண்களைத் துடைத்துக்கொண்டு) ஹா! புத்திரீ, ஏனிவ்வாறெல்லாம் வீணுய்ச் சஞ்சலப்படுகின்ருய் !

கண்ணினுண் மணியே யுன்றன்
கருத்தினில் விசனம் வேண்டாம் !
எண்ணுமுன் னெண்ண மெல்லாம்
எளிதினி லறிந்து கொண்டேம்!
அண்ணலாற் றனயன் போஜன்
அநகனு யுயிர்த்தி ருக்க
எண்ணமேன் ? கவலை நீக்கி
யேகுவோ மெழுந்தி டாயே! (௩உ)

அடியே தாய் ! நாமிங்கிருப்பது தகுதியன்று! அண்ணலாரரண்மனைக்குச் செல்லுவோம்வா !

விலா :—(ஆச்சரியத்துடன்) என் பிராணநாதரும் உயிருடனிருக்கின்றனரா ? இதையான் நம்பேன் ! நம்பேன் ! !

ஸாவி :—ஆ ! என் கண்மணீ ! உன்னிடத்தில் யான் பொய்யுரைக்கவேண்டுமோ? என் செல்வன் போஜனுக்கு யாதொரு குறையுமில்லை : க்ஷேமமாயிருக்கின்றனன் !

விலா :—ஆஹா ! இஃதென்ன ஸ்வப்னமோ யான் காண்பது? ஐயோ! பாவியேன் யானே அன்றே, ஆசையுடன் வந்த

என்னன்பரைப் பாலில் மருந்து கலந்து வைத்துக்கொன்றேன்! அவர் இறந்து இதுடன் மூன்று நாட்களாயினவே! நானல்லவோ அவருக்கு அக்கினி ஸம்ஸ்காரமுஞ்செய்தேன்! ஐயோ எல்லாம் பிரமையாயிருக்கின்றனவே!

புத்தி:—ஏ ராஜபுத்திரீ! இவையெல்லாம் அப்பாதகன் உன்மாமனது வஞ்சனைச் செயல்களே! உன்கணவனார் நீ வைத்த பாலைக்குடித்து இறக்கவில்லை! அப்பாதகன் முஞ்ஜ ராஜன், 'போஜன் உன்னை விஷம்வைத்துக் கொல்லப்பார்த்தனன்' என்று குற்றஞ்சாட்டி, அவனைத்தனியாய்க் காளிகாபரமேச்வரிவனத்திற்குக் கொண்டுபோய்ச் சிரஸாஞ்ஞை செய்யப்பார்த்தனன்!

விலா:—ஆஹா! என்ன வஞ்சனை! என்னவஞ்சனை! என்னிடத்திற் சொல்வதொன்று! மற்றவரிடத்திற் சொல்வதொன்று! ஐயோ! என்னாதனென்னை க்ஷமிக்காவிடின் யான் எச்சன்மத்திலுமழிந்துபோவேனே! என்னைக்கொடியவளென்று என் கொழுநர் கொள்ளில், எனக்கு நரகத்தினின்றும் எந்நாளும் விமோசனமில்லையே! அந்தோ! இனியான் உயிர்தரித்திரேன்! அக்கினியில் வீழ்ந்து இறப்பதே எனக்குத்தகுந்த பிராயச்சித்தம்!

புத்தி:—அடிபேதாய்! உன்மனத்தின் தூய்மையை நாங்களறியோமா? நின்கணவன்தான் அறியானோ? ஏனிப்படி வீணாய் விசனப்படுகின்றாய்? இவையெல்லாம் நின்மாமனது வஞ்சனைச்செயல்களென்பது உன்னைத்தவிர மற்றயாவருக்குந் தெரிந்தேயிருக்கின்றது. உன்மீது யாதொரு பழியுமில்லை.

விலா:—ஆயினும், உலகத்தார் என்ன நினைப்பர்? அவர்தாம் என்ன நினைப்பர்?

ஸாவி:—அடிபேதாய்! ஒருவரும் ஒன்றும் வித்தியாசமாய் நினைக்கமாட்டார்கள்! உன்னுடைய நெறியை இப்பெரு

மூது நாங்களே பார்த்துக்கொண்டிருந்தோமே. நீ ஏன் அதைப்பற்றி விசனப்படவேண்டும்? அப்பாதகன் வஞ்சனைவார்த்தைகளை நம்பி, உன்கணவனது நன்மைக்காகவே நீ யாதொருகாரியத்தையுஞ் செய்திருப்பாய்.

**விலா** :—அவ்வுண்மை யாருக்குத் தெரியப்போகின்றது?

**தரங்க** :—அம்மணீ! அதுதான் கண்ணாடிபோல் விளங்குகின்றதே! நீங்கள் சொல்வானேன்?

**விலா** :—ஆயினும், என் பர்த்தா என்னை என்ன நினைப்பர்? உலகத்தில் கொலைபாதகிகள்கூட இப்படிக்கொத்த காரியத்தைச் செய்யார்களே!

**ஸாவி** :—அவன் ஒன்றும் நினையான்! நாம் அரண்மனைக்குச் செல்வோம்வா! நாமிங்கிருப்பது தகுதியன்று. இங்கிருப்பின், அப்பாதகன் முஞ்ஜன் வேறு ஏதாயினுங் கெடுதி செய்யப்பார்ப்பன்!

**விலா** :—ஐயோ! அப்பாதகன் செயல்களை நினைத்துக் கொண்டால் இன்னும் தேகம் நடுநடுங்குகின்றதே! கடவுளன்றோ உங்களைத் தெய்வாதீனமிங்குக் கொணர்ந்துவிட்டனர்!

**ஸாவி** :—எதற்கும் நாமிங்குத் தாமசிப்பது தகுதியன்று: போவோம் வா!

(யாவரும் நிஷ்கிரமித்தல்.)

---

## மூன்றாங் களம்.

### இடம்.—ஜயபாலன் வசிக்கும் துறைக்கருகில் ஒரு வெளி மண்டபம்.

(கரவதனையுந், தண்டபாணியும் இரண்டுபெட்டிகளில் இரத்தினங்களையு மாபரணங்களையும் நிரப்பி எடுத்துவர, லீலாவதியும், ஜயபாலனும் பிரவேசித்தல்.)

**லீலாவதி:**—எந்தாய்! இவ்வளவு ரத்தினங்களு மாபரணங்களும் திடீரென்று தமக்கு எவ்விடத்திற் கிடைத்தன ?

**ஜயபாலன்:**—குழந்தாய்! அதைப்பற்றி என்ன? எல்லா முனக்காகத்தான் கொண்டுவந்தேன்.

**லீலா:**—இப்படிப்பட்ட விலையுயர்ந்த பூஷணங்களைத் தரித்திருந்த மகாபுருஷன் யாரோ? இன்று தாங்கள் கொண்டு வந்திருக்கு மிரத்தினங்களே, இப்பூமி எல்லாம் விற்பினும், கிடைப்பதற்கரியவெனத் தோன்றுகின்றனவே !

**ஜய:**—என்னருமைச் செல்வியே! நீ சொல்வது வாஸ்தவமே! இப்பொழுதெனக்கு இருக்குமாஸ்தி, இப்பூமியிலாண்டு வருமோ ரரசனிடத்தினுமில்லை. இவையெல்லாம் ஓர் இராஜகுமாரனுடைய அரண்மனையினின்றுகொண்டு வரப்பட்டன!

**லீலா:**—(ஆன்மகதமாய்) இப்பாவிகள் எந்த இராஜகுமாரனைக்கொன்று இவ்வணிகளையும் பணிகளையுங் கொள்ளையடித்து வந்தனரோ? ஐயோ! இவர்களுடைய தொழிலெனக்குச் சிறிதேனும் பிடிக்கவில்லையே! இப்பாவிகள் வயிற்றில் யான் ஏன் பிறந்தேன்? (பிரகாசமாய்) எந்தாய்! அவ்விராஜ குமாரர் உயிருடனிருக்கின்றனரோ ?

**ஜய:**—உயிருடனிருப்பின், நாங்கள் அவரது நகரத்திற் கருகிலாவது சென்றிருப்போமா? ஆஹா ! அவருடைய பராக்கிரமத்தையு மௌதாரியத்தையும் வெகு அற்புதமாய்ச் சொல்வார்களே! அவ்விராஜ குமாரரைத் துரோகஞ்செய்து, அவரது சிற்றப்பன் முஞ்ஜனென்பவன் அவரைக்கொன்றுவிட்டனனும். அதனாலன்றோ நாங்கள் அவ்விடஞ்சென்று இவைகளையெல்லாங் கொள்ளையடித்து வந்தோம்.

**லீலா:**—ஆ! ஆ! இப்படிப்பட்ட கொடுஞ்செயலைப் புரிபவர்கள் நாடுநகரங்களிற்கூட இருக்கின்றனரோ? அவர்களது

தொழிலைக் கேட்கில் நம்மவரே மேலானவரெனத் தோன்று கின்றனரே !

**ஜய**:—குழந்தாய்! இதுமாத்திரமன்று; இன்னுமெவ்வளவோ தனங்களும் நாணயங்களுங் கொண்டுவந்தேன். அவையெல்லாம் நமது மல்லர்களுக்கு வேண்டியவரைக்குங் கொடுத்தேன்.

**லீலா** :—அதனாற்றானவர்கள் குதித்துக்கொண்டிருந்தனர் போலும்?

**ஜய**:—இவையெல்லா மிருக்கட்டும்! இன்னுமொரு விசேஷந்தெரியுமா? நாங்கள் அன்று கொள்ளையடித்து வரப்போகும்பொழுது, வழியில் ஒரு மகாவீரன் கிடைத்தனன். அவனது பராக்கிரமத்தை யான் என்ன சொல்வேன்! நம்மவர் எல்லாரும் சேரினும், போரில் அவன் ஒருவன்முன் நிற்கவல்லரல்லர். அவனது உதவியினாற்றான் நமக்கு இவ்வளவு இரத்தினங்களு மாபரணங்களுங் கிடைத்தன.

**லீலா**:—(குதூகலங்கொண்டு) அவரும் நமது ஜாதியைச் சேர்ந்தவர்தாமோ ?

**ஜய**:—இல்லை! அவன் 'பரதேசி' என்று சொல்கின்றான். ஆயினும் அவனது ஆகாரத்தையுங் காம்பீரியத்தையும் நோக்கில், எவனோ இராஜகுலத்திற் பிறந்தவன் போற்றோன்றுகின்றான்.

சுந்தரி! யாதுரைப் பேனச்
சுந்தரன் வடிவை யுனக்கு!
இந்திரன் பிரம னுபேந்த்ரன்
ஈசனு மவன்நிக ரல்லர் !
சந்திர னுமவன் முகத்தைச்
சந்ததங் கண்டுகை ளிப்பான் !

அந்தரத் தில்லெவ ரும்மவ்
வழகனுக் கிணையா வாரோ ! (௬௬)

லீலா :—(மிகவு மாவலுடன்) அவருடைய திருநாமதேய மென்னவாம் ?

ஜய:—அவன் பெயர் சைந்துலனும்!

லீலா:—(ஆன்மகதமாய்) ஆஹா! அம்மகா புருஷனுடைய குணாதிசயங்களைக் கேட்கும்பொழுதே எனக்கொரு விதமான குதூஹலமுண்டாகின்றதே ! இவரை நேரே பார்த்தாலெப்படியிருப்பரோ? (பிரகாசமாய்) என் அருமைத் தந்தையே! அவர் இப்பொழுதெங்கே யிருக்கின்றார்? இதற்குமுன் அவர் எங்கே யிருந்தனராம் ?

ஜய:—குழந்தாய்! நீ உன் மனத்தில் நினைப்பதை யானறிகின்றேன். ஆகா! அம்மகாவீரனுடைய அழகுக்கு நீயே தக்கவள்! அவனை நம்முடைய மல்லர்களுக்கெல்லாம் பிரதானியாய்ச் செய்திருக்கின்றேன். அவனை மரியாதைகள் செய்து இங்கு அழைத்துவரும்படி நமதாட்களையுமனுப்பியிருக்கின்றேன். அவன் முன்னரெங்கே வசித்தனனோ தெரியவில்லை.

லீலா:—ஆனால், அவர் இப்பொழுதிங்கே வருவாரோ ?

ஜய:—ஆம்! குழந்தாய்! அதற்காகத்தான் யானுன்னுடன் இவ்விடம் வந்து காத்துக்கொண்டிருக்கின்றேன்.

லீலா:—(ஆன்மகதமாய்) அவ்வித சுந்தரமான ஆகாரத்தை யுடையவர் இவ்விதத்தொழிலையுஞ் செய்யச் சம்மதிப்பரோ ? இஃதென்னவோ ஆச்சரியமாகத்தானிருக்கின்றது !

(நேபத்தியத்தில் தூர்யவாத்தியம் முழங்குதல்).

ஜய :—அவர்களுமிதோ வருகின்றார்கள்போலிருக்கின்றது !

(வாத்திய கோஷத்துடன் போஜனை முன்னிட்டுக்கொண்டு சூரன், வீரன், காலபாசன், விநபாக்ஷன் என்னும் நான்கு மல்லர்கள் பிரவேசித்தல்).

மல்லர்:—பராக் ! பராக் !!

ஜய:—(லீலாவதி ஒருபுறமாய் நிற்க, தான் முன்வந்து) வாராய் வீரஸிம்மமே! வாராய் ! இவ்வாசனத்தில் விஜயம் புரிவாய்! (ஓர் ஆசனத்தைக் காட்டித் தானுமுட்காருதல்).

போஜன்:—மகாப்பிரபு , வந்தனம். (உட்காருதல்).

மல்லர்:—ஜயஜய ! வீரசிம்மா ! ஜய !

லீலா:—(பிதாவின்பின் ஒருபுறமாய் நின்று, போசனை ஆவலுடன் நோக்கி, ஆன்மகதமாய்) இவர்தாமோ அம்மகாவீரர் ? இவருடைய வடிவைக் காணும்பொழுதே என் தேகம் முழுதும் புளகாங்கித மாகின்றதே ! ஆஹா ! பரதேசியைப்போலுடைதரித்திருப்பினும் இவர் யாரோ பெருந்தன்மையுடையவரே !

போஜ:—(சயபாலனை நோக்கி) அரசே ! அடியேனை இங்கு இவ்வளவு மரியாதையுடன் வரவழைத்ததன் காரணம் யாதோ ?

லீலா:—(ஆன்மகதமாய்) ஆஹா ! இவருடைய அழகே யழகு !

மதனைப் பழிக்கு முருவம்
வதனம் மதிபோல மிக்க கமனீயம் !
ரதியைப் பயக்கு ம்ருதயம்
ரதனம் முகையொக்கு மென்னு ரமணீயம்! ()

ஜய:—சைந்துலரே ! நீர் செய்த பேருதவிக்கு யான் என்ன பிரதி செய்யப்போகின்றேன்? ஆயினும், இப்பொழுது

இவ்விரத்தினங்களையு மாபரணங்களையும் பெற்றுக்கொள்ள வேண்டும். (இரு தட்டுக்களில் நிரப்பியுள்ள இரத்தினங்களையு மாபரணங்களையும் தொட்டுக் கொடுப்பித்தல்).

**போஜ**:—மகாப்பிரபு! இவ்வளவு மரியாதைக்கு யான் அர்கனல்லேன்! (தட்டுக்களைத் திருப்பிவிடுதல்).

**லீலா**:—(ஆன்மகதமாய்) ஆ! இஃதென்ன? என்தேகம் முழுது மூடுருவிச்சென்று என்னைப் பரவசப்படுத்துகின்றதே! (பாடுதல்.)

(கக) இராகம்-நாதநாமக்கிரியை. தாளம் - ஏகதாளம்.

பல்லவி.

ஆ இதென்ன-ஆச்சரியமோ!

அநுபல்லவி.

என்றுமிராதவோ-ரெண்ணம் மனத்திற்றோன்றி
இன்றெனை யிவரிட-மிழுத்துச்செல்கின்றதே!—ஆ.

சரணங்கள்.

இந்தநாள் வரையிலும்-இவரைப்போற் கண்டிலேன்!
அந்த மிருந்தவிச்-சுந்தரனிவனையாரோ?— ஆ.
பருவச்சந்திரன்போலிப்-பரமபுருஷன்முகம்
பரவசமாக்கியென்னைப்-பந்தஞ்செய்கின்றதே!— ஆ.

**ஜய**:—ஏ வீரசிகாமணி! நீர் இப்படி யோசிப்பது தகுதியன்று! யான் வேறு நீர் வேறென்று நினைக்கவேண்டாம்! இவ்வணிகளையும் மணிகளையும் பெற்றுக்கொண்டு என்னைக் கௌரவிப்பீர்!

**போஜ**:—யான் உங்களுக்குப் பவ்யனாயிருக்கின்றேன்! ஆயினுமிவையெல்லா மெனக்கேன்? இவ்வுலகத்திலிருக்கும் எப்பொருளினும் எனக்கு ஆசையில்லை. தம்து ஊழியர்களான இவ்வீரர்களுக்குக் கொடுப்பிற் பிரயோஜனமுண்டு.

**லீலா:**—(ஆன்மகதமாய்) ஆ ஆ! என்ன விநயம்! என்ன சொன்னயம்! இவருடையஒவ்வொரு சொல்லும்என் மனத்தை உருக்குகின்றதே! ஆ ஆ! கானகத்திலேயே யிருந்து கொடிய தவஞ் செய்யும் துறவிகளுக்குக்கூட இப்படிக்கொத்த சித்ததார்ட்டியம் கிடையாது! இவர்நம் தந்தையார் நினைத்தபடி நற்குலத்திற் பிறந்தவர் என்பதிற் சந்தேகமில்லை.

*"திருக்கிளர் முகமும் வேர்வும்
சிறந்தசெம் பவள வாயும்
மருக்கிளர் மாலை மார்பும்
மகரகுண் டலமுங் காதும்
சுருக்கிய மருங்குங் கண்டாற்
றுடியிடை மடவா ராவி
இருக்கினு மிருக்கு நில்லா
திருக்கினு மிறக்கு மன்றே!" (௩௫)

**ஜய:**—சைந்துலரே! உமது குணத்தைக்கண்டு மிகவும் மெய்ச்சுகின்றேன். உம்மிஷ்டப்படியே இம்மல்லர்களுக்கே இவ் விரத்தினாபரணங்களைக் கொடுக்கின்றேன். (சூரன் முதலியோருக்கு அவற்றைப்பகுத்துக் கொடுத்தல்).

**மல்லர்:**—(ஒவ்வொருவரும் வணங்கி வாங்கிக் கொண்டு) ஜய ஜய! பிரநான்! விஜயீபவ!! (போசனை வணங்கித் தத்தம் இடத்திற்சென்று நிற்தல்).

**லீலா:**—ஆஹா! இவருடைய ஔதாரியமே ஔதாரியம்!

* 'இதையமு முருக்கு மின்பத்
திறைவனை யுற்று நோக்கி,

* அரிச்சந்திர புராணம்.

வதைபுரி பில்லர் தம்மை
மனந்தனி லுற்று நோக்கிற்
புதையிருள் கடிந்து வேலைப்
புவியினை விளங்குஞ் சோதி
உதயனைக் கண்ட கண்கட்
குடுக்கலைக் கண்ட தாமே!' (௬௬)

**ஜய:**—மல்லர்களே ! இம்மகாவீரரைக் களிப்பிக்கும்படி ஒரு பாட்டுப்பாடி நர்த்தனஞ் செய்யுங்கள் !

**மல்லர்:**—சித்தம்! யஜமான் ! (ஒருவிதமாய் நர்த்தனஞ் செய்து கொண்டு கரதாளத்துடன் பாடுதல்).

(௧௨) இராகம்-நாதநாமக்கிரியை தாளம் ஏகதாளம்.

பல்லவி.

தில்லேலோ தில்லேலோ - தில்லாலேலோ தில்லேலோ !

அநுபல்லவி.

மல்லர்சேனைத்தலைவரெம்மை-மறவாதென்றும் வாழ்ந்திருக்க!
பில்லர்யாவரும் பல்லாண்டு-பெருகிப்பாரிற் பிழைத்திருக்க!-தி!

சரணங்கள்.

உடுக்கக்கம்பளிதானிருக்க-உண்ணச்சம்பாச் சோறிருக்க!
குடிக்கக் கள்ளுக்குடமிருக்க-குத்தக்கன்னக்கோலிருக்க!- தி.

நம்பதெய்வம் நாமிருக்க-நாடுநமக்குக் காடிருக்க!
செம்பொன் பிடிபிடியாயிருக்க-செயபாலப்பிரபுதானிருக்க!-தி.

**போஜ:**—(அதே சமயத்தில் லீலாவதியைக்கண்டு, ஆன்மகதமாய்) ஆ ஆ! இஃதென்ன காந்தி ! இச்சபை யெங்கும் நிறைந்து பிரகாசிக்கின்றதே ! மின்னற்கொடியோ? மேகத்தைக் காணுமே ! அமிருதகலைகள் நிறைந்த சந்திரிகையோ? அனல்போல் தகிக்

கும் பகலாயிற்றே ! சுந்தரமாய் ஒளிவீசும் சூரியப்பிரபையோ? அதற்கிவ்வளவு குளிர்ச்சியேது ? இஃது என்னவோ அபூர்வமானதேஜோவிசேஷமாயல்லவோ யிருக்கின்றது !

நையாத தீங்கனியோ ?
கயக்காத வமுதோ?
கரையாதகற்கண்டோ?
கறியாத கரும்போ?
கொய்யாத நறுமலரோ?
கோவாதமணியோ ?
குளியாதபெருமுத்தோ ?
குலையாதவொளியோ ?
மெய்யான பெருவாழ்வோ ?
விலையறியாப்பொன்னோ ?
விடங்காத தீபிகையோ ?
விந்தை மரகதமோ ?
தீயாத வெண்சுடரோ ?
தியங்கலில்வாரிஜமோ ?
தெவிட்டாத செந்தேனோ ?
தேவர்புகழ் திருவோ ? (௩௭)

இவள் இவ் வனதேவதையோ? இக் கிருகலக்ஷ்மியோ? இப்பெண்ணரசி யாரோ ?

லீலா:—(போசன் தன்னைப்பார்க்கத் தலைவணங்கி நின்று கடைக்கண்ணால் நோக்கி ஆனந்தமாய்) ஆஹா ! இவரது,

* "நிரந்தரவுரோமரேகை.
நீலமும் வயிறுமார்பும்

* அரிச்சந்திர புராணம்.

புரந்தர சாப மொத்த
புருவமு நுதலும் பட்ட
மரந்தழைத் திடந கைக்கு
முறுவலு மாயன் றன்பாற்
கரந்தவா ரமுதச் சொல்லும்
கந்தற்கு மில்லை யன்றோ?" (௩௪)

போஜ:—(ஆன்மகதமாய்) ஆ ஆ! இப்பெண் கொடியின் கடாக்ஷமாலைகள் என்மனத்தைப் பலாத்காரமாய்க் கட்டி இம்மாதரசியினிடமிழுத்துச் செல்கின்றனவே! ஆஹா! இவளது முகத்தினழகையான் என்னென்று சொல்லுவேன்? திருமாலையும் மயங்கச் செய்வதான வசீகரத்தையுடைய ஸ்ரீதேவி வாஸம் பண்ணுகின்ற சிவந்த இதழ்களையுடைய செந்தாமரை மலரும், விரிவான பெருமையையுடைய வேதசாஸ்திரங்களைச்சொன்ன சதுர்முகப் பிரம்மதேவன் உற்பத்தியான வெண்டாமரை மலரும் இவளது வதனத்திற்கு முன் எங்கே?

ஜய:—(போசனும் லீலாவதியும் ஒருவரை யொருவர் நோக்கும் விலாஸத்தைக்கண்டு சந்தோஷத்துடன் ஆன்மகதமாய்) ஆஹா! இவளுக்கு அவனே தக்கவன்! அவனுக்கு இவளே தக்கவள்! இவ்விருவரையும் ஈசனார் சேர்த்துவைப்பாராயின் அதனினும் பிரியமானதெனக்கு வேறொன்றுமில்லை. (பிரகாசமாய்) பிரதான்! போஜனம் சித்தமாயிருக்கின்றது! ஸ்நாநத்திற் கெழுந்திரும்! (லீலாவதியை நோக்கி) குழந்தாய்! எழுந்திரு, போவோம். (எழுந்து பரிக்கிரமித்தல்).

லீலா:—(நான்கடிவைத்து) எந்தாய், காலில் ஒரு முள் தைத்துவிட்டது. நில்லுங்கள், இதைச் சற்று வாங்கிவிட்டுவருகின்றேன்! (வெகு உத்கண்டையுடன் போசனைப்பார்த்தபடி குனிந்து முள்வாங்குவதுபோல் நடித்தல்).

ஜய:—(திரும்பி) என் கண்மணி! உன் காலில் முள்தைக்கவில்லை! உன் இருதயத்தில் மலர்முட்கள் தைத்திருக்கின்றன.

உனது எண்ணத்தைக் கருணாநிதியான கடவுள் நிறைவேற்று வர்! இப்பொழுது அரண்மனைக்குப் போவோம் வா! (இருவரும் பரிவாரத்துடன் நிஷ்கிரமித்தல்).

**போஜ:**—சசா! உன் செயலை என்னவென்று சொல்வேன்! அப்பெண்மணியைப் பெற்றவனே வொரு பில்லன்! யானோ ஒரு க்ஷத்திரியன்! எனக்கோ அவளுடைய தர்சனம்பண்ணுதிருப்பதைவிடப் பிராணத்தியாகம் செய்வதே மேலாகத் தோற்றுகின்றதே! ஆ மாதர்க்கரசியே!

* "மைதிகழ் வாரி சூழு
மாநிலத் தோர்கட் கெல்லாம்
பெய்தவம் பழி பிறங்காப்
பிள்ளையைப் பெறுத லென்பார்!
செய்தவ மன்றுன் றாதை
சென்மங்க டோறுஞ் செய்த
கைதவ மாவி கொள்ளும்
களவினிற் பயந்த தெல்லாம்!" (௯௬)

(நிஷ்கிரமித்தல்.)

* அரிச்சந்திர புராணம்.





# ஐந்தாம் அங்கம்.

## முதற்களம்.

### இடம்—தாரைநகர்: முஞ்ஜராஜனது ஆஸ்தான மண்டபம்.

(வத்ஸராஜர், பத்திர நாராயணர், நீலகண்டர் முதலிய சில ராசஸபாஸதர்களுடன் முஞ்ஜராஜன் சிம்மாஸனத்தில் வீற்றிருந்தபடி தக்க பரிவாரத்துடன் பிரவேசித்தல்).

**முஞ்ஜன்:**—பத்திரநாராயணரே! என்ன விசேஷம்? யாரவன் தூதனொருவன் வந்து எம்மை நேரிற்காணவேண்டுமென்று அரண்மனை வெளிவாயிலில் நின்றுகொண்டு அமர்க்களஞ் செய்கின்றனனாமே? ஸாமானியனான ஒரு தூதனுக்கு இவ்வளவு தைரியமும் பிடிவாதமுமிருப்பது விந்தையாயிருக்கின்றதே. இவன் எவனோ நம்முள்ளுளவு தெரிந்தவனாகத் தோற்றுகின்றான். (காதுடன் மெதுவாய்ப் பத்திரநாராயணருக்கேதோ உரைத்தல்).

**பத்திரநாராயணர்:**—(காதுடன் ஏதோ பதிலுரைத்து) மஹாராஜா! ஆயினும் நமக்கென்ன பயம்? வத்ஸராஜருடைய தயையிருக்கும்வரை நாமொன்றுக்கும் அச்சப்படவேண்டியதில்லை.

**வத்ஸராஜர்:**—என்னுடைய தயையினாலாவதென்ன? இவையெலாம் அடியேன் மஹாராஜா அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளே.

**நீலகண்டர்:**—அது மஹாராஜா அவர்களுக்குத் தெரிந்தே தானிருக்கின்றது!

**முஞ்ஜ:**—யாம் அனுபவித்துவரும் இச்செல்வமெல்லாம் உங்களுடைய அநுக்கிரஹத்தினுலேயே! நம் வத்ஸராஜருடைய உதவியிருப்பின் எதுதான் எமக்கஸாத்தியம். ஆகலின் யாம் பயப்படவேண்டியதொன்றுமில்லை. அத்தூதனை இங்கு வரவழைத்தே விசாரிப்போம். பத்திரநாராயணரே! நீரே சென்று அத்தூதனை இங்கு அழைத்துக்கொண்டு வாரும்.

**பத்திர:**—அப்படியே! (நிஷ்கிரமித்தல்).

**முஞ்ஜ:**—வத்ஸராஜரே! உஜ்ஜயினீ தேசத்தரசனு அத்தூதனை யனுப்பினன்?

**வத்ஸ:**—ஆம்! மஹாராஜா! அப்படித்தான் அவன் சொல்கின்றனனும்.

**முஞ்ஜ:**—உஜ்ஜயினீ தேசத்தரசன் ஆதித்தியவர்மன் எனக்கு வேண்டியவனே! அவன் தூதனையனுப்பியவிஷயம் உமக்கேதாயினுந் தெரியுமோ?

**வத்ஸ:**— அஃதொன்று மெனக்குத் தெரியவில்லை. நானும் இப்பொழுதுதான் ஒருதூதன் வந்திருப்பதாகக் கேள்வியுற்று இங்குவந்தனன்.

**முஞ்ஜ:**—நல்லது! புத்திஸாகரரும் ஹரி ஹரரும் நேற்றிரவு பூபாளநாட்டிற்குச் சென்றனர்களாமே! அஃதுண்மைதானே?

**வத்ஸ:**—(ஆன்மகதமாய்) இவன் எப்பொழுதும் என் வாயிலிருந்தே நகரில்நடக்கும் சங்கதிகளையெல்லாம் அறியப் பார்க்கின்றனன்! நாமும் இவனிடத்தில் கவனத்துடனே சம்பாஷிக்கவேண்டும். (பிரகாசமாய்) ஆம்! மஹாராஜா! அவர்களெங்கேயே சென்றதாகத்தான் தெரியவருகின்றது. ஒருவேளை பூபாளநாட்டிற்கே சென்றிருக்கலாம்.

**முஞ்ஜ:**—அங்குச் சென்று எம் சகோதரி சாருமதியுடன் கலகஞ்செய்து ஒருவேளை நம்மை எதிர்க்கப்பார்த்தாலும் பார்ப்பார்கள்.

வத்ஸ:—(சிரித்துக்கொண்டே) ஆ! அவர்களால் என்ன செய்யக்கூடும்? இந்நகரிலேயே அவர்களது பிரயத்தனம் சாயவில்லையே! வேறெங்குதான் அவர்களது சாமர்த்தியம் பலிக்கப்போகின்றது.

(பத்திரநாராயணருடன் காளிதாசன் பிரவேசித்தல்).

முஞ்ஜ:—(நோக்கி ஆன்மகதமாய்) இவன் யாரோ நம்நகரைச் சேர்ந்தவனே! இவனைநாம் அனேகந்தடவைகளிற் பார்த்திருக்கின்றோம்.

காளிதாசன்:—(அருகிற் சென்று, கைகூப்பி) போற்றி! போற்றி!! தாரேச்வரா! போற்றி!!!

முஞ்ஜ:—பத்திரநாராயணரே!இவன்தானோ அத்தூதன்?

காளி:—ஆம்! பூபதியே!

முஞ்ஜ:—(ஆன்மகதமாய்) குரலும் அவனதுபோலவே யிருக்கின்றது. அவ் ஹரிஹரருடைய புத்திரனல்லவா இவன்? (பிரகாசமாய்) பத்திரநாராயணரே! யாதுகாரணம்பற்றி இவன் இங்கு வந்தனனோ விசாரியும். (காளிதாசனை நோக்கி) ஏனப்பா! நிற்கின்றாய்? உட்கார்ந்துகொள்.

காளி:—மஹாப்பிரபோ! தாங்கள் எனக்குச்செய்யும் இம்மரியாதைக்கு யான் விசேஷமானவந்தனஞ்செலுத்தத் தக்கவனாயிருக்கின்றேன். யான் ஏதோ கபடமாய் வந்திருப்பதாகத் தாங்கள் நினைக்கின்றீர்கள். அப்படிப்பட்ட அதிசங்கையாதொன்றும் வேண்டாம். யான் தங்களுடைய பேட்டியை ஒரிராஜகார்யார்த்தமாகத் தேடிவந்தனன். ஜகதேகவீரனும், துஷ்டஜன நிக்கிரகனும், அக்கினிகுலத்திற் பிறந்தவனுமான ஸ்ரீ விக்கிரமார்க்க மஹாராஜன் வம்சத்திலுதித்தவரான உஜ்ஜயினி தேசத்தையாண்டுவரும் ஸ்ரீ ஆதித்தியவர்ம மஹாராஜரால் அனுப்பப்பட்ட தூதன் யான். அம்மஹாப்பிரபுவின் காரியமாய் யான் இங்குவந்தனன். தங்களுடைய

க்ஷேமத்தை யபிவிர்த்தி செய்யத்தக்க சில பத்திய வசனங்களை யுரைக்கின்றனன்: அவையும்மாற் கேட்கப்படட்டும்: நன்றாக மானிக்கப்படட்டும். இச்சாமானியனுரைத்ததென விகழவேண்டாம். தூதன் தானே சொல்லியதெனத் தள்ளவேண்டாம்.

முஞ்ஜ:—போதும் அப்பா! அறிந்தேன் உனது பிரஞ்ஞையையை! நிறுத்து இதனுடன் இப்பீடிகையை. நீ வந்த காரணம் யாதோ அதனையுடனே கூறிச்செல். ஆதித்தியவர்மனா உன்னை எம்மிடத்திற்குத் தூதனுப்பினன்?

காளி:—ஆம்! மஹாப்பிரபோ! அவரது ஆணையின்மீது தான், யான் தங்களிடம் வரலாயினேன். பிராதாவெனவெண்ணும்படி தங்களிடத்தில் அவ்வளவு பிரேமை வைத்திருந்த ஆதித்தியவர்ம மஹாராஜர் தாம், தமது க்ஷேமத்தை விரும்பினவராய், தமக்கு அறுமையங்கூறி, தர்மார்த்தங்களுக் குசிதமான இவ்வசனங்களைத் தம்மிடத்தில் என்வாயிலாய் விஞ்ஞாபிக்கும்படி ஆஞ்யாபித்தனர்.

முஞ்ஜ:—அவை யென்னவாம்? சீக்கிரம் அவற்றை யுரைத்துச் செல்.

காளி:—மஹாப்பிரபோ! சகலதர்மங்களையுமறிந்த தாங்கள் இப்படி அவசரப்படுவது அழகன்று. இக பர சாதகமா யிருக்கும் அவர் உரைத்த வசனங்களைக் கூறுகின்றேன்: கவனமாகச் செவியுறீர். மாளவநாட்டிற்கு மகுடமணிபோல் விளங்கிவந்த இத்தாரைமாநகரில், விண்ணுலகாளும் வாஸவன் போல், மிகப்பெருமையோடு, ஸகலப்பிரஜைகளும் தனைனப்பிதாவெனும்படி வாத்ஸல்யத்தோடு பார்த்து வர, நமது தமையனார் ஸ்ரீசிந்துல மஹாராஜர் வெகுகாலம் தர்மபரிபாலனஞ் செய்து வந்தனரன்றோ? அந்நரபதிக்கு ஏகபுத்திரனும், இத் தாராராஜ்ஜியத்திற்குரியவனும், ஸத்திய ஸந்தனும், தர்மஞ்யனுமான போஜனென்போனை இதுகாறும் நமது ஸம்ரக்ஷணையிலிருந்து வந்தனனன்றோ? அம்மகா புருஷனைத் தாம் யாது

காரணம் பற்றியோ பிடித்து, ஒருவருக்குந் தெரியாதவிடத்திற் கடுங்காவலில் வைத்திருப்பதாகக் கேள்வியுற்றேன். அன்றியும், அவ்வாறு செய்து அவனது ராஜ்ஜியத்தைத் துராக்கிரமமாய்க் கைப்பற்றிக்கொண்டதுமன்றி, அவனது தர்மபத்தினியான விலாஸவதி தேவியையும், அவனது தாயார் தர்மதேவதைபோன்ற ஸாவித்திரீ தேவியாரையும், கெட்ட எண்ணங்கொண்டு நிஷ்காரணமாய்க் கடுஞ்சிறையில் வைத்திருப்பதாகவுந் தெரியவருகின்றது. அப்படிப்பட்ட தீத்தொழில்களைப்புரிவது உம்மைப்போன்ற புத்திமான்களுக்குத்தக்கதன்று. உமது பெருமையையும் நலத்தையும் நாடுவீராயின், நிரபராதியான அப்போஜகுமாரனிடம் இவ்விராஜ்ஜியத்தையுடனே ஒப்பித்து, விலாஸவதி தேவியையும், ஸாவித்திரீ தேவியாரையும் அவனிடங்கொண்டு சேர்த்து, நீர் செய்த இம்மகாபராதத்தைத் தீர்த்துக்கொள்ளும்.

முஞ்ஜ:—(கோபத்துடன்) அப்படிச் செய்யாவிடிலோ?

காளி:—வீணழியவேண்டியதுதான்!

முஞ்ஜ:—(பரிஹாசத்துடன்) அடே! அற்ப! என்னடா கூறுகிறாய்? எம்மை யாரென்று நினைத்துவிட்டனை?

காளி:—அரசே! யான் உம்மை முன்னரே அறிவேன்! இனிப் புதிதாய்த் தம்மைப்பற்றி யான் நினைக்கவேண்டியதில்லை. இவ்விராஜ்ஜியம் தற்காலத்தில் உம்முடையகைவசத்திலிருப்பதென்று தைரியங்கொள்ளவேண்டாம். நீர்தாம் சுத்தவீரரென இறுமாப்படையவேண்டாம். பத்திரமாயிருக்கின்றோமென்று நினைத்துக்கொண்டிருக்குமும்மை மகத்தான ஆபத்துக்கள் வந்து சூழ்ந்துகொண்டிருக்கின்றன.

"யாந்தி ந்யாய ப்ரவ்ருத்தஸ்ய
திர்யஞ்சோபி ஸஹாயதாம்

அபந்தானந்து கச்சந்தம்
ஸோதரோபி விமுஞ்சதி" (க)

என்று சொல்லுகிறபடி, உமது கெட்ட காலத்திற்கு நீர் மித்திரர்களென்று நினைத்திருப்பவரே உமக்குச் சத்துருக்களாய் நிற்பார்கள். உமது ஸைன்னியபலமே உமக்குக் கலக்கம் விளைக்கும். ஏதோஸாமானியன் யான் பிதற்றுவதாகப் பரிஹஸித்து மோசம்போகாதீர். நீர் செய்த இத்தீவினைகளுக்குப் பயன் வருவதற்கு முன்னரே, போஜகுமாரரை இத்தாராராஜ்ய ஸிம்மாஸனத்தில் ஸ்தாபித்து, விலாஸவதியை அவரது மடியிலும், ஸாவித்திரீ தேவியாரை அவரது இடையிலும், உமதுமுடியை அவரது திருவடியிலும் ஸமர்ப்பித்து, இப்படியே கொஞ்சக் காலமாயினும் உமதுபந்துமித்திரகளத்திரவர்க்கத்துடன் பிழைத்திரும்.

முஞ்ஜ:—(க்ரோத ஹாஸத்துடன்) தூதாதமா! நீ ஹரிஹரனுடைய புத்திரனல்லையடா?

காளி:—யான் எந்தத் தேவதத்தனுயிருந்தால் உமக்கென்ன? இப்பொழுது ஆதித்தியவர்மமஹாராஜருக்கு என்ன பதிற்கூறுகின்றீர்?

முஞ்ஜ:—பதில் வேறென்ன? அவனுலானதைப் பார்த்துக்கொள்ளட்டும். என்னிடத்திலேயோ இவனது நயமெல்லாம்?

காளி:—நயத்தால் வாராததைச் சாம்பராயத்தாற் சாதிப்போம். தர்மோபதேசத்தாற்கிடையாததைக் கோரமான யுத்தாவேசத்தாற் சம்பாதிப்போம்! ஆசையாலும் காமத்தாலும் மதிமயங்கி நுமது நாசத்தை நீரே தேடிக்கொள்ளாதீர்! தேகமிருப்பின் சுகத்தை யொருபொழுதாயினு மனுபவிக்கலாம். அதனை வீணாய்ப்போக்கிக் கொள்ளாதீர்! கூட்டங்கூட்டமாய் மேற்குதிசையிலிருந்து வந்த மிலேச்சர் சைனியமெல்

லாம் ஒருகணத்திற் பறக்கடித்த மஹாவீரரான அவ்வாதித்தியவர்ம மஹாராஜக்குமுன் நீர் எம்மாத்திரம்? உமது சேனைதான் அவரது சேனாசமுத்திரத்திற்கு முன் எவ்வளவு? அவர் சொல்லியபடி செய்தாற் பிழைப்பீர்: அன்றேல் இதற்காக அவர் தொடங்கப்போகின்ற தர்மயுத்தத்தில் நீர் பூண்டோடு மடிய வேண்டியவர்தாம். அவரது பாணத்தாலடிபட்டுத் தர்மராஜபுரத்திற்கு முக்கிய அதிதியாய்ச் செல்லவேண்டியவர்தாம்.

முஞ்ஜ:—(கண்கள் சிவக்க, பற்களை நறநறவென்று கடித்து வெகு கோபத்துடன்) அடே! மூடா! சூரருக்குள் இனி இவருக்கு ஒப்புயர்வில்லை என்னும்படி உலகமெலாம் பிரக்கியாதிபெற்ற எமக்கோ இப்பூச்சி மருட்டல்கள்? நன்று! நன்று!! யுத்தத்தில் எம்முன் எவனடா நிற்கவல்லான்? இப்படிக் கொஞ்சமேனும் எனது நிலைமையையும் பெருமையையுமறியாது, வாய்க்கு வந்தவாறெல்லாம் பிதற்றின உன்னை இக்கணமே தக்கபடி தண்டிப்பேன். ஆதித்தியவர்மனுடைய தூதனென்று சொல்லியதனுல் உன்னைக்கொல்லாது நிற்கின்றேம். ஆதித்தியவர்மன் சொல்லட்டும், அவனது பிரபிதாமகன் விக்கிரமார்க்கனேயுரைக்கட்டும்: யாம் இவர்களைவிடேம்! யாம் இம்மூவரையும் முன்னரே நமபுரத்திற்கனுப்பி விட்டதாக உன்னரசனிடத்திற் சொல். அவரால் ஆனமதையவரும் பார்க்கட்டும். யாமும்யுத்தத்திற்கு ஸர்வஸன்னத்தமாகவே யிருப்பதாய்ப்போய் உரை. யாம்யுத்தத்திற்கு வருகின்றேமென்னுமிக் கோரசமாசாரமாகிற பேரிடியின் முழக்கத்தை உன்வாயிலாக ஆதித்தியவர்மன் கேட்டு நடுங்குமுன்னரே, எமது சதுரங்கபலசைனியத்தின் வீரப்பிரதாபமாகிற மின்னலொளி உஜ்ஜயினியிற்பற்றி எரியும். இதுதான்பதில். போ! இந்நகரைவிட்டு உடனே தப்பிச்செல் (நீலகண்டரை நோக்கி) ஐயா! நீலகண்டரே! தூதனுக்குச் செய்ய வேண்டிய மரியாதைகளைச்செய்து இவனை வழியனுப்பிவிட்டு வாரும்.

**காளி:**—காலத்திற்குத் தக்கமகிமை (சிலகண்டருடன் கீழ்ப்பிரவித்தல்).

**முஞ்ஜ:**—வத்ஸராஜரே! இத்தூதன் நமது ஸபாசதனாயிருந்த ஹரிஹரனுடைய புத்திரன்போலிருக்கவில்லையா?

**வத்ஸ:**—அதற்கென்ன சந்தேகம்! இவன் அவரது புத்திரன் காளிதாசனே!

**முஞ்ஜ:**—(முகத்தைச் சிடுத்துக்கொண்டு) ஆ! அப்பொழுதே நினைத்தேன்! இவனது நூதனமான உடையைக்கண்டு மயங்கினேன்! இவன் போஜனுக்குப் பிராணநேசனன்றோ?

**பத்திர:**—ஆம்! அவ்விருவரையும் பற்றி நான் முன்னரே தங்களுக்குச் சொல்லியிருக்கின்றேனே! அவன்தான் இவ்வாதித்தியவர்மனைத்தூண்டித் தங்கள்மீது படையெடுத்துவரும்படி செய்திருக்கவேண்டும்.

**முஞ்ஜ:**—அப்படித்தான் இருக்கவேண்டும். ஆ ஆ! அப்பொழுதே அவன் இன்னானென்று தெரிந்திருந்தால், அவனையிவ்வளவு சுலபமாய்விட்டிரேம். (கோபத்துடன்) இப்பொழுதுமென்ன? இவனைப் பிடித்துவரச்செய்து போஜன்போனவழிக்கு இவனைத்துணையாயனுப்புவோம். இவனை உயிருடன் விட்டுவிடில், நமக்குப் பெருங் கெடுதியை விளைப்பான்?

**வத்ஸ:**—(சிரித்துக்கொண்டு) ஆ! இச்சிறுவனால் என்ன முடியும்? அவனைக் கொல்வது நலமன்று! மேலும், அவன் ஓரரசனது தூதனாக வந்திருக்கின்றனன். அவனைச் சத்துருவாயிருப்பினும் மரியாதை செய்தனுப்புவதே இராஜநீதியை யறிந்த தம்போன்ற வரசர்களுக்கழகு. அற்பரன்றோ இப்படிக்கொத்த காரியத்தைச் செய்வர்.

**முஞ்ஜ:**—வத்ஸராஜரே! அப்படியாயின், நாம் இனி ஒரு க்ஷணமும் தாமதிக்கலாகாது. இன்று மாலையே யுத்தத்திற்குப் புறப்படும்படி நீர் ஸர்வஸைன்னியத்தையும் ஆயத்தப்படுத்தவேண்டும்.

வத்ஸ:—ஸகலஸைன்னியங்களும் ஸித்தமாகவேயிருக்கின்றன! நெடுநாளாய் யுத்தமில்லாது கொழுத்திருக்கும் நமது ஸேனாவீரர்கள் எப்பொழுது யுத்தம் கிடைக்குமென்றல்லவோ காத்துக்கொண்டிருக்கின்றனர்.

முஞ்ஜ:—பிரபலமானயுத்தம் நேரிடுமென்று தோன்றுகின்றது.

வத்ஸ:—ஆயினும், நமக்கென்ன? பலத்திற்குறைவா? வீரியத்திற்றாழ்வா? ஜயத்தில் ஸம்சயமா? நீரோ மஹாசூரர்! ஸர்வசத்துருஹந்தா! இவ்வைம்பத்தாறு தேசத்தரசர்கள் ஒன்றுகூட்டி வந்தெதிர்த்தபோதிலும், ஒருவராய் நின்று நீர் யுத்தஞ் செய்யத்தக்கவல்லவரே. தமக்கேன் இவ்வாதித்தியவர்மனைப் பற்றிக் கவலை? உஜ்ஜயினீ நகரத்திலும் நமது ஜயத்வஜத்தை நாட்டுவோம். இது நமது நற்காலமென்றே கொள்ளுங்கள்.

முஞ்ஜ:—எல்லாம் உம்முடைய கிருபைதான்! யாம் வேறென்ன சொல்லவேண்டியது? ஸகலஸைநிகர்களையும் யுத்தத்திற்குச் சித்தப்படுத்தவேண்டியது தான்.

வத்ஸ:—அப்படியே! (நிஷ்கிரமித்தல்).

முஞ்ஜ:—பத்திர நாராயணரே! யாமே நேரில் யுத்தத்திற்குப் போகவேண்டியிருக்கின்றது. ஆகலின், யாம் திரும்பிவருமளவும், நீரே இவ்விராஜ்ஜியத்தைப் பாதுகாத்து வரவேண்டியது: விலாஸவதியும் ஸாவித்திரீதேவியும் இருக்குமிடமே ஒருவருக்குந் தெரியாதபடி அவ்வளவு ஜாக்கிரதையாக அவர்களைச் சிறைச்சாலையிற் கடுங்காவல் வைத்துக் காக்கவேண்டியது. இதுதான் யாம் உம்மைப் பிரார்த்திப்பது. மற்றவிஷயங்கள் உமக்கே தெரிந்திருக்கின்றன. யாமும் வெகு சீக்கிரமாய் யுத்தத்திற்குச்சென்று, அவ்வுஜ்ஜயினீதேசத்தரசனது கொட்டத்தைக் கொட்டியவாயில் மட்டந்தட்டி வருகின்றேம்.

பத்திர:—மஹாராஜா அவர்களின் ஆஞ்ஞை!

(யாவரும் நிஷ்கிரமித்தல்).

## இரண்டாங்களம்.

இடம்:—ஜயபாலன் வசிக்குங்குகையில் ஓரறை.

(ஜயபாலன் மனைவி சண்டிகை பரபரப்புடன் பிரவேசித்தல்.)

**சண்டிகை:**—என்னம்மாடீ ! என்ன அநீதம் ! என்ன அவஸ்தை! இது வரைக்கும் நம்பயிருந்தவிடமே யாருக்குந் தெரியாமலிருந்தது: நாம்பளும் சொகமா காட்டிலே மறைவா தங்கி யிருந்தோம்: அப்படியிருக்க,நேத்து ராத்திரி யாரோ ஒரு பரிதேசி யகப்பட்டானும் ; அவனை குகைக்குள்ளே கூட்டிக் கிட்டு வந்திட்டாங்களே! நல்லா யிருக்குது! பரிதேசியாச்சுது! கிரிதேசியுமாச்சுது! ஆத்தாடி! அவனைப் பாத்தாக்கே பரிதேசி யாட்டமா யிருக்கான்! எவனே ராஜாவீட்டு மகன்போலே மொக்காணி திம்மனாட்டம் யிருக்கானே! அவன் பெருமையை யும் மழமழப்பையும் பார்த்துட்டுதானேஅந்தப் படுநீலிப் பெண் லீலாவதியு மவனண்டை ஆசைகொண்டிருக்காள் ! அவன் இங்கே எதுக்கு வந்தானே அது நல்லா வட்டவெளியாதெரி யுதே! நம்பளை வேவு பார்க்கத்தான் வந்திருக்கான்! இது அந் தப் பொணத்துக்குத் தெரியலையே! போருகுறைக்கி அவனைப் பட்டணத்துக்கும் கூட்டிகிட்டுபோய் இந்த நகைகளையெல்லா மெடுத்துக்கிட்டு வந்தாங்களாமே! ஐயோ! இவங்க போரயிட த்துக்கு அவனை யிட்டுகிட்டுப் போகலாமா ? நம்பயிருக்கிற விடம்அவனுக்குத் தெரியலாமா ? இதவும் போரு தின்னிட்டு நம்பளைச்சேர்ந்தவங்களுக்கெல்லாம் பதானியாம். ஆண் பிள் ளைங்க வெளிமினுக்கிலே மயங்குவாங்களென்று சொல்லு வாங்களே அது சரியா முடிஞ்சிது! குட்டிச்சொவருக்கு வயது பூந்தாப்பலே பூந்துதே தவிர நம்பளவங்களுக்குப் பின்னே வரப்போரது தெரிஞ்சாலென்ன ? அவனைப் பார்த்தா நம்பளண்டை வேலைக்காரனாட்டாயிருக்கான் ? ஐயோ அடிச்சிக்கணம் ! அவனண்டே நாம்பளன்ன கூலிவேலை செய்யவேண்டும். இப்படி கண்ணை மூடிண்டு நடந்தா அப் படித்தான் ஆகப்போகிது. கொஞ்சத்துக்கா வந்திருக்கிது

வம்பு ?—இவனை எப்படியாவது கொன்னுவிட்டாதான் நாம்ப குறைநாளும் பிழைச்சிருக்கலாம். இவனை உயிரோடே விட்டுட்டா நம்பகுடி கெட்டுப்போச்சு! நல்லது நம்பளாலே ஆனத்தே பாத்துக்குவோம். இவனே யென்னமோ திரிம்பிப்போக விடுவதில்லே.—(செவிகொடுத்து) யாரோ வராங்கபோலிருக்குது (நோக்கி) சரி! நம்ப புருசன்தான் வாராங்கோ! அவங்க நான் சொல்றபடி கேக்காத போறுங்களா பாத்துக்குவோம்! எதுக்கும் நாம்ப தலே நோவு வந்ததுபோலப் பாசாங்குபண்ணி முக்காடுபோட்டுக்கிட்டு இந்த மூலேயிலே படுத்துக்கிட்டு அமக்களம் ண்ணுவோம் ! அப்படி சேஞ்சாதான் அவனைக் கொல்லலாம் (சொன்னவாறு படுத்துக்கொள்ளல்).

**ஜயபாலன் :**—(ஆன்மகதமாய்) நம்முடைய குழந்தை லீலாவதியும் அம்மகாவீரன்மீது காதல் கொண்டிருக்கின்றாள். அவனே அவளுக்குத் தக்ககணவன். அவனது தைரியத்தையும் தேககாந்தியையும் கண்டால் யார்தான் அவனைப்பெற விருப்பங்கொள்ளார்கள் !

*'உடுக்குநீ ருலக மேழு
மொன்றின்மேலொன்றைவைத்தே
அடுக்குநீள் புயமுஞ் செய்யா
ளாவியு மனமுந் தாவிப்
படுக்கும்வாள் விழியு மார்பும்
பரிசிலர் மகிழ நாளும்
கொடுக்கும்வார்கரமு மாத
ருஃமெலாங் கொள்ளை கொள்ளும்!" (உ).

அவனைப் பார்க்கப் பார்க்க எனக்கே அதிகமான அநுராகமுண்டாகிறதே! அப்படியிருக்கப் பெண்ணும் உயர்ந்த ராஜவம்சத்திற் சனித்தவளுமான நம்புதல்வி அச்சுந்தர புருஷனைக்

* அரிச்சந்திர புராணம்.

கண்டு காதல்கொள்ளுவது ஸஹஜமல்லவா? எப்படியாயினு மவனுக்கே நம்குழந்தையை மணஞ்செய்விக்கவேண்டும். அவ னும் நம்குழந்தையின்மீது காதல் கொண்டவன்போலவே தோன்றுகின்றான். ஈசனது கிருபையிருந்தால் இவ்வெண் ணத்தைமுடித்து, நமது ஆஸ்தியெல்லாமவர்களுக்கே கொடுத்து நாம் அவர்களைக்கண்டு களித்திருக்கலாம். எதற்கும் நாம் இந்த சுபசமாசாரத்தை நமது சண்டிகைக்குச் சீக்கிரத்தில் தெரியப்படுத்தவேண்டும்! அவளது அநுமதியின்றி என்னு லொரு காரியமுஞ் செய்யமுடியாது! நேரே அவளிடத்திற்குச் செல்வோம். (சான்கடிபரிக்கிரமித்து) சுரவதனை நம் காதலி இங்கு வந்ததாகச் சொல்லினளே! எங்கே காணோம்! (சுற்றி நோக்கி) ஆ! இஃதென்ன? யார் இங்கே படுத்திருப்பது? (உற்று நோக்கி) என்ன! நம் சண்டிகையா? ஏனிப்படிப் படுத்திருக்கின்றாள்? இன்னும் பொழுதுபோக நான்கு நாழிகையிருக்கின்றதே! இப் பொழுதேன் படுத்துறங்குகிறாள்? (சமீபஞ்சென்று செவிகொடுத்து) சீ சீ! தூக்கமன்று! ஏதோ உடம்பு அசௌக்கியம்போற்றோற் றுகிறது. (அருகிற்சென்று முகத்திற் போர்த்திருக்கும் சீலையைச்சற்றுவிலக்கி நோக்கல்)

சண்டி:—ஆ! அம்மாடி! (பற்களைக்கடித்துக்கொண்டு முகத்தை நன்றாய் மூடிக்கொண்டு ஒருபுறமாய்ப் படுத்தல்)

ஜய:—ஆம்! அப்படித்தானிருக்கவேண்டும்! இதோ இவளுடைய தேகமே அதைக்குறிப்பிக்கின்றதே.

கால்களை நீட்டிக் கைகளைக் கட்டி
மூலையிற் படுத்து முக்காடு போர்த்துக்
கருநிச மலர்போற் கறுமுகம் சிவக்க
உருண்டு வெளிவரு முதடுகள் துடிக்க
தூங்கக் குசங்கள் தொங்கிக் குலுங்க
அங்க முழுது மயர்ந்து நடுங்க

முன்வரு புருவம் முட்போல் நிற்க
வெந்நீ ராடி வெயர்த்ததோ வென்க
கண்கள் சிவக்கக் கண்ணீர் ததும்பப்
பெண்ணிவளேனோ பெருமூச் செறிகிறாள்?()

நல்லது தட்டி எழுப்பி விசாரிப்போம்! (மெள்ளத்தட்டி) என் காமக் கொம்பே! சண்டி! என்னடி உடம்புனக்கு?—

சண்டி:—(பதிலொன்றும் பேசாமற் பெருமூச்சுவிட்டுத் தலையைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு மற்றொரு பக்கந் திரும்பிப் படுத்துக்கொள்ளல்).

ஐய:—(சண்டிகையின் காலைப் பிடித்துக்கொண்டு) அடி என் காதற் கிழவீ! நானென்னடி செய்தேன்? என்மீது கோபமென்னடி?

சண்டி:—(முக்காலொரு பெருமூச் செறிந்து) ஆமா? நானிருந்தாலென்ன? செத்தாலென்ன? நான் தொலைஞ்சுபோகணுன்னுட்டு உங்களுக் கிருக்குதோல்லையோ?

ஐய:—(ஒன்றுந்தோன்றாமல், ஆன்மகதமாய்) ஆ! நான் என் செய்வேன்? இப்படி ஒருநாளுமிவள் கோபித்துக் கொண்டதில்லையே! இன்றிவள் வருந்துவதற்குக் காரணம் யாதோ? நேற்றிராத்திரி எல்லாஞ் சந்தோஷமாயிருந்தாளே! இப்பொழுதிவ்வாறு நொந்துகொள்வதேனோ? யான் இன்ன குற்றஞ் செய்தேனென்று எனக்கே தெரியவில்லையே! (பிரகாசமாய்) அடி இப்படிப்பாரேன்? ஏனிப்படிக் கோபித்துக் கொள்ளுகிறாய்? உனக்காகத்தானே நான் அன்று அவ்வளவு இரத்தினங்களையுமாபரணங்களையுங் கொண்டுவந்தேன். பார்த்தாயோ அவையெல்லாம்!

சண்டி:—அதையெல்லா மொங்க தலையிலே கட்டிக்குங்கோ!—ஐயோ! இங்கே என்னுவி கலங்குதே! அதையெல்லாம் நீங்களே வெச்சிகிட்டு அழுங்களேன்! என்னையேன் தொந்தரை செயரைங்க!—ஆ போறதே! போறதே!

ஜய:—(திகில் கொண்டு) என்னடி உடம்புக்கு? யாரையாகி லும் வைத்தியனை யழைத்துக்கொண்டு வரட்டுமா? என்ன உடம்பு? சொல்லேண்டி!

சண்டி:—வயித்தியனும் வேண்டாம் பயித்தியனும் வேண் டாம். என்னைத் தொந்தரைபண்ணுமல் ஒங்ககாரியத்தைப் பாத்துக்கிட்டு போங்களேன்.—ஐயோ! சாறேன்! சாறேன்!

ஜய:—ஐயோ! என்ன செய்யச்சொல்லுகிருயடி? உடம் பைப் பிடிக்கட்டுமா? உன்னை இப்படிப் பார்க்கும்பொழுது என க்கு விசனமாயிருக்கிறதேடி! சொல்லேன்! என்ன சொன்ன லுங் கேட்கின்றேன்.

சண்டி:—ஆ ஆ! சொல்லி ஒருகூடை! சொல் ல்லாத ஒரு கூடை! (மறுபுறம் திரும்பிக்கொண்டு, தலையையடித்துக்கொண்டு) ஐயோ! போயிட்டேன்! போயிட்டேன்!! போயிட்டேன்!!!

ஜய:—இல்லையடி! நீ என்ன கட்டளையிட்டாலும செய் கிறேனடி! சத்தியம்! இப்பொழுதாவது என்னைவருத்தா மற் சொல்லேன்!

சண்டி:—உங்களுக்குச் சத்தியம் ஒருகேடு! அதிலே குறைச்சலில்லே!

ஜய:—இல்லையடி! தெய்வசாக்ஷியாய்ச்சொல்லுகிறேன்! என்னவேண்டுமானுலுஞ் செய்கிறேன்! சொல்லேண்டி!

சண்டி:—நிசந்தானு? தவறமாட்டேங்களே! தப்பினு, எம்மேலே ஆணையிருக்கிது!

ஜய:—ஆம்! நிச்சயந்தான்! சொல்லு!

சண்டி:—பின்னே தவறமாட்டீங்களே!

ஜய:—ஒருபோதுந் தவறேன்! சொல்!

சண்டி:—அப்படியானு, நீங்க கூட்டி வந்திருக்கைங்களே அந்த ஆளை யிங்கே யிங்கட்டமொறையா கட்டிக்கொண்டு

வந்து அவனைக்கொன்று அவன் கொடலிலிருக்கிற ரத்தத்தை யெடுத்து என்தலைக்குப் பத்துப்போடவேண்டும்! என்ன? சேயரீங்களா? உயிரை இப்பவே ஒங்க முன்னே விட்டுடட்டுமா?

ஜய:—ஐயோ! பாவம்! அந்தப் பரதேசியின் இரத்தமென்னத்துக்கடி! ஆ! அவனையா கொல்லுகிறது? அவனுக்கு நம்குழந்தையைக்கூட மணஞ்செய்து கொடுக்கலாமென்று உன்னிடஞ் சொல்ல வந்தேனடி!

சண்டி:—(ஆன்மகதமாய்) சரி! இவருமந்தப் படுநீலிக்கு உடன்பட்டாரா! நல்லவேலைசெய்தாள்! இனி அவனைக் கட்டாயமாய்க் கொல்லத்தான்வேண்டும்! (பிரகாசமாய்) இப்பொழுது என்னுயிர்வேண்டுமோ? அவனுயிர்வேண்டுமோ? ஐயோ செத்தேன்! செத்தேன்! தலையை இடிச்சிக்கிட்டுப்போகுதே! பட்டணத்து மனுஷன் யாராவது இங்கேவந்தா என்தலை சுக்கச் சுக்கலாய் உடைச்சிக்கிட்டுபோகுமென்று அந்த ஜோசியன் அப்பவே சொன்னானே! ஐயோ! அது சரியாப்போச்சே! அடா பாவி! நீ என்னைக்கொல்லுதற்காகவாடா காத்துக்கொண்டிருந்தாய்? ஐயோ! பூட்டேன்! பூட்டேன்!

ஜய:—இல்லையடி! பொறுத்துக்கொள்! வேண்டுமாயின் அவனை எங்கேயாகிலுந் துரத்திவிட்டு வருகிறேன்!

சண்டி:—ஐயோ! அப்படி'சேஞ்சா போதாதே! அவன். குடலின் ரத்தம் வந்தால்தானே பிழைப்பேன். என் உயிர் வேணுமானா, அவன் ரத்தத்தைக் கொண்டுவாங்கோ! ஆ ஆ! போயிட்டுது! போயிட்டுது!

ஜய:—என்னடி பிடிவாதஞ் செய்கின்றையே! அவ்வேழையைக் கொல்வதில் நமக்கென்ன பயன்?

சண்டி:—ஐயையோ! போயிட்டேன்! போயிட்டேன்!

ஜய:—வருந்தாதே யடி! இதோ கொண்டுவந்துவிட்டேன்! சற்றுப் பொறுத்துக்கொள்ளடி நான் கொண்டுவரேன்.

(சண்டி பரிக்கிரமித்துத் திரும்பிப் பேச வாயெடுத்தல்).

சண்டி:—ஐயோ! போங்க! சீக்கிரம்போய்க் கொண்டு வாங்க!

ஜய:—(ஆன்மகதமாய் நடந்து கொண்டே) ஐயோ! இணைறுவெட்! டப்போகப் பூதம் புறப்பட்டதுபோலாயிற்றே! நாம் அவ்வீரனுக்கு லீலாவதியை மணஞ் செய்விக்கச் சம்மதம் கேட்கப் போனால், அவள் அவன் உயிரையே வேண்டுமென்கிறாளே. இதற்கென்ன செய்வேன்? அவளோ நான் சொல்லுகிற பேச்சைக் கேளாமல் ஒரே பிடிவாதமாயிருக்கின்றாள்! அவனோ வெகு சாதுவாயிற்றே! அவனை எப்படி நான் கொல்லத்துணிவேன்?—ஐயோ நம்மிடத்திலிருக்கும் சொத்துக்கள் இன்னும் நூறு தலைமுறைக்குப் போதுமே! அவையெல்லாம் லீலாவதிக்கும் அம்மகா வீரனுக்குங்கொடுத்து அவர்கள்கூடிச் சுகித்திருப்பதைப் பார்த்து, நாமும் சந்தோஷித்திருக்கலாமென்றிருந்தால், இவள் ஒருத்தி அவனுக்கு நடுவில் நமனாய் வாய்த்தாளே! ஹா தெய்வமே!

* "துன்மனப் பார்ப்பார் தங்களைப் படைத்துக்
காகத்தை யென்செயப் படைத்தாய்
துன்மதி வணிகர் தங்களைப் படைத்துச்
சோரரை யென்செயப் படைத்தாய்?
வன்மன வடுகர் தங்களைப் படைத்து
வானர மென்செயப் படைத்தாய்?
நன்மனை தோறும் பெண்களைப் படைத்து
நமனையென் செயப்படைத் தனையோ?" (௪)

அடி சண்டிகா! உனதுகுணத்தை முன்னரே யறிந்துதானோ பெரியோர்கள் உனக்கும் பெயர்வைத்தனர்? ஐயோ! நான் புருஷனாயும் இப்பிில்லர்களுக்கெல்லா மரசனாயுமிருந்தென்ன? இச்சண்டிக்கு நான் அடிமையாயிருக்கின்றேனே! ஐயோ

* விவேக சிந்தாமணி.

அம்மகாவீரனை எப்படி நான் சொல்வது? சரி அப்புறப்போய் யோசிப்போம்! (நிஷ்கிரமித்தல்)

சண்டி.:—(சயபாலன் துரே போமிறவரைக்கும் பேசாதிருந்து, பின்பு போர்வையெல்லாந்தள்ளிவிட்டு ஒருப் பெருநகை நகைத்து எழுந்து) நான்பிடித்த பிடியுந்தோத்துப்போவுதா! அவனைக் கொன்று ரத்தத்தை கொண்டாராத போகட்டும் பாத்துக்கிறேன்! அந்தத் திர்ச் சோழில் பெண்ணு சேராளோ போய்ப்பார்ப்போம்!

(நிஷ்கிரமித்தல்).

---

## மூன்றாங் களம்.

இடம்.—ஜயபாலன் தகைக்கருகில் ஒரு பூந்தோட்டம்.

(போஜன் சாமாவஸ்தையுடன் தனியாய்ப் பிரவேசித்தல்.)

**போஜன்:**—ஆ ஆ! மின்னற் கொடிபோன்ற அப்பெண் மணியை யான் கண்டது முதல் என்மனது அவளுக்கு அடிமையாய் விட்டதே! ஆ! பெண்ணரசே!

*"தனக்குறுந் தமக்குறுதான்
றன்னைகாத் தரிதிற் கொள்ளும்
வனக்குறும் பதற்கு வாகைக்
குறுவனே மயிலே மானே!
எனக்குறு மென்று காத்த
வென்னைவிட் டுன்பால் வந்தா
லுனக்குறு மென்று நீயென்
னுள்ளத்தைக் கொள்ள லென்னே:" (௫)

ஆ சாருலோசனு! உன் சுந்தரமான பார்வை யின்னுமென மனத்தினின்றும் நீங்கவில்லையே! ஆ என்மனோரஞ்சிதமே!

---

* அரிச்சந்திர புராணம்

உனது மாசற்றவடிவைக்கண்டுதான் இச்சந்திரன் நாணமுற்றுத் தன் கிரணங்களை யெல்லாம் மறைத்து நாளுக்கு நாள் தேய்ந்து குறைந்து நலிந்திடுகின்றனனோ? ஆ! மிருது மதுரபாஷிணீ! உனது வசனாமிருதத்தையுண்டுதான் இக்குயில்கள் அச்சங் கொள்ளுகின்றனவோ? ஆ மந்தகமனா! உன் நடையைக்கண்டு தான் இவ்வன்னமும் மயிலும் அயர்ச்சி கொள்ளுகின்றனவோ! ஆ தங்வங்கீ! உன்னை மணப்பவன் சுகிருதமே சுகிருதம்!

* "அறந்திகழ் தவமு மகிலமு மிதனு
லழியுமென் றயன்படைத் திலனோ?
சிறந்தவேல் விழியை முன்படைத் தயர்ந்து
செங்கரஞ் சோர்ந்ததோ? திகைத்து
மறந்ததோ? கரந்து வைத்ததோ? களப
வனமுலைப் பொறைசுமந் துருகி
இறந்ததோ? உளதோ வில்லையோ? இனிமே
லெய்துமோ வன்னவ ளிடைதான்!" (சு)

(வலதுபுசந்துடிக்க) ஆ! இஃதென்ன? இருந்தாற்போலிருந்து எனது வலதுகை துடிக்கின்றது? இம்மந்தபாக்கியனுக்கு மம் மாதரசி கிடைப்பளோ? ஆ ஆ! அப்பெண்மணியை இன்னொரு தரங்காண்பேனோ? இப்போது வேதனை செய்யுங் காமாக்கினியை யான் எப்படித்தணிப்பேன்? ஏ மதனா!

* 'உன்னைக்கொன்றன் றுருவிலி யாக்கினோன்
றன்னைக்கொல்லுவ தாண்மைத் தனமலால்
பின்னைக் கொல்வதென்? பேதைய னாகிய
என்னைக் கொல்லுவ தேழைமைப் பாலதே!"(எ)

* அரிச்சந்திர புராணம்.

ஹா! இதென்ன என் தேகத்தை யெல்லாஞ் செந்தழலில் வைத்துக் கொளுத்துவது போலிருக்கின்றதே! (மேல் நோக்கி) ஹே சந்திரா! நீயுமரூபியாகிய அப்பாதகனுக்கு உறவாகினையோ?

* "சுடர்கான் றெழுந்த வெண்டிங்கா
ளென்னே சுடுதி யாரமுதத்
துடனீ பிறந்த பாற்கடலின்
றன்மை யுணரா யாகுலும்,
மடலார் கமலப் பொகுட்டுறையும்
புத்தேள் காணு மறைக்கொழுந்தின்
படர்வார் சடையில் வீற்றிருக்கும்
பான்மை யேனு மறிந்திலையே?" (அ)

ஈசா! இத்தனை நாள்வரையிலுங் காமநோய்க்குட்படாமற் கடினமாயிருந்த என் சித்தத்தை இன்றிப்படிக் கருகி யுருகி வாடும்படி செய்விப்பது நின்கருணைவிலாசமோ? ஐயோ! மூன்றுநாளாய் நித்திரையில்லாமையினால் தடுக்கக்கூடாத துயிலென்னைப் பாதிக்கின்றதே! இதோ இவ்வசோக மரத்தடியிற்படுப்போம்! (அவ்விடஞ்சென்று படுத்துக்கொண்டு) ஓ மாதரசே! யான் இங்கு தனியாய்ப் பரிதாபப்படுவதை நீ யறியாயோ?

(க) இராகம் - கீரவாணி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

சுரலோகமோகன - சுந்தரகாத்ரீ
விரகதாபமாகி - வெந்தேன் நான் ஐயோ!

சரணங்கள்.

மாதர்க்கரசியே - மையல் கொண்டுன்மீது
மதிநானிழந்தேனே!— விரகதாபமாகி.
தந்தை எனக்கில்லை - தாயுமெனக்கில்லை
சுந்தரியுனைவிட்டால்!— விரகதாபமாகி.

* நைடதம்.

(பாடிக்கொண்டே நித்திரைபோதல்.)

(காமமயமானாவஸ்தையுடன் பரபரப்பாய் லீலாவதி பிரவேசித்தல்.)

**லீலாவதி** :—(ஆன்மகதமாய்) ஆஹா! அம்மகாபுருஷனுடைய ஸௌந்தரிய லஹரியானது என்னையடித்துக்கொண்டு அவரிடமிழுத்துச் செல்கின்றதே! (பாடுதல்)

(உ) இராகம் - காபி - தாளம் - ஏகதாளம்.

கண்ணிகள்.

சந்திரனோ இவன்? இந்திரனோ? புகழ்ச்
சுந்தரனிவன் யாரோ? (க)

தந்திரமின்றியென் னந்தரங்கத்தினை
வந்திவன்கொள்ளை கொண்டான்! (உ)

மன்மதனோ? மயில்வாகனனோ இவன்?
மன்னவனோ அறியேன்! (௩)

கண்டது மென்மனங் காதலிவன்மீது
கொண்டதே என்செய்வேன்? (௪)

(யோசித்து) ஐயோ! அவள் சொல்லியவார்த்தை பஞ்சுமலைமேல் நெருப்பிடி விழுந்ததுபோலிருக்கின்றதே! என்னுடைய தொலைந்ததன்றியுமென் பிராணநாதனாகிய அம்மகாபுருஷனுடைய உயிர்க்கே ஹானி வந்துவிட்டதே!

அன்னையில்லையாம்! அத்தனுமில்லையாம்!
பின்னையிப்படும் பில்லருமில்லையாம்!
இன்னுமென்னுயி ரெய்தினுமில்லையாம்!
உன்னி நாடிய உத்தமன் மாய்ந்திடில்! (௫)

ஐயோ! அவர் பிராணனுக்கு அபாயம் நேரிடில் ஓட்டைக் குடத்து ஜலம்போல் என் பிராணனும் போய்விடுமன்றோ? என்செய்வேன்? எப்படி யவரை இத்தருணம் இப்பாவிகள் கையினின்றும் இரக்ஷிப்பேன்? என் தந்தையே அவரை

எனக்குப்பதியாய் உத்தேசித்ததுமன்றி என்மனமு மவருடன் சென்றுவிட்டபடியால், அவரே எனக்குப் பர்த்தாவாகி விட்டனர்! இனி அவருடைய சுகதுக்கங்களெல்லா மென்னுடையவன்றோ? ஆ! என்னன்பன் யாரோ? யானோ அவர் மீது காதல்கொண்டிருக்கின்றேன்! அவர் என்மீது காதல் கொள்வாரோ இல்லையோ அறியேன். எதற்கும் இப்பொழுது அவரது பிராணனை இக்கொடியவர்கள் கையினின்றும் காப்பாற்றவேண்டியது என் கடமை! பிறகு பிராப்தியிருந்தால் அவரை மணம்புரிவேன்! நல்லது, நாம் கொடுத்த வெகுமதியை அவர் அங்கீகரியாததற்குக் காரணம் யாதோ? எதற்கும் அவர் இருக்குமிடத்திற்குச் செல்வோம். என்னன்பன் எங்குச் சென்றனனோ? (நான்கடி பரிக்கிரமித்து) என்னாசையை நிறைவேற்றுமல் என்னைக் கைவிடுவரோ? சீ! அப்படித் தோன்றவில்லை. அவர் ஒருபொழுதுமப்படிச்செய்யார்! எப்படியிருப்பினும் முன்னம் அவரைக்காப்பாற்றுவதே எனது முக்கியமான கடமை. (சிறிது தூரஞ் சென்று) அவர் இத்தோட்டத்திற்குட் சென்றதாகவல்லவோ நம் கரவதனை சொல்லினள். எங்கே காணேமே! (நோக்கி) இதோ யாரோவொருவர் இவ்வசோக மரத்தடியிற் படுத்துறங்குவதுபோற் றோற்றுகின்றது. (சமீபஞ்சென்று உற்றுநோக்கிப்பாடுதல்.)

(க) இராகம் - பியாக்கு - தாளம் - ஆதி.

பல்லவி.

அஹஹோ! இவர்தாம் - அந்தப் பிரதான்?
ஆஹ்லாத கரனை - பார்வண பூர்ணமதியோ?
அல்லதோ - ரவனிபதியோ? — (அஹஹோ)

அநுபல்லவி,

மன்மத - மாரகனோ
மஹிளாஜன - மனோரஞ்ஜன
மர்மபஞ்ஜன - மதனோ! — (அஹஹோ)

சரணம்.

தேவாதி - தேவனே !
தீனசரண்ய - தீராக்ரகண்ய
தேவேந் - திரனே !— (அஹஹா)

ஆகா! என்னன்பனே இங்குப் படுத்துறங்குகின்றார். அம்மா! இவருடைய சுந்தரமான ரூபமே ரூபம்! இவரை மணப்பவ ளின் பாக்கியமே பாக்கியம்! (பாடுதல்)

(௭) இராகம் - கமாஸ். தாளம் - ஏகதாளம்.

பல்லவி.

மன்மதனே - வடிவங்கொண்டிங்கு
வன்மையாலெனை - மயக்குகின்றானே!

அநுபல்லவி.

அன்பனேயுன்மீது - ஆசைகொண்டேனே
இன்பந்தந்திப்போ - தெழுந்தென்னைப்பாரீர்— மன்ம.

சரணங்கள்.

நாதா! நாமிருவரும் - நாரணி நாபர்போல்
மாதவந்தன்னில் - மகிழ்வோம் வாரீர் !— மன்ம.
ரதியுமதனும் - ரமித்திருப்பதுபோல்
சதியும் பதியுமாய்த் - தழுவுவோம் வாரீர் !— மன்ம.

போஜன் :—(தூக்கத்திலிருந்து கானத்தைக் கேட்டு விழித்துக்கொண்டு) ஆ ஆ! இஃதென்ன கானம்! என் காதலியின் இனியசொல் போல் என் மனத்தைப்பரவசப்படுத்துகின்றதே! என் காதற் கிளி லீலாவதிதான் இங்கு வந்தனளோ! (நோக்கி) ஆ மாதர்க் கரசே! இஃது உன் குரல்போலவே இன்பந்தந்ததே! உன் திருமுகத்தை எங்கும் காண்கிலேனே! (பாடுதல்.)

(௮) இராகம் - மத்தியமாவதி - தாளம் - அடதாளசாப்பு.

பல்லவி.

வாராயோ? வாராயோ?—வரானனே !
வாராயோ? வாராயோ?

அநுபல்லவி.

வாராயோ இங்கே நீ - வந்தென்னைக்காவாயோ?
பாராயோ என்முகம் - பார்த்தின்பந்தாராயோ? வாரா.

சரணம்.

நாயகி! மெய்மறந்தேன் - உன்னைக்கண்டு
மையலான் மிக்க நொந்தேன்

பேயனைப் போற்றவிக்கப் - பெருங்காட்டில்
யானிதற்கோ பிறந்தேன்!

மாயன் மன்மதன் விடும் - மலரம்பாலடிபட்டு
சாயும்படவுபோலும் - தழலின்மெழுகுபோலும்
காயும் புழுகுபோலும் - கலங்குங் காளைபோலும்
தீயும் பயிர்போலுந் - தியங்குகின்றேனந்தோ!

ஹா லீலாவதி! உன்னையும் யான் காணப்பெறுவேனோ? நின்கழுத்திலும் யான் மங்கலியம் பூண்பேனோ? நின் இனிய சொற்களையும் யான் கேட்பேனோ? எவ்விதத்தில் என் காதல் நிறைவேறப்போகின்றது?

லீலா:—(மறைந்துகொண்டு ஆன்மகதமாய்) நான் இவர்மீது காதல் கொண்டிருப்பது போலவே இவரும் என்மீது காதல்கொண்டிருக்கின்றனர்! இனியான் கொண்ட சங்கையுந்தொலைந்தது!

போஜ:—ஹா! பிரியே! லீலாவதீ! லீலாவதி!! (எழுந்து முற்றிலுந் தேடப்புகுதல்)

லீலா:—(ஆன்மகதமாய்) ஐயோ! என் காதலனுக்கு எவ்வளவு கஷ்டத்தையுண்டு பண்ணுகின்றேன்! மஹாபாகா? யான் கிடைப்பனோ இல்லையோவென்று உமது மனமெப்படிச் சஞ்சலப்படுகின்றதோ, அப்படியே என்மனமுமிதுகாறுஞ் சஞ்சலப்பட்டது. உம்முடைய திருநாமதேயத்தைக் கேட்டதும் இப்பேதையான என்னுடைய மனத்தில் ஒருவிதப் பிரேமாங்குரந்தோன்றிற்று. அது நேராய் உமது திருமுகத்தைக் கண்

டதும் சூரியபிம்பத்தைக் கண்டசெடிபோல் தழைதழைத்து, உமது பரமசோபனமான குணங்களாகிய தோகதத்தையுட் கொண்டு காதல் என்னும் ஓர் பெரிய விருக்ஷமாய் ஓங்கிவளர்ந் திருக்கின்றது ! நாதா ! நம்மிருவருடைய காதலின் பெருமை யை நம்மிருவருடைய இருதயமே அறியவல்லது !

போஜ:—ஆ ஆ ! இஃதென்ன கனவோ ? மயக்கமோ ? ஐயோ ! என் காதலியின் இனியகுரல் போலவேயிருந்ததே ! என்ன ஆச்சரியம் ! இங்கே ஒருவரையுங் காணேமே ! ஹா பிரியே !

மூர்த்திபெடுத்தப்ரஸாதம்போலே யுன்றன்
முகிலிசையொத்த மதுரசங்கீதம்
ஆர்த்தியைப்போக்கியிங் கானந்தங்கொடுத்ததே
ஆரணங்கே யுன்னைக்காண்கிலேனே யந்தோ! ()

சீ ! இவையெலாம் என் சித்தப்பிரமையே ! அப்பெண்ணரசி இங்கு வருவதெங்ஙனம் ? அவள் யாரிடத்திற் காதல்கொண் டிருக்கின்றனளோ ? மந்தபாக்கியனான எனக்கும் அம்மாது சிரோமணி கிடைப்பளோ ?—ஆ மனமே! ஏன் வீணெண்ணங் கொண்டனை ? முடவன் கொம்புத்தேனுக் காசைப்படுவது போற் கிடைப்பதற்கரிய விடத்திற் காதல் கொண்டாய் ! துர் லபம் ! துர்லபம் !!—ஆ ஆ ! அவ்வநிதாரத்தினத்தையோ யான் இச்சித்தேன் ! என்னாசைக் கோரளவில்லை. அத்திவ்ய சுந்தரியோ இவ்வேழையை மணப்பள் ? அசாத்தியம்! அசா த்தியம் !! அப்பெண்மணியும் இவ்வெளியவன்மீது காதல் கொள்வளோ?—அப்படித்தான் ஒருவேளை கொள்ளினும், யான் இவ்வேழைமையான நிலைமையிலிருக்கும்பொழுது, அம்மாதர சியை மணந்து கொள்ளவிச்சிப்பது நியாயமோ ? ஒருவிதகஷ் டமுமறியாத அல்லலநாமணியையும் யான்படும் இக்கஷ்டங் களுக்கெல்லாம் உட்படுத்துவது தருமமோ ? பாபம்! பாபம்! எனித்த வீண்யோசனை ?—அந்தோ ! எவ்வளவு திருடஞ்செ

ய்து கொண்டாலும் என் மனம், அவளது திவ்யசுந்தரமூர்த்தி யைவிட்டு அகலவில்லையே! அவள் அன்று போகும்பொழுது சொன்ன சொற்களும், பார்த்த பார்வையும், என்னை என்றும் நீங்காதவண்ணம் அவளிடத்திற் பரவசப்படும்படி செய்து விட்டனவே! அந்தோ! இம்மனம் இனி அம்மாதரசியைவிட்டு ஒரு கணமேனும் பிரிந்து நில்லாதுபோற் றோற்றுகின்றதே! இத்தர்மசங்கடத்திற்கு யான் என்செய்வேன்? விடவும் மன மில்லை: தொடவுந்திறமில்லை! ஐயோ! இதற்கு யான் என் செய்வேன்? மரணபாதையினும் மதனபாதை மிகக்கொடிய தென்பார்களே: அதை இன்றுதான் யான் அநுபவத்திற் கண்டறிந்தேன். எவ்விதத்தில் என் காதல் நிறைவேறப் போகின்றது!—ஹா லீலாவதி! லீலாவதி!! (மூர்ச்சித்து வீழ்தல்.)

லீலா:—ஹாதிக்! ஹாதிக்!! மந்தபாக்கியையான என் பெயரையே சொல்லிக்கொண்டு கஞ்ச மலர்போன்ற கமனீ யமான கண்களைமூடிக்கொண்டு களைத்து வீழ்ந்தனரோ என் காதலர்? (அருகிற்சென்று நோக்கி) ஐயோ! என் நாதர் என்ன உறங் குகின்றாரோ? அப்பாவிகள் வந்துவிட்டால் என்செய்வேன்? என் அன்பர் பிழைப்பதே அரிதாய்விடுமே. (இன்னு முற்று நோக்கி) ஐயோ! மூச்சுக்குரலையுங்காணோமே! என்செய்வேன்? அப்பாதர்கள் கொல்ல வருவதற்குமுன்னரே நானே இவரைக் கொன்றுவிட்டேனே! இச்சமயத்தில் அவர்களும் வந்துவிட் டால் என்ன செய்வேன்?

போஜன்:—(பூமியில் ஒருபுறம் புரண்டு) ஹா லீலாவதி! (மறுபடியும் களைத்துறங்கல்.)

லீலா:—தெய்வாதீனம் என் அன்பர் பிழைத்திருக்கின் றனர். ஆயினும் களைத்து நித்திரை செய்பவர்போலிருக்கின்ற னர். இவரைச்சீக்கிரத்தில் இவ்விடத்தினின்றும் வெளியிற் செல்லும்படி செய்யவேண்டுமே! என்ன செய்யலாம்? இவரைத் தட்டி எழுப்புவோமா? என்ன நினைப்பரோ? ஆயினும் அவர்

கள் வந்துவிட்டால் என்செய்கிறது? எப்படி நினைத்தாலும் நினைக்கட்டும்! (மிருதுவாய்ப் போசனைத்தட்டி எழுப்பிக்கொண்டு) என் நாதருடைய பிராணன் இப்பொழுதுதான் வருகின்றது!

போஜ:—(ஆனந்தத்துடன் லீலாவதியின் கரத்தைக் கட்டியாயப் பிடித்துக்கொண்டு) என் கண்மணீ! லீலாவதி!! (பாடுதல்.)

(௬) இராகம் - காபி - தாளம் - ஏகதாளம்.

பல்லவி.

உன்றன் ஹஸ்தஸ்பர்சத்திற்கு
உவமையுமுண்டோ!

அநுபல்லவி.

சுந்தராங்கி - சந்திரவதனே,
சுகமடைந்தேனே நான்!— உன்றன்.

சரணம்.

சந்தனரசமோ - சஞ்சீவியோ!
சந்திரகலையிற் - சனிக்குமமுதோ!
வெந்த வென்னிதய - விருக்ஷசேகமோ
என்றன் மனமும் - இன்பங்கொள்கின்றதே!— உன்றன்.

லீலா:—(இலச்சையுடன்) மகாபாகா! யான் யாரென்றறிவீரோ? இவ்விடத்திற் றங்கள் இன்னும் சற்றுநேரமிருப்பின் பிராணனுக்கே அபாயம் நேரிடும். தாமதஞ் செய்யாமல் இக்ஷணமே எழுந்து எங்கேயாயினுஞ்சென்று உயிரைக்காப்பாற்றிக்கொள்ளும். (பாடுதல்)

(௭) இராகம்-கமாஸ்: தாளம்-ஏகதாளம்.

பல்லவி.

சிறந்தோய்! சென்றிடுஞ் சென்றிடும்
செவ்வேளே! ,, ,,
சீக்கிரமாய்ச் ,, ,,
செகன்-மோகன-மாரா! சுகு மாரா!

அநுபல்லவி.

தருணி - ஹ்ருதய - நளிந - தபந !
 தாமதஞ் செய்யாதீர்!— (ஜ.)

சரணம்.

கொடியகொலையும் புரிவரிவர்கள்
 கோரமாங் கிராதர்கள்—
நொடியிலுமது மெலியவுயிரை
 நோகவே நொடிப்பர்கள் !— (ஜ.)

போஜ:—பிரியே! இஃதென்ன விந்தை? இதற்கோ என்னை மூர்ச்சையினின்றும் விழிக்கச்செய்தனை ? ஆ ஆ! உனது ஹஸ்தம் தாமரைமலரினும் மிருதுவாயிருக்க, உன்னிருதயம் மாத்திரமேனோ வஜ்ஜிரத்தினுங் கடினமாயிருக்கின்றதே !

லீலா :—மஹாபாகா ! என் தாய் தந்தையர் உம்மை இப்பொழுது கொல்லவரப்போகின்றனர் ! சீக்கிரம் தப்பித்துக் கொண்டு செல்லும் !

போஜ :—சுந்தரீ ! உண்மையாய்என்மனத்தைச் சோதிக்கின்றனையேயன்றி வேறன்று ! எனக்கு அவ்வளவு மரியாதை செய்த உன் தாய்தந்தையரோ என்னைக்கொல்லுவர்? யானிதை ஒருபோதும் நம்பேன் !

லீலா :—மஹாபாகா ! நீர் இவர்களது சுவபாவத்தை யறிந்தவரல்லர்! இப்பில்லர்கள் பாவபுண்ணியங்களுக் கஞ்சார்கள்! யான் உமது நன்மையை நாடி எப்படியாயினுமும்மை இப்பாவிகள் கையினின்றும் காப்பாற்றவேண்டுமென்றுஓடிவந்தேன். என் தந்தையார் மிகவும் நல்லவரே! ஆயினும் மிக்க கொடியவளான என் தாயின்சொல்லுக்குப் பத்தப்பட்டு உம்மைக்கொல்லுவதாக ஒத்துக்கொண்டனர். அதையறிந்து யானிங்கு ஓடிவந்தேன். ஆகலின் தாங்கள் இதைவிட்டுச் சீக்கிரஞ்சென்றால் தான் பிழைக்கலாம்.

**போஜ :**—என் மனோரஞ்சிதமே! உன்னைவிட்டு யான் எப்படிப்பிரிவேன்? உன்னைக்காணாதிருப்பதைவிட இப்படிக் கொலையுண்டிறப்பேன்!

**லீலா :**—நாதா! தாங்கள் என் மனத்தையறியாமல் இப்படிச் சொல்வதும் நியாயமோ? (பாடுதல்.)

(அ) இராகம் - சுருட்டி - தாளம் - ஏகதாளம்

கனவிலுமுனைவிட்டுக் - காதலனே
கணமும் பிரிவேனோ?

**போஜ :**—பிரியே! என்னுயிர் போவதற்குமுன் யானுன்னைப்பிரியவல்லனோ? (பாடுதல்.)

கனவிலுமுனைவிட்டுக் - காதலியே!
கணமும் பிரிவேனோ?

**லீலா :**—(பாடுதல்.)

தாம் பிழைத்திருந்தால்தான் - தங்குமென் பிராணனும்
காம்பறுந்தமலர் - கருகாதிருக்குமோ?
ஆம்பல் முகத்தோனே! - அழுகாதிருக்குமோ!— கன.

**போஜ :**—(பாடுதல்.)

பாம்பு கடித்துமே - பலர் பிழைத்ததுண்டே
சாம்பனருளிருப்பின் - சாகேனொருபோதும்,
தாம்பையறவென்று - தயங்கேனொருபோதும்— கன.

**லீலா :**—(பாடுதல்.)

இந்துவைக்குவலயம் - இரவியைச் சக்கிரவாகம்
தந்தியை வீணையும் - தனித்திருக்குமோ சொல்வீர்?
சுந்தரா நினையன்றிச் - சுகித்திருப்பேனோ சொல்வீர்? கன.

**போஜ :**—(பாடுதல்).

சுந்தரியே! நீ சொல் - சோபன வார்த்தையை
அந்தரங்கத்தில் யான் - அறிந்தவனாயினும்
உன்றன் தர்சனமின்றேல் - உயிர்த்திருப்பனோவினும்? கன.

லீலா :—(பாடுதல்.)

ஆருயிர் நேசனே - ஆசைமணாளனே !
மாரசுந்தரனேயென் - மனத்தையறிந்திடும்
வீரனே இதைவிட்டு - வேறிடஞ்சென்றிடும் ! கன.

போஜ :—(பாடுதல்.)

ஆரணங்கேயுன்றன் - ஆனனங்கண்டு யான்
மாரனம்பு பட்டு - மரிப்பது ந்யாயமோ
சாரசலோசனா - சாற்றுவாய் மாயமோ ! கன.

லீலா :—ஹா ! பிராணநாதா ! நீர் என் மனத்தையறிந்தும் இப்படித் தாமதஞ்செய்வது அழகோ ? சீக்கிரம் வந்தவழியை விட்டு வேறுமார்க்கமாய்ச் செல்லுவீர்.

போஜ :—பிரியே ! இதற்கு வேறு பரிகாரமில்லையோ ?

லீலா :—பிராணநாதா ! அவர்கள் படுங்கொலைக்கஞ்சாப் பாதகர்கள். தாமதஞ்செய்யவேண்டாம் ! சீக்கிரம் இவ்விடத்தை விட்டுச் செல்வீர்.

போஜ :—ஆ ! என்னுயிர்த்தலைவி ! உன்னைக்காணாத என் மனம் மழை காணாப்பயிர்போல் ஒவ்வொரு க்ஷணமும் வதங்கி வாடுமே !

மயங்கினேன் வருந்தி னேன்யான்
வாடினேன் மதன னம்பால்
தியங்கினேன் வளர்ந்த காதற்
றீயினாற் செயலற் றாவி
தயங்கினேன் தீரா மோகத்
தாபத்தாற் றளர்ந்து மேன்மேல்
தியங்கினே னுருகி யுன்றன்
திருவத னத்தைக் கண்டே ! (கக)

இவ்விடத்தினின்றுஞ் சென்று எப்படி யான் உன் சுந்தரமான வதனத்தைப்பாராமல் ஜீவித்திருப்பேன் ?

லீலா :—பிராணநாதா! தாமிப்படி வருந்தித் தாமதஞ் செய்துகொண்டிருந்தால் நம்மிருவரது உயிர்களுக்கும் நாசம் நேரிடுமே! தாமெப்படியாயினும் இக்கொடியவர் கையினின் றும் இக்ஷணம் தப்பிப்பிழைப்பீராயின், ஒருவேளை நாம் தெய் வானுகூலத்தாற் சேரலாமே! இனிப் பேதையான யான் தமக் கென்ன சொல்லப்போகின்றேன்?

போஜ் :—என் பிராணநாயகி! நீ உரைப்பதெல்லாம் வாஸ்தவமே! நீ செய்யும் இப்பேருதவிக்கு யானென்ன பிரதி செய்யப்போகின்றேன்!

லீலா :—(கண்ணீர் சொரிய) பிராணநாதா! எப்போது மென்னை மறவாதிருப்பீராயின், அதைக்காட்டிலும் சிறந்த உப காரம் வேறொன்றுமில்லை. அபலையான யான் இனித் தமக்குச் சொல்லவேண்டியதென்ன இருக்கின்றது? (பாடுதல்)

(க) இராகம் - பிபாக்கு - தாளம் - ஆதிதாளம்.

பல்லவி.

ஹரனே! - மறவாதேயும் - மனோ

அநுபல்லவி

வீரனே யுனைநான் - விட்டிருப்பின்,
மாரனென் பிராணனை - மாய்த்திடுவன்!— ஹரனே.

சரணம்.

ஏழையைமறவாதீர் – எப்போதும்!
வாழச்செய்வீ ரென்னை – மனோஹரனே!— ஹரனே.

போஜ :—(பலைக்தோஷ ஸம்பிரமத்துடன்) பிராணப்பிரியே! உன்னையும் மறப்பேனோ! என் ஜீவிதாதாரமே! வெகு சீக்கிரத் திலேயே கருணாநிதியான கடவுள் நம்மைச் சேர்த்து வைப் பார்! (ஒரு முத்தம் கொடுத்து) என் கண்மணீ! இம்மோதிரம் உனது மெல்லியமாந்தளிர்போன்ற கரத்தில் ஞாபகமாயிருக் கட்டும் (தன்கரத்திலிருந்த மோதிரத்தை லீலாவதியின் விரலிலணிந்து) பிரியே! யான் போய்வருகின்றேன்.

**லீலா:**—(கண்ணீர்சொரிய) பிராணேசுவரா! உம்மைவிட்டு யான் எப்படிப்பிரிந்திருப்பேன்? ஐயோ! என்ன ஈர இரக்கமில்லாத நெஞ்சுடையவளாயினேன்! (மூர்ச்சித்துவீழப் போசன்பிடித்துக்கொள்ளல்) நாதா! இவ்வேழையைத் தாம் கைவிடலாகாது. (பாடுதல்)

(௬௦) இராகம் - தோடி - தாளம் - ரூபகம்.

பல்லவி

சேரவென்னைத் திரும்பவும்வீரா!
திருவுளஞ் செயுந்தீரா!

அநுபல்லவி.

உருகியுருகி உன்னைக்கண்டுக்
கரையலாகினேன்
அருகியன்புடன் - அடையவென்னைக்
கருணைசெய்குவாய்! — சேர.

சரணம்.

உனதுவதன கமலந்தன்னை
மனதில்வைத்தே நான்
தினமுந் தினமுந் தேடியுன்னைக்
கனவுகாண்பனே!— சேர.

**போஜ:**— என் உயிர்க்காதலீ! உன்னையும் யான் மறந்துவிட்டுப் பிழைத்திருப்பேனோ?

கண்மணியே! ஆணிப்பொன்மணியே! என்றன்
கண்ணுளிருக்குங் கருமணியே!
பெண்மணியே! என்றனவமணியே! உனக்
கெம்மணியும் நிகராகுமோடி! (௬௨)

(லீலாவதியை யணைந்துகொண்டு) ஆ! என்மனோநாயகீ! சகல சாம்ராஜ்யங் கிடைப்பதாயிருப்பினும், அவையெல்லாம் உனது திருமுகத்தின் தர்சனம் இல்லாவிடில் எனக்கொரு பெருமையாகா

(௧௧) இராகம் - செஞ்சுருட்டி - தாளம் - ஆதி.

பல்லவி

தருணியேயுனை நான் - தர்சிக்காமல்
தரிப்பேனோ வென்றன் - தனுவையில் லகில்!

அநுபல்லவி

புத்தியும் மனமும் - பொருந்தின துன்னிடம்
சத்தியஞ்சொன்னேன் - சடலந்தானென்னிடம்!— தரு.

சரணங்கள்

மூவ்வுலகத்தையும் - முழுதுமளித்தாலும்
இவ்விடம் விட்டென்று - மிருக்காதென்றன்மனம்!—தரு.

பண்ணவன் கருணையால் - பஹு சீக்கிரத்திலே
உன்னைமணந்து யான் - உயர்நலம் பெறுவேன்!— தரு.

என் கண்மணீ! நீ விசனப்படாதே! யான் போய்வர விடையளிப்பாய்! (லீலாவதிக்கு ஒருமுத்தங்கொடுத்து நிஷ்கிரமித்தல்)

லீலா:—(கண்ணுக்குத் தெரிந்தமட்டும் போசன் போவதைப் பார்த்துக் கொண்டிருந்து) ஐயோ! இனி எப்பொழுதென்னன்பனைக் காண்பேன்? அந்தோ! எனது தௌர்ப்பாக்கியத்திற்கும் புத்தியில்லாமைக்கு மளவேது? பௌர்ணமி சந்திரனைக் கார்மேகங்கள் மறைத்தாற்போல் என் கண்கள் முன்தோன்றிய அச்சுந்தரமுகத்தோனை எனது துஷ்கர்மங்களே க்ஷணத்தில் பிரியும்படி செய்தனவே! ஹா! ஹா! (பாடுதல்.)

(௧௨) இராகம் - ஆநந்தபைரவி - தாளம் - ஏகதாளம்.

பல்லவி.

எங்கேயாகிலுமுண்டோ - என்னினுங்கொடியவள்?

அநுபல்லவி.

சிங்காரனுன வென்றன் - சீமானைப்பிரிந்தின்னும்
மங்கைநான் தரணியில் - மரிக்காமலிருப்பேனோ!—எங்கே.

சரணங்கள்.

அப்போதே யென்னன்பன் - ஆரென்றுங்கேட்டிலேன்!
எப்படி நானிங்கே - யிருப்பேனோ அறியேன்!—எங்கே.

பாவி நான்பேசிய - பருஷவார்த்தையைக்கேட்டு
ஆவிகலங்கி யென்ற - னன்பனெங்குற்றனோ?—எங்கே.

ஆகா! இப்படி என்னைப்போல் இரக்கமில்லாதவள் இப்பூதலத்தில் வேறொருத்தி யிருப்பளென்று யான் நினைக்கிலேன். ஐயோ தனது அங்கசௌந்திரியத்தினால் மன்மதனையுமநங்கனாக்கி யென் மனத்தையுங்கொள்ளைகொண்ட என்னுடைய நாயகனை விட்டுப்பிரியும்படி நேர்ந்த துக்கத்தை யான் எவ்வாறு சகிப்பேன்? அவரது அழகைக் கண்குளிரப்பாராமலும், அவரது வாக்கியாமிருதத்தைக் கர்ணபுடத்தாலருந்தி ஆனந்திக்காமலும் எப்படி யான் உயிர்த்திருப்பேன்? ஐயோ! நான் சொல்லிய கடினோக்தியைக்கேட்டு அவர்மனம் எவ்வளவு பரிதபித்ததோ? கையிற்கிடைத்த அமிருதத்தைப் பானம்பண்ணமல்விட்ட மூடர்போல் அத்திவ்ய சுந்தர மன்மதனைப் பின்தொடர்ந்து சுகத்தையனுபவியாத என்னைப்போன்ற பேதையரும் இவ்வுலகிலிருப்பரோ? அவருடன்கூடவே செல்லாமலிருந்த என் புத்திஹீனத்தை யானென்னென்று சொல்லுவேன்? அம்மஹானுபாவன் எந்தப்பட்டணத்தை அலங்கரிக்கப் போகின்றனோ? எந்தப் பெண்மணியின் பாக்கியம் அவரைப்பதியாய்ப் பெறச்செய்யுமோ? அல்லது பெறச்செய்ததோ? ஐயோ! அவர் இன்னாரென்றுகூட யான் தெரிந்துகொள்ளாமற் போனேனே! பெண்புத்தி பின்புத்தி என்பது உண்மையே!—(சற்று சோகித்து) அந்தோ இவ்வுத்தியான வனத்தில் என்னாற்போஷிக்கப்பட்டு இதுவரையிலுமெனக்கு உல்லாசத்தைக் கொடுத்த இம்மிருகங்களும் பறவைகளுமே என் பிராணனை வதைக்கத்தலைப்பட்டனவே! (பாடுதல்.)

(கக) இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

என்னவிந்தையோ? அறியேன்
முன்னவனே நான்!

அநுபல்லவி.

என்னவிந்தையோ இது?
மன்னவன் மறைந்ததும்
நன்னிலம் நரகாயிற்றே!— முன்னவனே நான்.

சரணங்கள்.

மல்லிகை முல்லையும்
சல்லியமாயிற்றே
அல்லியுமறவாயிற்றே!— முன்னவனே நான்.

வீரணம் மாரணம்
சாரசம் கோரசம்
ஆரம்பாரமுமாயிற்றே!— முன்னவனே நான்.

அந்தோ! என்றும் காணாத ஒரு தாபம் மனத்திற்றோற்றுகின்றதே! இதை எப்படியான் தணிப்பேன்? என்னுயிர் அவரிடத்தே சென்றுவிட்டதே! இன்னுமிக்கட்டையேன் பற்றி எரிகின்றது? (மேல் நோக்கி) ஏ சந்திரா! நீயும் என்னைவதைக்கத் தலைப்பட்டனையோ?

* "உருவக் காமன் றுணித்த வுடறனைச்
செருவிற் கொல்ல வெழுந்தவெண் டிங்களே!
ஒருவற் கீவதங் கோருயி ரன்றியெற்
கிருவர்க் கீய விரண்டுயி ரில்லையே!" (கஉ)

* அரிச்சந்திர புராணம்

அந்தோ! இஃதென்ன! இவ்வழகிய தாமரைத்தடத்தருகிற் கூட அனற்காற்று வீசுகின்றதே? (ஸ்பர்ச துக்கத்தை அபிநயித்து) ஆ! இளந்தென்றலே! நீயோ இப்படி என்னைக்கொளுத்துகின்றாய்!

"கொல்லா நோன்பு முனிமலையிற்
றோன்றி யென்னைக் கொல்கின்றாய்,
பொல்லா மந்த மாருதமே
யென்னோ கருணை பூண்டிலாய்,
சொல்லாய் திருப்பாற் கடலினிடைத்
தோன்றுங் கடுவிற் றன்குணமே,
யல்லா லமுத குணமுண்டோ
நின்னை வெறுப்ப தறிவன்றே!" (௧௩)

ஈசா! என் விசனத்தை யான் எவரிடஞ் சொல்வேன்? நான் வசிப்பதோ அரண்ணியம்! என் தோழிமார்களோ கொலைக் கஞ்சார்கள்! என் தந்தையாரோ சோராக்கிரகண்ணியர்! என் தாயின்குணதிசங்களையோ யான் வர்ணிக்கவேண்டியதில்லை. தாடகை சூர்ப்பணகைகளுக்கு இவள் தாயோ, அல்லது அவர்கள் இவளுக்குத்தாய் மார்களோ அறியேன்! இந்நிலையில் என் தாபம் நிவாரணமாகி, என் கோரிக்கை யெப்படி நிறைவேறப் போகின்றது?—ஆஹா மறந்தேன் இலங்கையிற் சீதாதேவிக்கு மோதிரம் கிடைத்ததுபோல் இக்காட்டில் விரகதாபத்தினால் வருந்துமெனக்குக்கொடுத்த என்னுசை மணவாளர்தம் கணையாழியை! (நோக்கி) ஆ ஆ! இது சாதாரணமானவர் போட்டுக்கொள்ளும் மோதிரமன்று. இஃது ஏதோ*ராஜர்கள் தரிக்கத்தகுந்த கணையாழியே! (உற்று நோக்கி) ஆ ஆ! இஃதென்ன! இதிலென்னவோ எழுதியிருக்கின்றதே. "போஜன்"! என்ன! நம்பிதா சொல்லிய அத்தாரா ராஜ்ஜியத்துக்குரியவனான அவ்விராஜ குமாரனோ? ஆ ஆ! அவரை அவன் சிற்றப்பன்

* பிரபுலிங்கலீலை.

கொன்றுவிட்டதாகச் சொன்னரே! இவரது கையில் அவரது மோதிரம் எப்படி வந்திருக்கும்? ஒருவேளை இவர்தாம் அவ் விராஜ குமாரரோ? ஆம்! இல்லாவிடில் இவருக்கு இவ்வளவு தைன்னியமும் தைரியமிருப்பானேன்! ஒருவேளை கொலையுண்டிறவாமல் இவ்வேஷத்துடன் தப்பித்து வந்திருக்கலாம்! ஆயினுமினி நாம் அவரை எப்படி அடைவது? ஐயோ அவர் எங்குற்றனரோ? எதற்கும் இவ்விசேஷத்தை நம் தந்தையாருக்குத் தெரிவிப்போம். அவரும் அவ்விராஜ குமாரனிடத்தில் அன்புள்ளவர் போலவேதோன்றினர்! தெய்வானுகூல மிருக்கின்றதென்றே யான் நம்புகின்றேன்! அநாதரக்ஷணமே ஈசுவரனுடைய குணமன்றோ? எவ்வளவோ விலையுயர்ந்த ரத்தினங்களை யெல்லாம் கொண்டுவந்து கொடுத்த என் பிதாவுக்கு இப்புருஷ ரத்தினத்தை எனக்களிப்பது அசாத்தியமோ? ஆகையால் அவரிடமே செல்வோம்! (நோக்கி) நம்பிதாவும் இவரையாரோ வென்றெண்ணிக் கையிற் கத்தி எடுத்துக்கொல்ல வருகின்றனர். இப்பொழுதே இதை இவருக்குத் தெரிவித்து, இக்கொடுந்தொழிலை விட்டுவிடும்படி கேட்போம்! என்னவோ சொல்லிக்கொண்டு வருகின்றனர். அதையும் மறைந்து நின்று கேட்போம்.

(மறைந்து நிற்றல்).

(மேற்கூறியபடி ஜயபாலன் பிரவேசித்தல்)

ஜய:—(தனக்குள்) ஆ ஆ! இன்று நம்முடன் வந்த மகாவீரன் அதிசுந்தரனும் மகாபராக்கிரமசாலியாயும் காணப்பட்டனனே! ஐயோ! அவனைக்கொல்லும்படி நேர்ந்ததே? அச்சண்டாளி நான் எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லையே. வழக்கப்படியே கொலைசெய்யவேண்டுமென்று கட்டாயப்படுத்துகின்றனளே. இல்லை என்றால் உடனே உயிரை மாய்த்துக்கொள்ளுவள்! அந்தோ அவளுடைய வார்த்தைக்கு விரோதமாய் நடக்க யான் அசக்தனுயிருக்கின்றேனே! என்செய்வேன்? அவனை எப்படிக்கொல்வேன்? எதற்கும் அவ்வீரன் எங்கே காணும்.

(தேடிப்பார்த்து நோக்கி) குழந்தாய் லீலாவதி! இவ்விடத்தில் இவ் வேளையிற்றனியாய் என்னசெய்துகொண்டிருக்கின்றாய் ?

லீலா :—(சிரித்துக்கொண்டு) ஒன்றுமில்லை! உங்களுக்கு ஒத்தாசையாகவந்து அவ்விராஜ குமாரனைக் கொல்லலாமென்று வந்தேன்.

ஜய :—என்ன ! சிரிக்கின்றாய் ! எந்த ராஜகுமாரனை?

லீலா :—தாரா நகரத்துக்குரிய அந்த ராஜகுமாரனைத் தான்.

ஜய :—என்ன! அப்போஜ குமாரனையா? அவன் இறந்துவிட்டு எத்தனை நாட்களாயின ? என்ன உனக்குப் பைத்தியம் பிடித்ததோ ?

லீலா :—நீங்கள் ஒருபோதும் அவரைக் கொல்லமாட்டீர்களோ ?

ஜய :—ஆ ! புத்திரீ! என்ன அப்படிச்சொல்லுகின்றாய்? அப்போஜ குமாரனையும் யான் கொல்வேனோ? அவன் மாத்திரம் உயிருடனிருப்பானாயின், அப்பாவி முஞ்ஜனைக் கொன்றுவிட்டு,அவனை இப்பொழுதே தாரா ராஜ்ஜிய ஸிம்மாஸனத்தில் நாட்டுவேனே. அவையெலாமிருக்கட்டும்! இங்கொருவீரனிருந்தனனே, அவனை நீ யெங்கேயாகினும் பார்த்தனையோ ?

லீலா:—என் அருமைத்தந்தையே! அவ்வீரனைக்கொல்வது நியாயமோ ? அவர் நமக்கென்ன அபராதஞ்செய்தனர் ?

* "கலையெலா முணர்ந்தா ரேனுங்
கரிசறத் தெளிந்தா ரேனும்

மலையென வுயர்ந்தா ரேனு
மனமய லகன்றா ரேனு

* பதிபசுபாசவிளக்கம்.

முலகெலாம் புகழப் பல்லோர்க்
குதவிய கைய ரேனு
மிலகிய விரக்க மின்றே
லெழுநர கடைவ ரன்றோ!" (கச)

ஜய:—குழந்தாய்! நீ சொல்வது வாஸ்தவமே! ஆயினும் அவனைக் கொல்லாவிடின் நின் தாய் உயிரைமாய்த்துக்கொளுவளே.

லீலா:—அதற்காக ஒருவருடைய உயிரை அநியாயமாய் மாய்த்துவிடலாமா? பிறகு சுவாமியும் நம்மை அப்படித்தானே தண்டிப்பர்! இப்பாவத்தொழிலைத் தாமேன் இன்னும் அனுசரிக்கவேண்டும்?

* "மங்கைகைகை சொற்கேட்டு மன்னர்புகழ்
தசரதனு மரண மானான்
செங்கமலச் சீதைசொல்லை ஸ்ரீராமன்
கேட்டவுடன் சென்றான் மான்பின்
தங்கையவள் சொல்லைக்கேட் டிராவணனுங்
கிளையோடு தானு மாண்டான்
நங்கையர்சொற் கேட்பதெல்லாங் கேடுவரும்
பெருலகோர் நகைப்பர் தாமே." (கரு)

ஜய:—குழந்தாய்! நீ சொல்வதெல்லாம் உண்மையே! ஆயினும் என் அருமைக்காதலி இறந்துவிட்டால் நான் என்ன செய்வேன்!

லீலா:—ஆனால் அவ்வீரனைத்தாம் யாரென்று எண்ணினீரோ?

ஜய:—அவன், தான் ஒரு பரதேசியென்று சொன்னபோதிலும் எவனோ ராஜவம்சத்திற் பிறந்தவீரனென்றே நினைக்கின்றேன்.

* விவேகசிந்தாமணி

லீலா:—என் தந்தையே! என்னை மன்னிக்கவேண்டும்! யான் அவ்வீரரைப்பார்த்தது முதல் அவரிடத்திலேயே என்மனம் சென்றுவிட்டது. நான் அவரையே மனத்திற் பதியாக வரித்துவிட்டேன். நீங்கள் கூறிவந்த கோரமான சபதத்தைக் கேட்டு நான் இங்கே ஓடிவந்து அவரை ஓடிப்போகும்படி செய்துவிட்டேன்.

ஜய:—குழந்தாய்! இதை நான் முன்னமே அறிவேன். அவனைப்பார்த்தும் அவனே உனக்குத்தக்கவனென்று மனத்திலெண்ணினேன். ஆயினும் எனது தௌர்ப்பாக்கியம் அவனை நீ அடையக் கொடுத்துவைக்கவில்லையே!

லீலா:—இதோ இந்தக் கணையாழியைப் பார்த்ீர்களா? (காட்டல்)

ஜய:—(வாங்கி உற்றுநோக்கி) என் கண்மணி? இஃது உனக்கெப்படிக் கிடைத்தது? இம்மோதிரம் தாரா நகரத்துக்குரியவனாயிருந்த போஜனுடைய தாயிற்றே?

லீலா:—எந்தாய்! தாங்கள் இப்பொழுது கொல்லத் தீர்மானித்துவந்த அம்மகாவீரனே இம்மோதிரத்திர்க்குரிய ராஜகுமாரனாவன்.

ஜய:—என்ன! என்ன!! ஆச்சரியமாயிருக்கின்றதே!!! தன் பெயர் சைந்துலனென்று கூறினனே அவ்வீரன்!—ஆ ஆ! அறிந்தேன்! அம்மகாவீரன் போஜனே! சைந்துல னென்றால் சிந்துலருடைய புத்திரனென்றல்லவோ கொள்ளவேண்டும். மேலும் தன்னுடை மாளவதேசமென்றனன்.—ஐயோ அம்மகாவீரனையோ யான் கொல்லவந்தேன்! பாபம்! பாபம்!! இன்றுமுதல் இக்கொடுந் தொழிலைவிட்டேன்! குழந்தாய், அவரெங்கே போயினர்? தெரியுமா? உனக்கு இம்மோதிரம் எப்படிக்கிடை

லீலா:—எந்தாய்! அவர்போன இடம் எனக்குத்தெரியாது. ஆயினும் அவர் என்னைப்பிரிந்துபோகும்பொழுது இம்மோதிரத்தை என் விரலிலணிந்து ஞாபகத்திற் கிருக்கட்டுமென்றுசொல்லிப்போயினர். இம்மோதிரத்தின் தரிசனந்தான் என்னுயிரையிதுகாறும் நிலைக்கச்செய்தது.

ஜய:—என்கண்மணி! நீ விசனப்படவேண்டாம்! நான் உன்னை அவருக்கே மணம் புரிவிக்கின்றேன். அவரையும் அத்தாரா ராஜ்ஜியத்தில் நிலைநாட்டுகின்றேன்.

லீலா:—ஐயோ அவர் எங்குற்றனரோ? ஒருவேளை நான் சொல்லிய கொடிய வார்த்தைகளைக் கேட்டுத் தற்கொலைபுரிவரோ?

ஜய:—என் செல்வியே! அவருக்கொரு கெடுதியும் நேரிடாது. அவர் தனது நகரத்திற்குத் தான் சென்றிருப்பர். நீ வீட்டிற்குட்செல். நான் அவ்விடம் போய்வருகின்றேன்.

லீலா:—எந்தாய்! யான் அவரைக்காணுமல் ஒரு நிமிஷமேனும் உயிர்த்திரேன்! தாமுஞ் சென்றுவிடில் என்பிராணன் போனது போலவே! ஆகலின் தங்களுடன் கூடவேவருகின்றேன்.

ஜய:—என் கண்ணே! ஒரு வேளை அவ்விடத்தில் முஞ்ஜனை எதிர்த்து யுத்தஞ்செய்யவேண்டிவரும். நீ பெண்பிள்ளையானதனுற் பயப்படுவாய்! நீ இங்கேயேயிருப்பாய்! நான் அவ்விடஞ்சென்று அவரையே இவ்விடத்திற்குச் சீக்கிரமழைத்துவருகின்றேன்.

லீலா:—அவர் ஒருபோதுமிங்கே இனி வாரார்! யுத்தம் நேரிட்டாற்றுனென்ன? எனக்கொருபயமுமில்லை! என் தாயைப்பார்க்கினும் வேறுபயங்கரமான பதார்த்தமுமினியுண்டோ! நானுமங்கே வந்து தங்களுக்குச் சகாயமாய் யுத்தஞ்செய்கின்றேன்.

ஜய:—குழந்தாய்! அப்படியே செய்வோம்! ஆயினுமி வ்வுடையோடு செல்வது தகுதியன்று! குகைக்குட் சென்று யுத்தவீரர்களைப்போல் உடைதரித்துச் செல்வோம்.

(இருவரும் நிஷ்கிரமித்தல்)





# ஆறும் அங்கம்.

## முதற்களம்.

**இடம்.—உஜ்ஜயிநீ நகருக்குச் செல்லும் பாதையில், ஓரிடிந்த மண்டபம்.**

(**போஜன்** *விரஹாவஸ்தையுடன் பிரவேசித்தல்.*)

**போஜன்.**— ஆ ஆ! ஈசனது செயலை யான என் சொல்வேன்? ஸகலத்தையுந்துறந்து வைராக்கியம் பூண்டு முனியாய்க்காலத்தைக் கழிக்கலாமென்று நினைத்திருந்த வெனக்கு, காதல் என்னும் ஒரு பாசத்தை யுண்டுபண்ணிவிட்டனரே! அந்தோ! அம்மாதரசியைக்காணுமல் யான் எப்படி உயிர்த்திருப்பேன்? ஆஹா! அப்பெண்மணியின் மாசற்றவடிவம் என் பார்வையைவிட்டு இன்னுமகலவில்லையே! அவளது பிரியமான வசனங்கள் இன்னுமென் செவிகளுக்கு ஆநந்தத்தைக் கொடுக்கின்றனவே! ஆஆ! அப்பெண்மணியின் சிறப்பை யான் என்னென்றுரைப்பேன்!

* "வில்லொக்கு நுதலென் றாலும்
வேலொக்கும் விழியென் றாலும்,
பல்லொக்கு முத்தென் றாலும்
பவளத்தை யிதழென் றாலும்,
சொல்லொக்கும் பொருளொவ் வாவாற்
சொல்லலா முவமை யுண்டோ?
நெல்லொக்கும் புல்லென் றாலும்
நேருரைத் தாக வற்றே!" (க)

ஆகா! அவ்வங்காரத்தினத்தைக்கண்டால், சகல ஜகன்மோஹனனான மன்மதனுக்குகந்த ரதிதேவியும் நாணங்கொண்டோடுவளே! (பாடுதல்)

* கம்பராமாயணம்.

(௪). இராகம் - ஆபோகி - தாளம் - ரூபகம்.

பல்லவி.

தாராலத்தில் வேறுமாதும்
சமானமாவளோ?—இந்த.

அநுபல்லவி.

வராங்கனை இவள் பூவில்
வடிவெய்த லக்ஷ்மியே!— தரா.

சரணம்.

ஒருதரமிவள் முக கமலத்தை
ஓர்ந்தாலும் போதும் போதும!
தருணீமணீ! இவளையென்று
தர்சிப்பேனோ வறியேனே?— தரா.

கருமேகத்தைப் பழிக்கும் கசமும், கனககும்பத்தைத் திக்கரிக்கும் குசமும், வஞ்சிக்கொடியை யொத்த இடையும், வாழைஸ்தம்பத்தை யுற்ற தொடையும்,—ஆஹா! இன்னுமம்மாதரசியின் உருவம்என்முன் காணப்படுகின்றதே!

* "சூழிக்கோட் டிளம்பிறையுந்
குளிர்மதியுங் கூடினபோ
லழகுகொள் சிறுநுதலு
மணிவட்ட மதிமுகமுந்
தொழுதார்க்கு வரங்கொடுக்குந்
தொண்டைவாய்த் தூமுறுவ
லொழுகுபொற் கொடிமூக்கு
முருப்பசியை யுருக்குமே!" (௨.)

அந்தோ! அவளது பெருமையில் யான் ஏகதேசமாயினு மறிந்தவனாக வெண்ணிலேன். யான் அம்மாதரசியைவிட்டுப் பிரியும்பொழுது அவளெனக் கெடுத்துரைத்த ஒவ்வொரு சொ

* சிவகசிந்தாமணி.

ல்லும் என்னை யவளுக்கு அடிமையாக்கிவிட்டதே! ஹா! லீலாவதி! உன்னை என்று யான் காண்பேன்? எப்படி உன்னையடைவேன்? எவ்வாறுன்றன் பிரிவைச் சகிப்பேன்? (பாடுதல்)

(உ) இராகம் - பூரிகல்யாணி- தாளம் - ஆதி.

பல்லவி.

யாருடன் சொல்வேனந்தோ !
யான்படும் வேதனையை ?

அநுபல்லவி.

தேறிடுமோ வென்றன் - திருவுளத்துள்ளாளே !
மீறிடுங்காமநோய் - மீண்டுமுன்னைவிட்டால் !— "யா

சரணம்.

மந்தமாருதம்வீசும் - அந்தப் பூஞ்சோலையில்
வந்தவென் றனைக்கூடித் - தந்திடாயோ வின்பம் ?
சந்ததமுன்னையே - சிந்தையினிற் கொண்டேன்
அந்தமாமுன்முகம் - எந்த நாள் காண்பதோ ?— யா.

(நேபத்தியத்தில்.)

ஐயோ ! இன்னிக்கிக்கூட ஒன்றுங் கிடைக்கலையா ?

**போஜ.**—(செவிகொடுத்து, நோக்கி) யாரோ ஒரு ஸ்திரீயும் புருஷனும் பேசிக்கொண்டு இவ்வழியே வருகின்றனர். (உற்று நோக்கி) என்ன ! நம் நாட்டைச்சேர்ந்தவர்கள் போலிருக்கின்றனரே ! இவர் நாம் அன்றிரவிற்கண்ட பிராமணோத்தமரன்றோ ? நல்லது என்ன செய்தியோ இவர்களைக் கேட்டாலறிந்து கொள்ளலாம்.

(**கோவிந்தபண்டிதரும்,** அவரது பத்தினி **சுந்தரியும்** மண்டபத்தின் வெளிப்படியில் நின்று பெசிக்கொண்டபடி பிரவேசித்தல்.)

**கோவிந்தபண்டிதர்.**—அடிபேதாய் ! ராமேச்வரம் போனாலும் சனீச்வரன் விடுமா ?

சுந்தரி.—அதென்ன அப்படிச் சொல்லுகிறைகளே! இந்ததேசத்து ராஜா மிகவும் நல்லவராமே! நான் சொன்னபடி அவரிடஞ் சென்றீர்களோ?

கோவிந்த.—எங்கே சென்றுலென்ன? நம்முடைய தாரித்திரியத்திற்கு ஒரு குறையும் வாராது.

போஜ.—(தனக்குள்) ஆம்! அப்பிராமணுத்தமரே இவர்! இந்த மாது சிரோமணியும் அவரது தர்மபத்தினியே! பாவம்! இக்கொடியவெயிலில் என்ன கஷ்டப்படுகின்றனர்! இவர்களுடைய வறுமை இன்னும் நீங்கவில்லையே! நல்லது! இன்றுமென்ன விசேஷமோ இங்கேயே மறைந்து நின்று கேட்போம் (அப்படியே மறைந்து நிற்றல்).

சுந்தரி.—என்ன! இந்த தேசத்து ராஜாகூட நமது முஞ்ஜராஜனைப்போல் பிராம்மணத்வேஷியா என்ன?

கோவிந்த.—பாவம்! இவர் மிகவும் நல்லவரே! குபேரனுயிருப்பினும் நாம் கொடுத்துவைக்க அதிர்ஷ்டமிருக்க வேண்டாமா? நம்மாலாகக்கூடியது மொன்றுளதோ?

* "தீங்குவந் தடையு மாறு
நன்மைதான் சேரு மாறுந்
தாங்கள்செய் வினையி னலே
தத்தமக் காய வல்லா
லாங்கவை பிறரால் வாரா
வமுதநஞ் சிரண்டி னுக்கு
மோங்கிய சுவையின் பேத
முதவினர் சிலரு முண்டோ!" (௩)

சுந்தரி.—என்ன! நீங்கள் சொல்வது விந்தையாயிருக்கிறதே! அவரைப்போய்ப் பார்த்தீர்களோ?

* கந்தபுராணம்.

கோவிந்த.—அவரது தர்சனம் அவ்வளவு சுலபமாய்க் கிடைத்துவிடுகிறதா? ஏதோ யுத்தம் நேரிடப்போகின்றதாம். அதற்காக இந்த தேசத்திய ராஜன் முதலானோர் யாவரும் மிகவும் பரபரப்புள்ளவர்களா யிருக்கின்றார்கள்! இந்தத்தடபுடலில் அவரை நான் காண்பது எப்படி?

சுந்தரி.—எதைப்பற்றி யுத்தமாம்? யாருக்கும் யாருக்குமாம்?

போஜ.—(ஆன்மகதமாய்) இவ்விஷயம் எனக்குக் குதூஹலத்தையுண்டு பண்ணுகின்றது. நாம் அறியவேண்டு மென்றிருந்த விஷயத்தை இம்மாது சிரோமணியே கேட்டனள்! நல்லது! சாவதானமாய் மறைந்து நின்றே மற்றதையுங் கேட்போம்.

கோவிந்த.—ஆஹா! அவ்விஷயத்தைப்பற்றி யான் என் சொல்வேன்? நாம் என்றையிரவு நம் நகரைப்விட்டுப் புறப்பட்டோமோ, அன்றையிரவே அப்பாதகன் முஞ்ஜராஜன், நமது தர்மப்பிரபு சிந்துல மஹாராஜருடைய புத்திரனாகிய அவ்விளங்குமரன் போஜனை மோசடியாய்க் கொலைசெய்யப்பார்த்தனனாம்.

சுந்தரி.—அதன் பிறகு? அதன் பிறகு?

கோவிந்த.—ஏதோ தெய்வ வசத்தால், அவனைக்கொலை செய்யக்கொண்டுபோன வத்ஸராஜர், இரக்கங்கொண்டு கொல்லாமல் அவனை நகரத்தைவிட்டு ஓடிப்போகும்படிசெய்தனராம்.

சுந்தரி.—நல்ல காலம்! பிராணன் தப்பியதே!

கோவிந்த.—பிறகு நமது சிந்துல மஹாராஜருக்கு முக்கிய மந்திரியாயிருந்த புத்திசாகரர் இதனைக் கேள்வியுற்றுத்

தமது சிஷ்யனாகிய காளிதாசனை ஆதித்தியவர்ம மஹாராஜரிடம் அனுப்பினராம்.

**போஜ.**—(ஆன்மகதமாம்) ஆஹா ! இவர்களுடைய நன்றியறிவையும் விசுவாசத்தையும் யான் என்ன சொல்வேன் ?

**சுந்தரி.**—மேலே என்ன நடந்ததோ ?

**கோவிந்த.**—இது மாத்திரமன்று ! இன்னும் அக்கொலை பாதகன் முஞ்ஜன் செய்த வஞ்சனைச் செயல்களை யான் என்ன சொல்வேன் ! அவைகளைக் காதாற் கேட்பவர்களுக்கே மனம் விசனத்தினால் வெடித்துவிடும். அவற்றை யெல்லாம் நேரே யனுபவித்த அவ்வுத்தமிகளுடைய மனம் எப்படியிருக்குமோ ?

**போஜ**—(ஆன்மகதமாய்) ஹா ! இஃதென்ன ? அவ்வுத்தமிகள் யாவராயிருக்கக்கூடும் ? ஒருவேளை என் அருமைத் தாயாயிருக்குமோ ? ஹா ! அம்மா ! நீ எனக்காக என்ன கஷ்டங்களை யடைந்தனையோ ? அப்பாவி என் சிற்றப்பன் உன்னையும் என்ன கஷ்டப்படுத்தினனோ ? நல்லது ! 'உத்தமிகள்' என்றனரே ! இன்னும் யாருக்குத் தீங்கிழைத்தனனோ அப்பாதகன் ? தெரியவில்லையே !

**சுந்தரி:**—(திடுக்கிட்டுச், சற்றுநேரம் பேசாதிருந்து, மூக்கிற்கைவைத்து ஒருபெருமூச்சுடன்)என்ன! இராஜ குமாரனைக் கொல்லப்பார்த்தது மன்றி இன்னுமெந்தப் பேதைகளுக்குத் தீங்கிழைத்தானோ இத்துஷ்டன் ?

**கோவிந்த:**—அதைச்சொல்ல என்னாவும் கூசுகின்றதே !

என்ன வென்று சொல்லுவேன் யான் - இந்த
நன்னடையில்லா முஞ்ஜன் நடத்தை யெல்லாம்,
அநியாய மநியாயம் - அவனியி
லினியிதைப் பார்க்கினு மவந்தை யிரா

தன்பே யுருவங்கொண்டு – அனைவர்க்கு
மின்பமளிக்க விங்கே ஈசுவரனே
வந்தனனோ வென்ன - வளர்ந்தெழுஞ்
சுந்தர காத்திரன் சுகுமாரனும்
போசனைத் தொலைத்த தன்றிப் - புகழ்பெறும்
நேசமேவடிவா யெடுத்திருக்கு மவ
ளைசைக் கண்ணுட்டியையும் - அழித்திடு
மாசை யென்னும் பெரும் பாசத்தினாற்
காமக் காட்டேரியினாற் - கட்டுண்டு
தூமகேதுவைப்போலத் தூர்த்தனவன்
ஒரு சூதுமறியாத – உத்தமி
உருவங்கொண்ட உமாதேவியென
உயர்குலத்திலுதித்து - உன்னதப்
பயனைத்தரும் பல நூல் பயந்த
விலாஸவதியைப்பெற - விரும்பி
பலாத்துக் காரமாய்ப் பாவியவன்
இழிவெனவெண்ணுமலே - இவள் கற்பை
யழிப்பதற்கெண்ணங்கொண் டந்தனைப்போற்
பழிகொலைக் கஞ்சாமலே – பாதகன்
னெழிலிற் கமலையையு மிகழச் செய்யுஞ்
சுந்தரத் தனுவையுடையாள் - சோகத்தால்
அந்தமிருந்த வென்னுருயிராம்
பதியே தெய்வமெனப் - பகர்ந்து
மதிபோலிருந்த மணாளன்போய்த்

தரணியிற் றரிப்பேனோ - தனுவை
மரிப்பதே யெனக்கினி வரனாகும்
என்று திடங்கொண்டு - ஏகாந்தமாய்த்
துன்றுவிலாஸவதி சோர்ந்திருக்க: (ச)

**போஜ:**—(பரபரப்புடன் ஆவேசதமாய்) ஆஹா! என்ன! என்ன! என்னருமைக்காதலி விலாஸவதியையா இப்பாதகன் கெடுக்க முயன்றனன்! அடே பாவி! என் பதியைக் கைப்பற்றிக்கொண்டது மன்றி என் சதியையுமாடா பெண்டாளநினைத்தனை?

* 'பூமரமா யூர்வனவாய் மிருகமாய்ப்
புட்குலமாய் மனித ராகிப்

பாமரமாய்ப் பண்டிதரா யொழுக்கத்தா
லுயர்ந்தேணிப் பழுப்போ லேறித்

பூமன்ன னயினைமேற் சுவர்க்கபதத்
துனதுபதம் புகுத்தற் பாலாய்

காமமெனு மந்தரத்தே தாவியினிக்
கீழ்வீழல் கடனோ வையா!' (ரு)

**சுந்தரி:**—ஆ கஷ்டம்! கஷ்டம்! பதிவ்ரதாசிரோமணியான அம்பெண்மணிக்கோ இவ்விததுன்பம் நேரிட்டது! அதற்கப்புறம்!

**கோவிந்த:**—அதற்கப்புறமா?

ஆகா! யானென் சொல்வேன்!—அன்னவள்

சோகாகாரஞ் சென்று சோர்ந்திருக்க,

காமாந்தன மந்தக் - கடோரன்

---

* திருக்குற்றலத்தலபுராணம்.

சாமான்யையைப் போற் றனக்கிணங்கி
இவடனக் குடன்படுவேள்—என்று
அவனெறியறியா தவளைத் தூமிக்
கட்டாயமாயவளைத் - தொட்டு
இட்டாபிபூர்த்தியை யியற்றவெண்ண,
கொடுந்துயரினில்மூழ்கிக் - கூவென்று
நடுங்கித்தரைபட்ட நாவாய்போற்
கரைகாணாதவளாய்க் - களைத்துத்
தரையிற்றடாலெனச் சாய்ந்தனளாம். (சு)

போஜ:—அடே துரோகி! காமுறக்கூடிய ஸாமானிய ஸ்திரீ என்று விலாஸவதியையு மெண்ணினையோ? தொட்டமாத்திரத்தில் உன் உயிரைத் தொலைக்குங் கால கோடிவிஷமென அவளை நினைத்தாயல்லை! அடே க்ஷத்திரியாதமா! அவளை நீ கண்களாற் பார்க்கவும் தகுமோ? அவளை மனத்திலேனும் இச்சிக்கலாகுமோ? அப்பதிவ்ரதோத்மை எனக்கே உரியாளென்று நீ யறிந்திலையோ! ஓர் ஆண் சிம்மத்திற்கென்று வைத்திருக்கப்பட்ட பலியை ஒரு நரியும் இழுத்துச் செல்லக்கூடுமோ? அடே! நீசா! எனிப்படி விழையழிகின்றாய்!

* "பாவமும் பழியு நல்கும்
பல்வகைப் புகழ றங்கள்
யாவையு மழிக்கு மெய்து
மின்பமு மதனு லெய்து
நோவுநன் மரபுஞ் செய்யு
நோன்புநல் லொழுக்கு மென்மை
சாவுமென் ணுறுமு னிற்குந்
தயங்குபுன் காம மென்பார்!" (எ)

* பிரபுலிங்கலீலை.

சுந்தரி:—(கண்ணீர்ததும்ப) ஐயோ! அம்மஹாபதிவ்ரதை யைக் காப்பாற்ற ஒருவருமங்கிருக்கவில்லையோ! என்ன செய் வள், பாவம், அப்பேதை?

கோவிந்த:—அப்படியிருக்க,

தற்செயலா யங்குவந்த - தரங்கவதி
நற்செயல் வடிவாமந்த நங்கையைக்கண்டு
ஓட்டமாயோடிச்சென்று - உரைக்கவே
நாட்டுப்பெண்ணைக்காண நாடுபுகழ்
ஸாவித்ரீ தேவியாரும் - ஸகியுடன்
பூவிற்புகழும் புத்திசாகரரைத்
துணையாயழைத்துக்கொண்டு - துடித்துக்
கணத்திலங்கேசென்று கடிந்துரைக்க
மனத்திற் சொல்லம்புபட்டு - மன்னவன்
சினந்துகைப்பிடிப்பட்டத் திருடனைப்போல்
சற்றுப் பேசாதிருந்து - சரேலென்று
உற்றவர்களைநோக்கி யுக்கிரமாய்த்
தள்ளிக்கொண்டு ஸாவித்ரியைத் - தராதிபன்
துள்ளிக்குதித்துக்கொண்டு சொலித்தனனும்!(அ)

போஜ:—(ஆன்மகதமாய், கோபத்தினற் சிவந்தகண்களுடன்) அடே பாபீ! நராதமா! உன்னுடைய சூதும்வாது மிப்பொழுது தானடா செம்மையாய்ப் புலப்படுகின்றன! உன் துஷ்ட நடத் தையை யறியாமல் விலாஸவதியைவீணய்ப்பழித்தேனே! இப்பொழுதன்றோ தெரியவருகின்றது அவளுடைய தூய்மை! அவள் ஒருபோது மெனக்கு விஷம் வைத்திராள்! அவள் ஒருபோதும் என்மீது பழிசொல்லியிராள்! இவையெலாம் உன்னுடைய கற்பனையே!

சுந்தரி :—அதன் பிறகு? அதன் பிறகு?

கோவிந்த :—ஆஹா! அதன் பிறகா?

பின்பு நடந்ததை யான் - பெருக்கில்
துன்பக்கடல் மூழ்கித் தொங்கிடுவாய்!
சுருக்கிச் சொல்லுவே னாயினுஞ் - சீதாகையே!
கருத்திற்றான் கொண்டவெண்ணங் கைகூடா
தென்றவனறிந்து கொண்டு - இவர்களைக்
கொன்று பழிதீர்க்கவெண்ணிக் கொலைபாதகன்,
பிடித்துவரச் செய்து - பெரியோர்கள்
நடுநடுக்கங் கொண்டு நகரைவிட்டு
அகன்றிடும்படியாக - அரணுள்ளே
புகுதற்கரியபுல் சிறைப்படுத்தி
கடுங்கா வலில்வைத்துக் - கடோரனவன்
படுத்தி வைக்கின்றனனும் பல்விதத்தே!
புத்திசாகரருமதைப் - பொறுக்காமல்
மித்திரர்களுடன் வெளிச் சென்றனராம்! (கூ)

போஜ :—(ஆன்மகதமாய் சோகாக்கிரந்தரைய்) ஆ! அம்ப! ஸாவித்திரீ! உனக்கோ இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்தது! நீ அப்பாதகன் கையிலகப்பட்டுக்கொண்டு எவ்வாறெல்லாம் பரிதவித்தனேயோ? ஐயோ! உன்னைக்காப்பாற்றுபவர் ஒருவருமில்லையோ?

சுந்தரி :—ஆ ஆ! ஸாதுகளுக்கு என்னென்ன கஷ்டங்களை யுண்டு பண்ணுகிறார் பகவான்! அதற்குமேலே என்ன நடந்ததோ?

கோவிந்த :—பிறகு புத்திசாகரருடைய வேண்டுகோளின்பேரில், இந்நாட்டிற்கரசராகிய ஆதித்தியவர்ம மஹாராஜர்,

அவ்விராஜகுமாரனுக்காக முஞ்ஜனிடம் ஒரு தூதனை யனுப்பினராம்.

சுந்தரி :—எதற்காகவோ?

கோவிந்த:—சமாதானமாய், இராஜ்ஜியத்திற்குரியவனை போஜனுக்குத் தாராராஜ்ஜியத்தை ஒப்பித்து, அவனிடத்தில் இந்த உத்தமிகள் இருவரையுஞ் சேர்ப்பித்து, மன்னிப்புக்கேட்டுக்கொண்டால் நலமாயிருக்கும், இல்லாவிடில், முஞ்ஜனுக்குந் தமக்கும் வீண்சண்டைக்கு ஹேதுவாகுமென்று தெரிவிப்பதற்காம்.

சுந்த :—அதற்கு நமது முஞ்ஜமஹாராஜா பதில் என்ன சொன்னாராம்?

கோவி :—அதற்கவன், "நான் கைப்பற்றிக்கொண்ட பொருளை யொருபோதுந் திரும்பிக்கொடேன். இவன் யார் என்னைக்கேட்பது? விலாஸவதியையும் ஸாவித்திரி தேவியையும் அப்போழுதே நமபுரத்திற்கதிதியாய் அனுப்பிவிட்டேன்! வேண்டுமாயின் அப்பயலுக்கு உதவியாய் வந்த இவ்வாதித்தியவர்மனுடன் போர்புரிய யான் சித்தமாயிருக்கின்றேன்" என்று சொல்லியனுப்பினனும். இது தான் யுத்தத்திற்குக் காரணமாம்.

போஜ :—(சோகாக்கிராந்தனாய்) ஹா! என் அருமைத்தாயே! என் பிரிய விலாஸவதி! உங்கள் கதி இப்படியோ முடிந்தது! (மூர்ச்சைகொண்டு கீழேவீழ்தல்)

சுந்தரி :—அதன் பிறகு என்ன சமாசாரமாம்?

கோவிந்த :—அதன் பிறகு இருபுறத்தாரும் சேனைகளைச் சேகரஞ்செய்தனர்களாம்! முஞ்ஜனும் ஸைன்னியத்துடன் இந்நகருக்கருகில் வந்திறங்கியிருக்கின்றனனும். சிப்ராநதிக்கரையில் ஒரு பெரிய யுத்தம் நடக்கப்

போகின்றதாம். அதற்காகவே இன்று காலையில் புத்திசாகரர் காளிதாசர் முதலானவர்களெல்லாம்ஒரு கூட்டம் கூடினார்கள்! பட்டணமெல்லாம் பிரமாதப்படுகின்றது! இந்தப் பெருந்தட புடலில் நம்மைக்கவனிப்பவர் யார்?

போஜ:—(மூர்ச்சை தெளிந்து, செவியுற்று, தீனமாய்) ஆ ஆ! நமக்காக எத்தனை பெயர் கஷ்டப்படுகின்றனர்கள்!

சுந்தரி:—ஐயோ! வெயில் பட படக்கிறதே! கால் பொரிந்துபோறதே! இனிமேலெங்கே வெளியிற்போறது? இத்தீர்த்தத்தையாயினுங் குடித்து இன்னிக்கிக் காலக்ஷேபஞ் செய்துவிடுவோம் வாருங்கள்.

கோவிந்த:—அப்படி என்ன நாழிகை ஆய்விட்டது! (வானத்தைநோக்கி) ஆ ஆ! இஃதென்ன! சூரியன் உருமழுங்கியுங் கொளுத்துகின்றானே. இஃதென்ன உத்பாதம்? இதன் காரணமென்னோ?—(யோசித்து) ஐயோ! இப்பொழுது இத்தனை பெயர்கள் செய்த பிரயத்தனங்களெல்லாம் வீணாய்ப்போய்விடுகின்றனவே! சுவரை வைத்துக்கொண்டல்லவோ சித்திரமெழுதவேண்டும்! என்ன கஷ்டகாலம்! என்ன கஷ்டகாலம்!!

சுந்தரி:—(ஆனந்தமாய்) இதென்ன? இருந்தாப்போலிருந்து மானத்தைப் பார்த்துவிட்டு விசனப்படுகிறார்! (பிரகாசமாய்) ஐயோ! இதேதன்ன இப்படி விசனப்படுகிறீர்களே! நமக்கென்ன புதுசங்கடம் வரப்போகிறது? நமது வறுமைதான் குறைவில்லாமலிருக்கிறதே! இன்னுமென்ன கஷ்டமிருக்கப் போகிறது?

கோவிந்த:—ஐயோ! இந்தச் சண்டையின் தீர்மானத்திலாயினும் போஜன் பட்டத்திற்கு வருவனென்று நினைத்தேன்! நம்முடையவறுமைக்குமொரு விமோசனகாலம் வருமென்றெண்ணினேன்! அவ்வெண்ணமெல்லாம் வீணாய்ப் போயினவே! ஐயோ! யாரைப்பற்றி இந்த யுத்தம் நடக்கப்

போகிறதோ, அந்த ராஜகுமாரனே இன்னுமொரு மூகூர்த்தத்திற்குள் ஸர்ப்பத்தினாற்றீண்டப்பட்டு மரிக்கப்போகின்றானே !

சுந்தரி :—அதெப்படி! அதெப்படி! அந்த தாய்தகப்பனற்ற பிள்ளை பட்டத்துக்கு வராமற்போனாலும், ஆயுசுடனாவது கொஞ்சகாலம் இருக்கக்கூடாதா?

கோவிந்த :—இவ்விதமான உத்பாதம் நேரிட்டால் போஜன் ஸர்ப்பந்தீண்டி இறப்பனென்றன்றோ மறையோர்கள் அவனது ஜாதகத்தை நோக்கியுரைத்தனர்.

போஜ :—(மறைந்திருந்த விடத்தைவிட்டு ஓடிவந்து, கோவிந்தபண்டிதருடையகாலில் வீழ்ந்து) சுவாமீ ! அந்த போஜனைத் தாங்கள்தாம் இத்தருணங் காப்பாற்றவெண்டும். வியாதியையறிந்தவர்களுக்கு, அதைச்சமனஞ்செய்யத் தகுந்த ஔஷதமுந்தெரிந்திருக்குமன்றோ !

கோவிந்த :—அப்பா ! நீ யார் ? அப்போஜன் உனக்குத் தெரியுமோ ? அவனெங்கேயிருக்கின்றனனும் ?

போஜ :—அடிகாள் ! அவன் இருக்குமிடத்தை யானறியேன்! ஆயினும், அவனை எனக்கு நன்றாய்த்தெரியும். அவன் என் பிராணநேசனானதனால் என் மனம் கலங்கி மிகவும் கஷ்டப்படுகின்றது. கருணைகூர்ந்து, இதற்குப்பிரதிக்கிரியையாக சாந்தி ஏதாயினும் செய்து, அப்போஜனைச் சர்ப்பத்தினின்று மித்தருணம் காப்பாற்றுவீரென்று தம்மைச் சரணமாயடைகின்றேன்.

கோவிந்த :—அப்பா ! நீ சொல்வதெல்லாம் வாஸ்தவமே ! அவ்விராஜகுமாரனுடைய குணாதிசயங்களைக் கண்டவர்கள் எவர்கள்தாம் அவனுக்காகப் பரிதாபப்படமாட்டார்கள்? ஆயினும், ஸர்வதரித்திரனாகிய யான் என்ன செய்யக்கூடும்? வேதங்களை என்னவோ ஸாங்கோபாங்கமாய் அத்தியயனஞ் செய்திருக்கின்றேன் !

இதற்குப் பிரதிவிதானம் வேதோக்தப்ரகாரமாய் ஸர்ப்பஹோமஞ் செய்தாற்றான் அவன் பிழைத்திருப்பன்! அதற்குச் சில ஸாமக்கிரியைகள் வேண்டுமே.

**போஜ**:—என்ன வேண்டுமோ?

**கோவிந்த**:—கொஞ்சம் விறகு, கொஞ்சம் கிருதம், கொஞ்சம் திரவியம் வேண்டும். மேலும் ஒரு பிராம்மணர் கூடவிருந்து சில மந்திரங்களை ஜபிக்கவேண்டும். இவற்றில் ஒன்றுமென்னிடத்திலில்லையே! யானென் செய்வேன்?

**போஜ**:—அந்தோ! நானும் இப்பொழுது இவற்றைச் சம்பாதிக்க அசக்தனாயிருக்கின்றேனே! மேலும் இவ்வூருக்குப் புதியவன் யான்.

(நேபத்தியத்தில்.)

"அநித்யாநி சரீராணி
விபவோ நைவ சாச்வதஃ!
நித்தியம் ஸந்நிஹிதோ ம்ருத்யுஃ
கர்த்தவ்யோ தர்மஸங்க்ரஹஃ!!" ()

**சுந்தரி**:—(செவிகொடுத்து, நோக்கி) யாரோ ஒரு பிராம்மணர் இவ்வழியே பாராயணம் பண்ணிக்கொண்டு வருகிறார்! அவரையாவது கேளுங்களேன்! நாழிகையாய் விட்டால் என்ன செய்கிறது?

**கோவிந்த**:—(நோக்கி) ஆம்! யாரோ மகாதர்மிஷ்டரான பிராம்மணர் போலிருக்கின்றார். தெய்வாதீனம் ஒரு கையில் தர்ப்பை சமித்துக்கள் எடுத்து வருகின்றார்! கிருதங்கூட மற்றொரு கையில் எடுத்துக்கொண்டு வருகின்றார்போலும்! ஏதோ தலையில் மூட்டையும் பலமாகத் தானிருக்கின்றது. இவரைக் கேட்டால் நமக்கு வேண்டிய ஸாமாக்கிரியைகள் கிடைக்குமென்பதிற் சந்தேகமில்லை.

போஜ :—(ஆன்மகதமாய்) ஆம்! ஸாக்ஷாத் பரமேசுவரனைப் போல் விபூதிருத்ராக்ஷதாரியாய்த் தேஜோமயமாய் விளங்குகின்றார்! கருணைக்கடவுளே நம்மைக்காப்பாற்றுவதற்கு இம் மஹானுபாவரைக் கொண்டுவிட்டனர் போலும்.

(பிரவேசித்து)

பிராம்மணன்.—(பரபரப்புடன் ஒருவரையும் பாராமற் பாராயணம் பண்ணிக்கொண்டு).

"ஆத்மவத் ஸர்வபூதேஷு—
யச் சரேந் நியதச் சுசி: !
அமாநீ நிரபிமாந:
ஸர்வதோ முக்த ஏவ ஸ: !!" (கக)

கோவிந்த :—(அருகிற் சென்று) சாஸ்திரிகளே! சாஸ்திரிகளே!

பிராம்மணன் :—(திரும்பிப்பார்த்து) யாருங்கணம்! போகச்சே அபிஷ்டுவாட்டங் கூப்பிர்ரது ?

கோவிந்த :—நான் தான் சாஸ்திரிகளே! அசலூர் இருப்பது.

பிராம்மணன் :—ஆ! எங்கே வந்தீர்? என்னோடுகூடப் பிராம்மணார்த்தத்துக்குப் போகலாமென்று பார்க்கிறீரோ? உள்ளூரிலிருப்பவருக்கே ஒன்றுங் கிடைக்கலேயாம். போருக்குறைக்கு நீர் வெளியூரிலிருந்தும் வந்துவிட்டீரோ?

கோவிந்த :—அதற்கன்று, சாஸ்திரிகளே! அநாதனாய் நிற்கும் ஒரு சிறுவனை ஸர்ப்பமொன்று இன்னும் முகூர்த்தத்திற்குள் தீண்டப்போகின்றது. அவனைக்காப்பாற்றுவதற்காக ஒரு ஹோமம் செய்யவேண்டியிருக்கின்றது. தாங்கள் அதற்குச் சற்று ஒத்தாசை புரியவேண்டும்.

**பிராம்மணன் :**—(ஸந்தோஷத்துடன்) அதற்கென்ன? இப்படிப்பட்ட தர்மகாரியத்தைச் செய்விப்பதில் எனக்கு ரொம்பவுஞ் சந்தோஷமே! ஆனால், அதற்குவேண்டிய ஸாமக்ரியைகள் தவிர ஆசார்யதக்ஷிணை விசேஷமாய்த் தரவேண்டுமே.

**கோவிந்த :**—அதற்காகத் தான் தங்களைப் பிரார்த்திப்பதும்! நாங்கள் சுத்த ஏழைகள் பாருங்கள்! கொஞ்சம் ஸமித்து, கொஞ்சம் கிருதம், கொஞ்சம் திரவியம் ஒத்தாசை செய்வீர்களானால் யதேஷ்டம். இவ்வளவு உபகாரஞ் செயவீர்களானால் தங்களுக்கு இகத்திற் பிரக்கியாதியும், பரத்திற் புண்யமும் சாசுவதமாயிருக்கும்.

**பிராம்மணன் :**—போம், ஐயா, போம்! பிரக்கியாதியுமாச்சு! புண்ணியமுமாச்சு! விறகாம், கிருதமாம், திரவியமாம்!—என் ஐயா! ஒரே தடவையாய், இந்நகரையே தங்களுக்குக் கொடுத்துவிடும்படி கேட்கிறது தானே?

**கோவிந்த :**—அப்படித் தாங்கள் சொல்லக்கூடாது!

* "கொடையே யெவர்க்கு மெப்பேறுங்
  கொடுக்கு நெறியிற் பிறழாத
கொடையே யாருந் தன்வழியி
  னொழுகச் செய்யுங் குறைதீர்ந்த
கொடையே பகையை யுறவாக்குங்
  குலவும் பூத மனைத்தினையுங்
கொடையே புரக்கு மென்றுள்ளங்
  கொள்ளப் புகன்றான் கௌதமனே!" (கஉ)

**பிராம்மணன் :**—ஆமாம்! இந்த தர்மோபதேச மெல்லாமென்னிடத்தில் வேண்டாம்! இந்த வேதாந்தமெல்லாம் நானுமறிவேன்! போம்! ஐயா! போம்! இந்த ஜம்பத்துக்குத்தானா ஹோமம்பண்ணப் போகிறேனென்று சொன்னீர்! ஆகா!

* காஞ்சிபுராணம்.

பண்ணிவிட்டாப்பலேதான்! அந்த அநாதைப் பிள்ளையைப் பாம்புசடிச்சாலென்ன பாளைசட்டிருலென்ன? வெறுங்கையை வைச்சிண்டு முழம்போடப் பார்க்கிறீரோ? போம்! போம்!! (வேகமாய் நிஷ்கிரமித்தல்).

சுந்தரி :—எது? இவரைக்கேட்பதிற் பிரயோஜனமில்லை. நேற்று நீங்க கொண்டுவந்த விறகில் கொஞ்சம் மீதியிருந்தது. அதாயினுமிருக்கிறதாவென்று பார்க்கிறேன்! (மண்டபத்திற்குள் நிஷ்கிரமித்தல்)

கோவிந்த :—அப்பா! இவ்விடத்திலேயே இரு! இதோ சமீபத்தில் ஒரு பிராமணர் இருந்தார்! அவரை யாயினும் போய்ப்பார்த்து வருகின்றேன்! (நிஷ்கிரமித்தல்)

போஜ :—ஆஹா! இந்த சங்கடத்திற்கு யான் என் செய்வேன்? என் அருமைத்தாய் ஸாவித்திரி படுங்கஷ்டங்களை நினைந்து அழுவேனு? என் பிரியை விலாஸவதிக்குநேர்ந்த துன்பங்களுக்காக வருந்துவேனு? என் ஆசைநாயகி லீலாவதியை எண்ணி யெண்ணி யுருகுவேனு? அல்லது எனக்கு இப்பொழுது வந்திருக்கும் மகத்தான ஆபத்திற்காகத் துக்கிப்பேனு? ஐயோ! எத்தனை ஆபத்துக்களினின்றும் தப்பித்துக்கொள்வது? கெட்டகாலம்வந்தால் துன்பங்கள் ஒன்றின் மீதொன்ருய் வந்துகொண்டே யிருக்கும் போலும். "பட்டகாலிலேயே படும், கெட்டகுடியே கெடும்'' என்னும் பழமொழி வாஸ்தவமே. அந்தோ! எங்கே போனுலும் நமது பிராணனுக்கே ஹானிவருகின்றதே! அப்பாவி முஞ்ஜனே இராஜ்ஜியத்திற்காசைப்பட்டு என்னைக் கொல்லப்பார்த்தனன்! அதினின்றுந் தப்பித்துக்கொண்டேன்! தனது ரகசியங்கள் வெளிவந்து விடுமோவென்று அப்பில்லராஜன் மனைவி என்னைக்கொல்லப் பார்த்தனள்! அதினின்றுந் தப்பித்துக்கொண்டேன்! இப்பொழுது தெய்வமே என்னைக் கொல்லப்பார்க்கின்றதே! இதினின்

றும் எப்படித் தப்பிப்பிழைப்பேன் ? ஈசுவரன் தான் என்னைக்காப்பாற்ற வேண்டும். ஹே ஈசா ! (பாடுதல்)

(ரு) இராகம் -கமாஸ்- ஏக - தாளம்.

பல்லவி.

காவாய் ! காவாய் !! - கருணாஜலதே !

அநுபல்லவி.

தேவே ! தேவே !! - தியங்கிடுமென்னை !

சரணங்கள்

ஆநந்தக்கொடியே - அற்புதத்தேனே!
நிநதயாநிதே - தீருமென்குறையை !— காவா.
ப்ராணனுட் பிராணனே - ப்ரஹ்லாத ரக்ஷகனே!
த்ராணஞ் செய்வா யென்னைத் - த்ரைலோக்யநாதனே!— கா.
அரஹரசிவசிவ - அநகவுமாபதே!
அருளமுதந்தந் - தவணஞ்செய்வா யென்னை !— காவா.

(திரும்பியும்பிரவேசித்து)

**கோவிந்தபண்டிதர் :—**(பரபரப்புடன்) அப்பா ! எங்கெங்கேயோ சென்றேன். மஹா அக்கினிஹோத்திரியான ஒரு பிராம்மணோத்தமர் மாத்திரங் கிடைத்தனர். மற்றொன்றுங் கிடைக்கவில்லையே !

(பிரவேசித்துப் பரபரப்புடன்)

**சுந்தரி :—**இதோ கொஞ்சம் விறகு இருக்கிறது! (விறகைக் கட்டாகக்கட்டிக்கொண்டு வைத்தல்)

**கோவிந்த :—**(நோக்கி) சரி ! இந்த விறகு போதும்! மற்றவை வேண்டுமே ?

**போஜ :—**ஆயின் இப்பொழுது அவசியமாய் வேண்டியது யாதோ ?

**கோவிந்த :**—கொஞ்சம் நெய்யுந் திரவியமுந்தான்வேண்டும். தர்ப்பை சமித்துகளுடன் அப்பிராம்மணோத்தமர் வந்துவிடுவார். அவரை வைத்துக்கொண்டு மற்றவைகளை நடத்திவிடுவேன்.

**போஜ :**—எங்கேயாகினும் சமீபத்திற் கடைகளிருக்கின்றனவோ?

**கோவிந்த :**—ஆதித்தியவர்ம மஹாராஜருடைய பட்டணத்திற் கடைகளுக்கென்னகுறை? பணமிருந்தால் வேண்டியனவெல்லாங் கிடைக்கும்!

**போஜ :**—அப்பட்டணம் எவ்வளவு தூரத்திலிருக்கின்றதோ?

**கோவிந்த :**—இதோ இவ்விடத்திலிருந்து கால்குரோசமிருக்கும்.

**போஜ :**—அப்படியாயின், யான் ஒரு க்ஷணத்திற்சென்று வேண்டியவற்றை வாங்கிக்கொண்டு வருகின்றேன்! தாங்கள், அதற்கு முன்னதாக என்ன செய்யவேண்டுமோ அவற்றையெல்லாம் செய்து வைத்துக்கொள்ளுங்கள்!

**கோவிந்த :**—அப்பா! மற்றவையெல்லாம் ஒரு க்ஷணத்திற் சித்தப்படுத்திவிடுவேன்; (நோக்கி) அப்பிராம்மணோத்தமரும் இதோ அக்கினிகுண்டத்தை எடுத்துக்கொண்டு வருகிறார்! சீக்கிரஞ்சென்று வாங்கிக்கொண்டு வருவாய்!

**போஜ :**—இதோ நிமிஷநேரத்தில் வந்து விட்டேன்! (சீக்கிரமித்தல்.)

**கோவிந்த :**—ஸோமசுந்தரசாஸ்திரிகளே, வரவேண்டும்!

(**ஸோமஸுந்தர சாஸ்திரி,** தர்ப்பைசமித்துகளுடன், அக்கினிகுண்டத்தையெடுத்துக்கொண்டு பிரவேசித்தல்.)

**ஸோம :**—மற்ற ஸாமக்கிரியைகள் வந்துவிட்டனவோ?

**கோவிந்த** :—இல்லை! அப்பிள்ளையாண்டான் போயிருக்கின்றான்! சீக்கிரத்தில் வந்துவிடுவன்! தாங்கள் ஆரம்பித்துவிடுங்கள்! நானுஞ் ஸ்நானஞ்செய்துவிட்டு ஒரு க்ஷணத்தில் வந்துவிடுகின்றேன்.

**ஸோம** :—கொஞ்சம் தீர்த்தம் மாத்திரம் வேண்டும்.

**கோவிந்த** :—யாரடியங்கே? ஒரு செம்பிலே மடியாய்த் தீர்த்தங்கொண்டுவா!

(நேபத்தியத்துள்.)

இதோ கொண்டுவந்துவிட்டேன்!

**கோவிந்த** :—சரி! நான் போய் வரட்டுமா?

**ஸோம** :—அப்படியே செய்கிறது! சீக்கிரம் வந்துவிடுங்கள்!

**கோவிந்த** :—ஒரு க்ஷணத்தில் வந்து விடுகின்றேன். (நிஷ்கிரமித்தல்).

(பிரவேசித்து.)

**சுந்தரி** :—இதோ தீர்த்தம்!

**ஸோம** :—இப்படித்தான் வைத்துச் செல்லுங்கள்! (சுந்தரி உள்ளேபோக, உட்கார்ந்து, ஆசமனஞ்செய்துவிட்டு, அக்கினிகுண்டத்தைக் கீழேவைத்து தர்ப்பைகளைப்பரப்பி, நெருப்பை மூட்டிக்கொண்டிருத்தல்.)

(பிறகு **ஹரிஹரரை** முன்னிட்டுக்கொண்டு, விசீதவேஷத்துடன், **ஸாவித்திரீதேவியார், சாருமதிதேவியார், விலாஸவதி தேவியும்** பிரவேசித்தல்.)

**சாருமதி** :—அடிகாள்! தங்களுக்கு வெகு சிரமத்தைக் கொடுத்துவிட்டோம். நாம் அவ்விடத்திற்கண்டதபோவனம் இவ்வளவு தூரமிருக்குமென்று யாம் நினைத்திலேம். ஒரு வேளை நாம் வழிதப்பிவந்துவிட்டோம் போலிருக்கின்றது! இவ்விடத்தை நோக்கில் 'இஃதொருபாலைவனம் போற்றோற்றுகின்றதே!

* 'விரிந்தசெங் கமர்களும் வெயிலின் வெந்துகீழ்
சரிந்தமண் டபங்களும் சருகு வெந்துமேற்
பொரிந்தமா மரங்களும் புகைந்து பார்மிசை
எரிந்தெழு கடுஞ்சுரத் தெல்லையெய்தினோம்!' (௧௩)

ஸாவித்திரி:—ஆம்! நாம் வழிதப்பித்தான் வந்திருக்க வேண்டும். அன்றேல் உதித்து நாலுநாழிகைப் பொழுதிற்குப் புறப்பட்ட நாம், உச்சிப்பொழுதாகியும் ஆச்சிரமத்திற்கு வராமலிருப்பது விந்தையே! மேலும், ஒரு நாளுமில்லாமல் இன்று அகோரமாய்க் கொளுத்துகின்றதே வெயில்!

விலாஸவதி.—ஆம்! ஆயினும், இவ்வெயிலே இவ்வனத்திற்கு எவ்வளவு சோபையையுண்டு பண்ணுகின்றது பாருங்கள்!

* "அந்தவெயி லத்தகல் விசும்பிடை வெடித்துவிழு
மாலையினெடுந்
தந்தமணி யைத்துளி யெனக்கருதி யுண்டுழல்வ
சாதகமெலாம்!
வெந்தெரி கொளுஞ்சரு கெழுந்துவிழு கங்குலில்
விரிந்தநிழலில்
வந்தடரு மெண்குமரை யுங்கடகை யுங்கலையு
மானினமுமே!" (௧௪)

ஹரிஹரர்:—ஸகல தேசங்களிலுஞ் சஞ்சரித்துப் பழக்கமுள்ள எனக்கே இவ்வெயிலில் கால்கள் துடிக்கின்றனவே! பாலியம் முதற் கஷ்டமென்பதே இன்ன தென்றறியாமல், எப்பொழுதும் பஞ்சணையின்மீதும், இரத்தினக்கம்பளங்களின் மீதுமேயுலாவிவந்த நுங்களது மெல்லியபாதங்கள் இக்கொடு வெயிலில் நடப்பதனால் எவ்வளவு நோவெய்தினவோ?

* அரிச்சந்திரபுராணம்.

**ஸாவித்திரி**:—ஆம்! விரைந்து செல்வோமென்றாலும், கண்ணுக்கெட்டியவரையிலும் அத்தபோவனம் காணப்படவில்லையே.

**சாருமதி**:—ஆகலின் நாம் என்னசெய்வோம்? குழந்தாய் உனக்கு எவ்வளவு கஷ்டத்தைத் தருகிறோம்.

**விலாஸவதி**:—என்னருமைத்தாயே! எனக்கொன்றும் கஷ்டமில்லை. ஆயினும் பெரியோர்களான உங்களுக்கெல்லாம் மகத்தான சிரமத்தைத் தந்துவிட்டேன். இப்பாவியின் ஜன்மம் பெரியோர்களை வருத்துவதற்காகவே ஈசனால் சங்கற்பிக்கப்பட்டது போலும்? இல்லாவிடில், இவ்வித நிந்தைகளுக்கெல்லாம் ஆளாகியும் எனது பிராணன்கள் வஜ்ஜிரத்தினாற் செய்யப்பட்டவைபோற் கொஞ்சமேனுங் கலங்காமல் நிற்கின்றனவே!

**ஸாவித்திரி**:—ஐயோ! நாமெங்குச் சென்றால் தானென்ன? என் செல்வனிருக்கும் இடமே தெரியவில்லையே! அவனை நான் திரும்பியும் இக்கண்களினாலும் பார்ப்பேனோ?

**விலாஸவதி**:—அந்தோ! விதித்தகாலத்திலல்லாமல் மரணம் நேரிடாதென்று பெரியோர்கள் சொல்வது வாஸ்தவமே! அதற்கு நானே நிதர்சனமாயிருக்கின்றேன்! என் பிராணநாதரைவிட்டகன்றும் யான் இன்னும் ஜீவித்திருக்கின்றேனன்றோ? அப்பாவி முஞ்ஜனால் எவ்வளவு கஷ்டங்களையெல்லாமடைந்தும் அவற்றையெல்லாம் பொறுத்து இக்கல்லுடல் கரையாதிருக்கின்றதே! (பாடுதல்).

(௪) இராகம் - நீலாம்புரி - - தாளம் - திரிபுடை.

பல்லவி.

ஆ ஹந்தா! வென் ஸந்தாபத்தை
ஆருடனறைவேன்!—

அநுபல்லவி.

மோஹத்தால் மாமனை நம்பி
முழுமோசம் போனேன்!— ஆ.

சரணங்கள்.

சிந்தை நைந்துருகியான்
  தியங்குகின்றனே,
வந்தென்னைக் காவாவிடில்
  மனம் மகிழ்வேனோ?— ஆ.
நாதா! உன்றன் முகத்தை
  நான் காண்பதென்றோ?
பாதகி யானிங்கே
  பரிதவிக்கின்றேன்!— ஆ.
பாவி என்கொடுமையாற்
  பட படக்க வெயில்,
ஆவி சோர்ந்தார்யபுத்ரர்
  ஐயோ வலைகின்றாரோ!— ஆ.
கல்லினுங் கடினமாய்க்
  கரைந்துருகா தென்றன்
பொல்லாத பிராணந்தான்
  போகவில்லையே யந்தோ!— ஆ.

சாருமதி:—என் கண்மணீ! இவ்வுடல் என் செய்யும்? இருத்தலும் சாதலுந் தெய்வச்செயலன்றோ?

விலாஸவதி:—என் அன்னையே! என் பிராணநாதரைப் பறந்தோடும்படி செய்தேன்! என் பெரியோர்களை என்விஷய மாய்ப் படாதபாடுகளையெல்லாம் படும்படி பண்ணிவைத்தேன்! என் சீலத்தைக் கெடுக்கவந்த அப்பாதகனால் மஹாபயமடைந் தேன்! என் அருமைமாமியோடு சிறைச்சாலையில் அளவற்ற கஷ்டங்களை யெல்லாம் பட்டேன்! இவற்றிற்கெல்லாம் சலித் ததோ என் தக்தஹிருதயம்! மேல் விழுந்த இடியைச் சட்டை பண்ணாமல் நிற்கின்ற பர்வதசிகரம்போல், இவ்வளவு துக்கங் களையெல்லாமடைந்தும் இன்னு மெவ்வளவு வந்தபோதிலும்

சலியேனென்று சொல்வதுபோல் ஸ்திரமாயமைக்கப்பட்டிருக்கின்றதன்றோ என் பிராணன்!

**ஹரிஹரர்:**—ராஜபுத்திரீ! சகல நீதிகளையுமறிந்த நீயே இப்படிவருந்துவது தக்கதன்று! உனக்கு ஒரு குறையும் வாராது! ஈசனது அருளால், கணவனை நீ வெகு சீக்கிரத்தில் யடையப்போகின்றாய்!

**விலாஸவதி:**—அது துர்லபம்! துர்லபம்! இப்பாவியேன்மீதும் ஈசனுக்கருள் உண்டாகுமோ?

**ஹரிஹரர்:**—அடி பேதாய்! ஈசன் உன்னைப்போன்ற மஹாபதிவ்ரதைகளுக்கு உதவி செய்யாவிடில், பின்யாருக்குத்தான் செய்வர்?

**விலா:**—அல்ப பாக்கியமுடையவளான யான் அம்மகானுபாவரையு மடையப்பெறுவேனோ? ஆசையினாற் பத்தப்பட்டு என்னன்பரைப்பறிகொடுத்தேனே! பாவியேன் நானன்றோ அப்புருஷோத்தமருடைய நாசத்திற்குக் காரணமானேன்!

**ஸாவி:**—அடிபேதாய்! என் இவ்வாறெல்லாம் வீணாய்ச் சிந்திக்கின்றனை? உன் பாதிவ்ரத்தியமகிமையே என்செல்வனைச் சகல ஆபத்துக்களினின்றும் ரக்ஷிக்குமே! அவனுக்கு ஒரு குறையும் நேரிடாது! மனத்தைத் திடஞ்செய்து கொள்!

**விலா:**—என்னருமை மாமி! என்மனம் எப்படித் திடங்கொள்ளும்! என் பிராணபந்து இந்நேரம் உயிருடனிருப்பாராயின், தாங்கள் படும் இத்தனைதுயரங்களைக்கண்டுஞ் சும்மாவிருப்பரோ? அவர் பிராணனுடனிருப்பாராயின், அவர் இருக்குமிடமாயினுந் தெரிந்திருக்குமன்றோ! ஏது? ஏது? அப்பாதகன் முஞ்ஜனாற் கொலையுண்டுதான் இறந்திருக்கவேண்டும்!

**ஸாவித்திரி:**—பக்தஸம்ரக்ஷகர் என்று காரணப்பெயர் பூண்ட ஹே பிரணதார்த்திஹர! ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்கா

கவிரைந்து சென்று துஷ்டநிக்கிரகஞ்செய்யும் ஹேசரண்ணிய! எங்கள் விஷயத்தில் நுமது கல்யாணகுணங்களெல்லாம் மித்தியையாகக் காணப்படுகின்றனவே! நும்மையே தஞ்சமென்று அடுத்திருக்குமெங்களைத் தேவரீர் மறந்துவிட்டீரோ? எங்களுடைய பிரலாபங்கள் தேவரீருடைய செவிகளிற்படவில்லையோ? ஐயோ! காண்கிலேனே என் செல்வனை! உயிருடனிருப்பனோ என் கண்மணி! பாவியேன் யான் அச்சிறைச்சாலையிலேயே மடிந்திருக்கலாகாதா!

* 'பிறியார் பிறிதல் பெரியோய் தகவோ
நெறியோ நிலைநீ நினையாதிருத்தல்?
வறியோர் தனமே தமியேன் வலியே
அறிவோ வினையோ அரசே அரசே!' (௧௫)

விலா:—(சோகாக்கிராந்தையாய்) ஹா ஸர்வலோக மஹேசா! ஸத்தியபரிபாலனத்தையே விரதமாகக்கொண்ட ஹே தர்மஞ்ய! சரணமடைந்தாரை ரக்ஷிப்பதற்காக ஸர்வஸ்வத்தையுந் துறக்கத்துணிந்த ஹே ஸர்வஜீவகாருண்ய! துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனார்த்தம் நீண்ட திருக்கைகளையுடைய ஹே புருஷோத்தம! பௌலகேசிமுதலான சத்ருவீரர்களையெல்லாம் க்ஷணத்தில் நிபாதஞ்செய்த நுமக்கு இவ்வேழைகளை ரக்ஷிப்பதற்குக் கைநீளவில்லையோ? கற்பழிக்கவந்த காதகனைக் கண்டிப்பது தர்மபரிபாலனமாகாதோ? ஹா! நாதா! காணேனே நுமது திருக்கைகளை! ஹா! பிராணபந்தோ! மறந்துவிட்டீரோ எங்களை?

* 'திரையார் கடல்சூழுலகின்
தவமே! திருவின் திருவே!
நிறையார் கலையின் கடலே!
நெறியார் மறையின் னிலையே!

* கம்பராமாயணம்.

கரையா வயர்வே மெமைநீ
 கருணை லயனே யெனினென்
றுரையா யிதுதா னழகோ
 வுளனோ ரடியே மலைதல் ?' (௧௬)

சாரு:—(விலாஸவதியைத்தழுவி) ஆ என்கண்மணீ! ஏன் இப்பாவியின் வயிற்றிற் பிறந்தனை? ஆ சகோதரா! உனது தந்திரமே தந்திரம்! ஓர் அற்ப ராஜ்ஜியத்திற்காசைப்பட்டு என்னென்ன வெல்லாஞ் செய்யத்துணிந்தனை ?

ஹரி:—அம்மணீ! சகலதர்மங்களையுமறிந்த தாங்களே இவ்வாறெல்லாம் விசனப்படுவது தகுதியன்று!

* "ஆக்கமும் வறுமை தானு
 மல்லலு மகிழ்வு மெல்லா
நீக்கமில் லுயிர்கட் கென்று
 நிலையெனல் கொள்ளற் பாற்றோ!
மேக்குயர் கடவுட் டிங்கள்
 வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவு நாளு
 முறைமுறை பொருந்திற் றன்றே!" (௧௭)

விலா:—(வாமாட்சிஸ்பந்தனத்தை நடித்து) ஆ! இஃதென்ன திடீரென்று எனது இடக்கண் துடிக்கின்றதே?

ஹரி:—சுபம்! சுபம்!

விலா:—இந்த மந்தபாக்கியைக்கும் சுபம் கிடைக்கப் போகின்றதோ?

ஹரி:—அம்மணீ! சுகமுந் துக்கமும் மகான்களுக்கு இயல்பாயுள்ளனவன்றோ? ஆகலின் நன்னெறி பிறழாத நமக்கு நலம் சித்தமாய்க்கிடைக்கவே போகின்றது.

* கந்தபுராணம்.

ஸாவி:—ஐயோ! கால்கள் பொரிந்து போகின்றனவே! எங்கேயாகிலும் ஓரிடத்திற்றங்குவோமென்றால், கண்ணுக் கெட்டியவரையினும் ஓர் ஊருங்காணப்பட வில்லையே!

ஹரி:—அம்மணீ! நீங்கள் இம்மாமரத்து நீழலிற் சற்றுத் தங்கியிருங்கள்! நான் சென்று ஸமீபத்தில் ஏதாயினும் ஊர் இருக்குமோ வென்று பார்த்து வருகின்றேன்.

சாரு:—ஆம்! அப்படிச் செய்வதுதான் யுக்தம். (ஹரி ஊர்தேடப்பிரமிக்க, மற்றைய மூவரும் மரத்தடியிற் சென்று உட்காருதல்.)

(பரபரப்புடன் பிரவேசித்து)

கோவி:—சாஸ்திரிகளே! எல்லாம் சித்தமாயினவோ?

ஸோம:—ஸகலமும் ஸித்தமாய் விட்டன. இந்த ஸர்ப்ப ஹோமத்திற்குப் பூர்வாங்கமாகிய விக்நேச்வர பூஜைமுதலிய கிரியைகளும் முடிந்துவிட்டன. இனிமேல் ஸங்கல்பம்பண்ணிக்கொண்டு முக்கியாஹுதி பண்ணவேண்டியது தான். நெய் வந்துவிட்டால் தொடங்கிவிடலாம். அதுவாராததுதான் தாமஸம்.

கோவி:—அந்தோ! அப்பொழுது சென்ற அப்பிள்ளையாண்டான் இன்னும் நெய்வாங்கிக்கொண்டு வாராமலிருப்பதற்குக்காரணம் யாதோ? நாழிகையாய் விடுகின்றதே! இம்முகூர்த்தம் அதிக்கிரமித்துவிட்டால் ஸர்வப்ரயத்தனமும் வ்யர்த்தமாய்விடுமே! (சுற்றி நோக்கி) இதோ யாரோ இம்மரத்தடியில் வெயிலினால்வருந்தப்பட்டு விச்ரமிக்கின்றனர் போலும். இவர்களைக்கேட்டால் ஏதாயினுந்திரவியங் கிடைக்குமென்று தோன்றுகின்றது. (அருகிற் சென்று) யாவரோ உயர்குலத்திலுதித்த ஸ்திரீகள் போலிருக்கின்றனர்! (பிரகாசமாய்) புண்ணியவதிகாள்! இங்கொரு இராஜகுமாரனுடைய பிராணனை ஸர்ப்பத்தினின்றும் காப்பாற்றுவதற்காக ஒரு ஸர்ப்பஹோமம்பண்ண வேண்டியிருக்கின்றது. அதற்காகக்கொஞ்சந் திரவியமிருந்து கொடுப்பீர்களாயின், அவனதுபிராணனைக்காப்பாற்றியவளாவீர்கள்!

சாரு:—ஐயோ பாவம்! இந்தாருங்கள்! (நான்கு நாணயங்களைக் கொடுத்து) பாவம்! எந்த ராஜகுமாரனையோ?

கோவி:—அடே பையா ராமகிருஷ்ணா! இங்கே சீக்கிரம் ஓடிவாடா!—அம்மணீ! இந்தப் பேருதவிக்கு நான் தங்களுக்கு என்னபிரதி செய்யப்போகின்றேன்.

(வேகமாய்ப் பிரவேசித்து)

ராம:—என் அப்பா! எதுக்குக்கூப்பிட்டே?

கோவி:—(ஒரு நாணயத்தைக்கொடுத்து) இதை எடுத்துக் கொண்டுபோய்ச் சீக்கிரம் ஒரு வீசைநெய் வாங்கிக்கொண்டு ஓடிவா!

ராம:—நெய்யா! இதோ ஒருநிமிஷத்தில் வந்து விட்டேன்! (நிஷ்கிரமித்தல்.)

ஸாவி:—
விலா:— } எந்த இராஜகுமாரரோ?

கோவி:—எந்த இராஜகுமாரனா!— இந்நகரில் இப்பொழுது எவனைப்பற்றிப் பிரமாதமான யுத்தம் நடக்கப் போகின்றதோ அந்த ராஜகுமாரனே!

சாரு:—இந்நகரின் பெயர் யாதோ? அஃது இன்னும் எவ்வளவு தூரமிருக்கின்றதோ?

கோவி:—அம்மணீ! இதுதான் ஆதித்தியவர்ம மஹாராஜர் ஆளும் உஜ்ஜயினீநகரம்.

விலா:—(சந்தோஷமாய்) உஜ்ஜயினீ நகரத்திற்கே தான் நாம் வந்தோமோ!—அடிகாள்! அந்த இராஜகுமாரர் இப்பொழுது எங்கே இருக்கின்றனரோ?

கோவி:—அம்மணீ! அவன் இருக்கு மிடம் ஒருவருக்குந் தெரியவில்லை. அவ்விளங்குமரன் தன் சிற்றப்பனால் இராஜ்ஜியத்தினின்றும் மோசடியாத்துரத்தப்பட்டு எங்கேயோ செ

ன்றனனும். ஆயினும் அவனது பிராணநேசராகிய காளிதாசர் என்பவர் ஒருவர் மாத்திரம் அவன் உயிருடனிருப்பதாகச் சொல்லுகின்றார்! ஆனால், அவருக்கும் அவ்விராஜ குமாரனிருக்குமிடந் தெரியவில்லையாம்.

ஸாவி:—(சாங்கிதமாய்) ஆ! இஃதென்ன! விந்தையாயிருக்கின்றது! ஒருவேளை என் செல்வன்தான் இவ்விராஜகுமாரனுயிருப்பனோ?—(பிரகாசமாய்) ஐயா! அவ்விராஜகுமாரன் எந்த நகரத்தைச் சேர்ந்தவனோ? அவனது பெயர் யாதோ?

கோவி:—அவனது பெயர் தெரியாதவர் யாவர்? அத்தர்மராஜனது பெயரை ஒருதரஞ்சொன்னால், வருமிடையூறுகளெல்லாம் ஊழிக்காற்றிற் பூழிப்பஞ்சுபோலாகுமே!

(போஜன் தள்ளாட்டங்கொண்டு ராமகிருஷ்ணனுடைய தோளைப்பற்றிக்கொண்டு செப்பபாத்திரத்துடன் பிரவேசித்தல்).

கோவி:—(போஜனை நோக்கி) அப்பா! ஏனிவ்வளவுதாமஸம்? (செப்பைக் கையில் வாங்கிக்கொண்டு) ஏனொரு மாதிரியாயிருக்கின்றாய்! இதோ இப்படி உட்கார்ந்துகொள் (போசன் அவ்விடத்தில் ஒரு புறமாய் உட்கார) சாஸ்திரிகளே சீக்கிரம் ஆரம்பித்துவிடுங்கள். அம்மணி! நீங்களுமிங்கேவந்து உட்காரலாம்!

ஸோம:—இதோ அப்படியே! (ஆசமனஞ்செய்து பிராணாயாமம்பண்ணி ஸங்கல்பம் சொல்லுதல்).

ஸாவி:—(சாங்கிதமாய்) இச்சிறுவன் யாவனோ? இவனைப்பார்க்கும் பொழுதே என்கண்மணி போஜனைப் பார்ப்பதுபோலிருக்கின்றது!

சாரு:—ஆம்! ஆயினும் இவனது உடையைப்பார்த்தால் யாரோ பரதேசி போலிருக்கின்றனனே!

விலா:—(ஆன்மகதமாய்) இவரது முகம் என் இப்படி தைந்நியத்தை யடைந்திருக்கின்றதோ? ஒருவேளை இவர்தாம் அவ்விரா

ஜகுமாரரோ ?—அஃதெங்ஙனங்கூடும்! அவரிருக்குமிடம் யாருக்குந்தெரியாதென்று சொன்னரே! (மூவரும் மண்டபத்தில் வந்துட்காருதல்.)

ஸோம :—என்ன! ஆரம்பித்துவிடலாமோ இல்லையோ?

கோவி :—அதற்கென்ன தடை? இவ்வுத்தமிகளுடைய பேருதவியினுல், ஸகலமும் நிர்விக்னமாகவே முடியும்.

ஸோம :—அதற்கையமுண்டோ ?—ஓம்! அத்ய ஸ்ரீ பகவதச்சேஷசாயிந: ப்ரஸாதஸித்யர்த்தம் ஸ்ரீ போஜகுமாரஸ்ய ஸர்ப்பபயநிவாரணார்த்தம், ஸமஸ்தாரிஷ்ட விநாசார்த்தஞ்ச ஸர்ப்பஹோமம் ஹோஷ்யாமி, ஹோமஸம் ரக்ஷணார்த்தம் ப்ராஹ்மாணந் த்வாம் வ்ருணே. (தர்ப்பையைக் கொடுத்தல்.)

கோவி:—ததாஸ்து!(போஜனை நோக்கி) அப்பா! ஏன் சாய்கின்ருய்?ஒருவேளை உனக்குப் பயமாயிருந்தால் உள்ளே போகலாம்!

போஜ :—அஃதொன்றுமில்லை! தாங்கள் சமீபத்திலிருக்கும்பொழுது யாருக்குத்தான் பயம்? அடியேனுமிந்த ஹோமத்தைப்பார்த்துக் கொண்டிருக்கும்படி தாங்கள் திருவுளஞ்செய்யவேண்டும்!

கோவி :—ஆனுல் சரி! இப்படியே ஒருபுறமாய் உட்கார்ந்துகொள்? (போஜன் அப்படியே உட்காருதல்).

சாரு :—அக்கா! இச்சிறுவனுடைய குரலைக்கேட்டீர்களோ?

ஸாவி :—என்னவோ? இவ்விளங் குமாரனைப் பார்க்கப் பார்க்க என்மனத்தில் தோன்ருத எண்ணங்களெல்லாந் தோன்றுகின்றன!

விலா :—ஆ! எனக்கு மப்படியே தோன்றுகின்றன.

ஸோம :—(ஸர்ப்பங்களை ஆக்வானம் பண்ணிக்கொண்டு) ஓம்!

“ ஆயாஹீந்த்ரபதிபிரீளிதேபிர்
யஞ்யமிமம் நோபாகதேயம் ஜுஷஸ்வ;
த்ருப்தாம் ஜுஹுர் மாதுளஸ்யேவ யோஷா
பாகஸ்தே பைத்ருஷ்வஸேயீ வபாமிவ! ()

யசஸ்கரம் பலவந்தம் ப்ரபுத்வம்
தமேவராஜாதிபதிர் பபூவ;
ஸங்கீர்ணநாகாச்வபதிர் நராணாம்
ஸுமங்கல்யம் ஸததம்தீர்க மாயுஃ!” (கக)

போஜ:—(ஆன்மகதமாய்) அந்தோ! இஃதென்ன மயக்கம் போல் வருகின்றதே!

ஸோம:—ஓம்!

“ நமோ அஸ்து ஸர்ப்பேப்யோ
யேகேச ப்ருதிவீமநு;
யே அந்த ரிக்ஷே யேதிவி
தேப்யஸ் ஸர்ப்பேப்யோ நமஃ!” (உ0)

ஓம் தக்ஷகாய ஸ்வாஹா! ஓம் தக்ஷகாயேதந் நமம! (அக்னியில் ஆகுதிசெய்தல்)

போஜ:—(ஆன்மகதமாய்) ஆ! இஃதென்ன! என்னை அறியாமலே என் தேகம் சோர்வடைகின்றதே! வாய் உலர்கின்றது! எனது அங்கங்கள் கம்பமடைகின்றன! உட்கார்ந்திருப்பதற்குக் கூடச்சக்தியற்றவனாயிருக்கின்றேனே! எவ்வளவு திடஞ்செய்துகொண்டாலும் எனதுமனம் பிரமையடைதல் போலிருக்கின்றதே!

ஸாவி:—(சகார்திகமாய்) இச்சிறுவனைப்பார்த்தால் ஏதோ வருத்தமுற்றவன் போற்றோன்றவில்லையா?

சாரு:—(சகார்திகமாய்) ஆம்! அப்படித்தானிருக்கவேண்டும்!

'சோர்ந்த யாக்கையும் சோர்ந்த முடியும்
கூர்ந்த வியர்வுங் குறும்பல் லுயாவும்
வற்றிய வாயும் வணங்கிய வுறுப்பும்
உற்று நோக்குவோர்க் குண்மை விளங்குமே!'()

விலா:—(ஆன்மகதமாய்) அந்தோ! இவருடைய வருத்தத்திற்குக்காரணம் யாதோ? இவரைப்பார்க்கப் பார்க்க ஏனோ எம்மனம் இவரிடத்திற் பத்தப்படுகின்றதே!

ஸோம:—ஓம்!

"யேதோரோசநேதிவோ
யேவாஸூர் யஸ்ய ரச்மிஷு;
யேஷா மப்ஸு ஸதஸ் க்ருதம்
தேப்யஸ் ஸர்பேப்யோ நம:!" (௨௨)

ஓம் வாஸூகயே ஸ்வாஹா! ஓம் வாஸூகயேஸர்பராஜாயே தந் நமம! (மறுபடியும் ஆஹூதிசெய்தல்)

போஜ:—(ஆன்மகதமாய்) அந்தோ என்னை எங்கேயோ தூக்கிக்கொண்டு போகின்றதே! ஈசா! என்னை நீ தான் காப்பாற்றவேண்டும்!

சாரு:—ஏன் இச்சிறுவனுடையதலை யாட்டங்கொள்கின்றது?

கோவி:—அப்பா! பயப்படுகின்றனையோ? வேண்டுமாயின் என்னெதிரில் உட்கார்ந்துக்கொள்! இதோ ஹோமமும் முடிவதற்காயிற்று! இன்னமோர் ஆஹூதிதான்!

ஸோம:—ஓம்!

"யா இஷவோ யாதுதாநாநாம்
யேவாவநஸ்பதீரநு;

யேவா வடேஷு சேரதே
தேப்யஸ் ஸர்ப்பேப்யோ நம: !" (உ௩)

ஓம் அநந்தாயஸ்வாஹா! ஓம் அநந்தாயாதிசேஷாயேதந்நமம !
(பூர்ணாஹுதி பண்ண, ஒரு ஸர்ப்பம் போஜனது தலைமீதுபட்டு அக்கினியில் வீழ்ந்து பஸ்பமாதல்).

போஜ:—ஹா அப்ப! (மூர்ச்சித்து வீழ்தல்).

யாவரும்:— ஹா! ஹா!! ஹா!!!

கோவி :—இஃதென்ன! ஆச்சரியமாயிருக்கின்றது!

விலா:—ஐயோ ! இவர் திடீரென்று கீழேவிழுந்து விட்டனரே!

சாரு:—அந்தோ! ஸர்ப்பந்தீண்டிவிட்டது போலிருக்கின்றது?

விலா:—உயிருடன் பிழைத்திருப்பரா?

கோவி:—(போஜனைத்தடவிக்கொண்டு) ஆ கஷ்டம்! (ஏக்கத்துடன்). சாஸ்திரிகளே! நிச்வாஸம் வரவில்லையே! இஃதென்ன சங்கடம்! இவனை ஸர்ப்பந்தீண்டுவதற்குக் காரணமென்ன?

சாரு:—ஒருவேளை இவன் தான் அவ்விராஜகுமாரனோ?

கோவி:—ஐயோ! கைகால்களெல்லாந் தடித்து விட்டனவே! பிராணன் போய்விட்டது போலிருக்கிறதே!

சுந்தரி:—ஐயோ! கொஞ்சந் தீர்த்தங்கொடுங்களேன்!

ஸோம:—என்ன ஆச்சரியமாயிருக்கின்றது! அச்சிறுவனே விழுந்துவிட்டனன்!

கோவிந்த :—(தீர்த்தகலசத்தை வாங்கி, போஜனதுவாயில் கொஞ்சம் தீர்த்தத்தைவிட்டு) அந்தோ! தீர்த்தங்கூட இறங்கவில்லையே!

யாவரும்:—(போஜனருகிற்சென்று) ஹா! கஷ்டம்!

ஸாவி:—ஐயோ! வியர்வை கொட்டுகின்றதே! யாராவது துடையுங்களேன்?

கோவி:—(மேல் சாலியங்கியைக் கழற்றி ஆச்சரியத்துடன்) ஆ! இவனே அவ்விராஜகுமாரன்?

ஸாவி:—(சோகித்து) அந்தோ! என் செல்வன் போஜனே! (மூர்ச்சித்து வீழ்தல்).

விலா:—என் பிராணபந்துவே! (மூர்ச்சித்து வீழ்தல்).

சாரு:—என் கண்மணியே! (மூர்ச்சித்து வீழ்தல்)

கோவி :—(சோகங்கொண்டு) இது கருணைத்புதமாகவல்லவோ இருக்கின்றது ! அந்தோ ! இந்த ஸாத்விகள் இச்சிறுவனுக்கு வேண்டியவர்களே ! (சோகித்து) நமது நாட்டின் ராஜஸ்திரீகளே ! ஐயோ ! இவர்களும் மூர்ச்சித்து வீழ்ந்து விட்டனரே ? இப்பெருஞ்சங்கடத்திற்கென்ன செய்வது ?

ஸோம :—(போஜனைத்தடவி) இருங்கள் ! அவசரப் படாதீர்கள் ! (கைபிடித்து நிதானித்து) இவனது பிராணனுக்கு ஓர் அபாயமுமில்லை. இவ்வாஜ்ஜிய சேஷத்தைப் புரோக்ஷித்தால் உடனே எழுந்துவிடுவான். (திரும்பியும் ஹோமம் பண்ணினவிடத்திற்குச் சென்று ஆஜ்யதொன்னையையெடுத்து மந்திரத்தினால் பாவனஞ்செய்தல்.

சாரு :—(கண்விழித்துப் போஜனைத் தழுவிக்கொண்டு) ஆ ! என்னருமைக்கண்மணியே ! இவ்வேழைகளைக் கண்ணெடுத்துப்பாராயோ ? (பாடுதல்).

(௬) இராகம் - முகாரி - தாளம் - ரூபகம்.

பல்லவி.

எப்படி உயிர்த்திருப்போம் - என் செல்வனே !
எப்படி உயிர்த்திருப் போம் !

அநுபல்லவி.

அப்பாதகன் முஞ்ஜன் - அரியகையினின்றுந்
தப்பினையென்றன்றோ-தனுவையாம் விடவில்லை!— எப்.

சரணம்

எவ்வித விடையூறு - மிலேசாயெண்ணுமுனக்
இவ்வித ஆபத்து-எங்கிருந்தணுகிற்றோ ?
செவ்விதழ்க் கமலத்தைத் - திரஸ்காரஞ் செய்யுமுன்றன்
பவ்விய முகசந்த்ரன் - பாவிக்கவில்லையே!— எப்

விலா:—(கண்விழித்துப் போசனைநோக்கி) ஆ ஹா! இஃதென்ன விந்தை ! (பாடுதல்).

(க) இராகம் - முகாரி - தாளம் - ஆதி.

பல்லவி.

என்னன்பர் - இவர்தாமோ
இன்னம்சிறிதேனுந் - தெரியவில்லையே!

அநுபல்லவி.

மன்னவன் சுதராகில்
மன்னிப்பாரோ வென்னை!— என்

சரணம்.

என்காந்தா! என்றோடுண்டோ வைரம்
இல்லா விட்டால்
என் காலக்கேடே இப்பிரகாரம்
என் பிராணே சர்க்கு
வன்காட்டில் யார்காண் பரிவாரம்
வன்பிழைசெய்தாலும்
உன் கான் மலரன்றோ ஜீவாதாரம்
உமக்கும் சிருங்காரம்

பாபமே தாபகாரணம்
கர்மமே மர்மதாரணம்
அதினினும் நன்துமாரணம்
அதிதாருணம்!— என்

**ஸாவி** :—(கண்விழித்து எழுந்து) ஹா புத்திரகா! இக்கதியை யடையவோ என் வயிற்றிற்பிறந்தனை? உலகத்தை வெறுத் துக்காஷாயமுடுத்துக் காட்டிற்டரிதவித்து இப்படி இறக்கவோ நீ வளர்ந்தாய்?

*நல்லுணவருந்தி நல்லணிபொருந்தி
நல்லுடை தரித்து நலமுடனிருந்த நீ
புல்லரிசிதின்று புன்னீரருந்தி
தொல்லைப்படுவையோ துணிந்துரைப்பாயோ! (உச)

பஞ்சணைமீதும் பல்லக்கின்மீதுங்
கொஞ்சிவிளையாடிக் கொலுவிலிருந்த நீ
வஞ்சனையாலிங்கு வனந்தனிலலைந்து
பஞ்சைபோல் மரிப்பையோ பகர்ந்திடுவாயோ! (உரு)

சொந்தமென்றறிந்தும் சொல்லாதொருமொழி
விந்தையே என்னை நீ வெறுகொண்டாயோ?
சிந்தனைசெயாமல் சினேகமும் பாராமல்
வந்தெனையணையாமல் மரித்தையோ சொல்லாய்! (உசு)

**கோவி** :—ஆஹா! இம்மாதரசி தான் ஸாவித்ரீதேவி யார்! இவ்வநிதோத்தமை தான் விலாஸவதியாயிருக்கவே ண்டும்! இப்புண்ணியவதியே பூபாலநாட்டரசனதுபட்ட மஹிஷி சாருமதிதேவியாராக வேண்டும்! அந்தோ! இவர் களது சங்கடத்தையான் எப்படி நிவாரணம் பண்ணப்போகின் றேன்? (பாடுதல்.)

(எ) இராகம் - பியாகு - தாளம் - ஏகதாளம்.

கண்ணிகள்.

கருணைகூர்ந்திவர்களைக் - கண்ணெடுத்துப் பாராயோ?
கருணைக் கடவுளே - காத்தருள்வாய்!

கரையுமே கல்லுங் - கன்மனமுமுருகுமே!
உரிமையோ நினக்கினி - உரையாயுபேக்ஷித்தல்?
கால காலனென்றுங் - காலகண்டனென்றுஞ்
சிலப்பெயர்தமக்குச் - சித்திக்குமோ சொல்லாய்!
காண்பதுங்கனவோ - காலத்தின்கொடுமையோ?
வீண்புவிபாரமே - வேதங்களுலும்!

சுந்தரி:—(போஜனைச் சற்றுநேரம் உற்றுநோக்கிக் கொண்டிருந்து) இவ் விராஜகுமாரருக்கு ஒரு பயமுமில்லை! பாருங்கள்! இவரது கால் கட்டைவிரல் அசைகிறது!

சாரு:—என் கண்மணியும் பிழைப்பனு? என் விலாஸ வதியும் சுகித்திருப்பளா?

சுந்தரி:—அம்மணீ! இப்பெண்மணியின் கற்புடைமையே இவளையும் இவளுடைய பர்த்தாவையும் என்றென்றுங் காப் பாற்றுமே!

கோவி:—ஆம்!

* 'அவனுக் குயிரவ் வளவே யெனினும்
இவள்கற் பினின்வீ னுறுமோ விசைவாற்
றவளத் தனிவா ணகைதன் னுரையைச்
சிவனத் தகுநான் முறைதேர்ந் திலரோ!' (உஎ)

ஸாவி:—அஃதேது! அசாத்தியம்! அசாத்தியம்!!

ஸோம:—ஸகலத்தையுமறிந்ததாயே! ஒருபயமுமில்லை. இனிமேன்மேல் சிரேயஸ்ஸையடைந்து ஸாம்ராஜ்யாதிபதி யாய் இருப்பதற்காகத்தான் இவ்விளங்குமாரனை ஸர்ப்பந்தீண் டியதென்று நிச்சயமாய்க்கொள்ளுங்கள். இதனுடன் இவ னுக்கு விதித்திருந்த ஆபத்துக்களெல்லாம் நீங்கின! இனி

* பாரதம்

பந்துமித்திரர்களோடுகூடி அழிவிலாப் புகழ்பெற்று விளங்கப் போகின்றனன்! இதோ இந்த மந்திர பரிபூதமான ஆஜ்ய சேஷத்தையும் புரோக்ஷிக்கின்றேன்! ஒரு க்ஷணத்தில் தூங்கி எழுந்தவன்போல் எழுந்துவிடுகின்றான் பாருங்கள்.

ஸாவி:—எல்லாந் தாங்களுடைய அநுக்கிரகமே!

ஸோம:—(ஆச்யத்தை தர்ப்பைபால் தடவிக்கொண்டு)

"காளிகோ நாம ஸர்ப்போ
நவநாக ஸஹஸ்ர பலஃ;
யமுநஹ்ரதே தஹ ஸோஜாதோ
யோநாராயணவாஹநஃ!" (உஅ)
"யதி காளிக தூதஸ்ய
யதிகாஃ காளிகாத்பயாத்;
ஜந்மபூமி மதிக்ராந்தோ
நிர்விஷோயாதி காளிகஃ!" (உகூ)

(போசனருகிற்சென்று ஆச்யத்தைப் புரோட்சித்துக்கொண்டு) ஓம்!

"அபஸர்ப ஸர்ப பத்ரந்தே தூரங்கச்சமஹாயசாஃ;
ஜநமேஜயஸ்ய யஞ்யாந்தே அஸ்திக வசநம்ஸ்மரன்!"

கோவி—(போசனை நோக்கி) தெய்வாதீனம்! இப்பொழுது தான் மெதுவாய் மூச்சுவருகின்றது.

போஜ:— (மெதுவாய் மூர்ச்சையினின்றுந் தெளிந்து) ஹா! அம்ப! ஸாவித்திரி!

ஸாவி:—(ஓடிவந்து போசனையணைத்துக்கொண்டு) ஆ! என் துரையே! இதோ இருக்கின்றேன்!

போஜ:—(நோக்கி) ஆ! இதென்ன! பிரமையோ? என்னருமைத்தாய் ஸாவித்திரியோ என முன் நிற்பது? ஆ! என்

அத்தை சாருமதி! என் பிரிய விலாஸவதி!! இஃதென்ன! கனவோ யான் காண்பது!

**கோவி:**—இராஜகுமாரா! நீ காண்பதெல்லாம் வாஸ்தவமே! உனக்குநேர்ந்த இடையூறுகளெல்லாம் தெய்வாநுகூலத்தால் நீங்கின! இனி உன் பிரிய பந்துக்களையடைந்து சுகித்திருப்பாய்!

**போஜ:**—அடிகாள்! தாங்கள் செய்த இப்பேருதவிக்கு யான் என்னபிரதி செய்யப்போகின்றேன்.

**கோவி:**—
**ஸோம:**— } இராஜகுமாரா! நீ தீர்க்காயுஷ்மானாய்ச் சீக்கிரத்திலேயே ஸகல ஸாம்ராஜ்ஜியத்தையும் பெறுவாயாக!

**போஜ:**—எல்லாந் தங்களுடைய ஆசீர்வாதமே!

**கோவி:**—அரசே! நினக்கினி யாதொரு குறையும் நேரிடாது!

ஈசனே நின்மேல் நேசமாயிருப்பார்!
பற்பலவுதவுங் கற்பகத்தருப்போல்
ஊழி நீடூழி வாழுதி! நினக்குப்
பெரும்புகழ் புவியில் நிரம்பியோங்குக! (௩௧)

**போஜ:**—அடிகாள்!

வழிபடுந் தெய்வமாய் வந்திவண்தாமே
மொழியிலெமக்கு முட்டுப்பாடுறுமோ!
நும்போற் பெரியோர் நோக்கமிருக்கில்
எம்போலரசர்க் கென்ன குறையாம்! (௩௨)

**ஸாவி:**—என் கண்மணீ! உன்னைக்காணாது நாங்கள் என்ன வருந்தினோம் தெரியுமோ?

போஜ :—அம்மா! எல்லாம் அறிந்தேன்! எல்லாம் முன் ஜன்மத்தில் நான் செய்த பாபத்தின பலமே!

சாந .—என்னருமைச் செல்வமே! இஃது ஒருவருடைய செயலுமன்று! ஈசனது சங்கல்பம் இப்படி எல்லாம் நடக்க வேண்டியிருந்தது!

ஸ்ரவி :—என் செல்வனே! நீ யன்று ராத்திரி என் கண் மணி விலாஸவதியினிடம் செல்லுவதாகச் சொன்ன வார்த்தை அமிருததாரைபோல் எனக்கு ஆநந்தத்தைக் கொடுத்தது. பிறகு அப்பாதகன் நினது சிற்றப்பனுடைய வஞ்சனையால் சாந்தமும் க்ஷமையுமேயுருவெடுத்து வந்திருக்கும் கற்பிற்கரசியாகிய நமது விலாஸவதி உனக்காக, பட்ட கஷ்டங்களை நான் என்ன சொல்வேன்! ஆயினும் நுங்கள் இருவரையும் ஈசுவரன் இன்றாயினுங் கூட்டிவைத்தனரே!

விலா :—(ஆன்மகதமாய்) ஐயோ! யான் மகா பாதகியானேனே! என் பிராணநாதருடைய பிரியத்துக்கும் நான் பாத்திரையாவேனோ?

போஜ :—(ஆன்மகதமாய்) ஆ! இஃதென்ன! இவ்விலாஸவதியைக் காணும்பொழுதே என் மனம் களிப்புஞ் சினமுங் கொள்ளுகின்றதே! இவள் நிரபராதியென்றறிந்தும் என் மனம் இவளிடத்தினின்றும் விலகி நிற்கின்றதே!

ஸ்ரவி :—என் கண்மணீ! ஏன் இவளிடத்தினின்றும் முகத்தைத் திரும்பிக்கொள்ளுகின்றாய்! இவளுடைய பாதிவ்ரத்யமகிமையினாலன்றோ நீ க்ஷேமமாயிருக்கின்றாய்! இவ்வுத்தமியினாலேயே உனக்குச் சிறந்தகீர்த்தி கிடைக்கப்போகின்றது! இவளை ஸ்வீகரிப்பாய்!

விலா :—(ஆன்மகதமாய்) என் பிராணநாதர் என்ன சொல்லுவரோ?

போஜ :—அம்மா! என்னை மன்னிக்கவேண்டும்! இக்கொடுமைக்கெல்லாம் காரணமாகிய அந்தத் துரோகியினுடைய ஆதீனத்திலிருந்த இவளை யான் எப்படி அங்கீகரிப்பேன்? உலகத்துளோர் நம்மைப் பழியார்களோ?

விலா :—(ஆன்மகதமாய்) அந்தோ! இவ்வவதூறுக்குப் பாத்திரையாகவோ யான் இன்னும் இப்பாழும் உடலை வைத்திருக்கின்றேன்! (கண்ணீர்விடுதல்)

ஸாவி :—என் கண்மணீ! இவளுடைய கற்பின் பெருமையை அறியாததனால் நீ இவ்வாறுரைத்தனை? இவளைக் கைப்பற்றி எம்மைக்களிக்கச் செய்வாய்!

போஜ :—என்னருமைத்தாயே! யான் ஸம்மதித்தாலும் பெரியோர் ஸம்மதிப்பரோ?

ஸாவி :—என் செல்வனே? எங்களுடைய மனம் நோகும்படி நீ இப்படித் தெரியாமல் உரைப்பது தகுதியன்று!

உயர்வர மக்களால் துயரம் நீங்கி
இருமையும் பெறுவது பெரியவர் இயற்கை!
தருமமே யெல்லா முருவாய் வந்து
நின்னைப் பெற்ற நின்தாய், அத்தையும்
உளமெலி வாகித் தளருவ தழகோ?
சொல்லை மறுத்த நல்ல புதல்வரைப்
பெற்றோர் யார்துயர் உற்றார் சொல்லாய்! (௯௯)

அந்தோ! இவையெலாஞ் சொல்லி நினக்கொரு கெடுதியைச் செய்ய நினைப்பதாய்க் கொள்ளவேண்டாம். உனது நன்மைக்காகவே சொல்கின்றேன்! இவள்மீது பழிசொன்னால் நாக்கு அழுகியறுந்து விழும்! இவளைக் கைவிடில் தர்மதாரபரித்தியாக மஹாதோஷத்தையடைந்து குலத்தோடு நசிக்கவேண்டிவரும்!

விலா :—(கண்ணீர் சொரிய) என் பிராணநாதர்மீது பழி சொல்வதிற் பயனென்ன? எல்லாம் யான் பூர்வஜன்மத்திற் செய்தபாபமே!

சாரு :—(சமாதானமாய்) குழந்தாய்! அழாதே! உனது நன்னடத்தை உன்னை எந்நாளுங் காப்பாற்றும்.

விலா :—(சோகக்கண்ணீரைத்தடையாய், சமாதானமாய்) அம்மா! இனி யான் பிழைத்திருக்கவும் வேண்டுமோ?

போஜ :—(ஆச்சரியமாய்) இவளை நிர்த்தோஷி என்றறிந்தும், ஏனோ மந்திரத்தினாற் கட்டுண்ட ஸர்ப்பம்போல், என் மனமானது இவளைத்தொடுவதற்குந் திடங்கொள்ளவில்லை: விடுவதற்குந் துணியவில்லையே! இத்தர்மசங்கடத்திற்கென்ன செய்வது?

(புத்திசாகரரும், காளிதாசனும், ஹரிஹரருடன் பிரவேசித்தல்)

புத்தி :—ஹரிஹரரே! தேவியார் எங்கே காணோமே! இம்மரத்தடியில் ஒருவருமில்லையே!

காளி :—(நோக்கி) இம்மண்டபத்தில் யாரோ கூட்டமாயிருக்கின்றனர்!

ஹரி :—(நோக்கி) அவர்களே!

காளி:—ஆம்! (நோக்கி) ஆ! இஃதென்ன யான் காண்பது! கனவோ? நினைவோ? என் பிராணநேசன் போஜனோ இங்கே நிற்கின்றவன்?

புத்தி :—என்ன! நம் போஜனோ! (ஓடிப் போசனைக்கட்டியணைத்து) என் கண்மணி! நீ பிழைத்திருக்கின்றாயோ?

போஜ :—எந்தாய்! சரணம்! யான் புத்தியில்லாமையினாற் செய்த அபராதங்களை எல்லாம் மன்னித்தருளவேண்டும்!

புத்தி :—என் செல்வனே ! உனக்கு அமோகமாய் மங்களமுண்டாகுக !

போஜ :—அடிகாள் ! இப்பிராமணோத்தமர்கள் தாம் என் பிராணனைக் காப்பாற்றினர் ! இவர்களில்லாவிடில், இந்நேரம் ஸர்ப்பந்தீண்டி இறந்திருப்பேன் ?

கோவி :—எங்களாலென்ன செய்யப்பட்டது ? அம்மாது சிரோமணி விலாஸவதி தேவியின் கற்பின் மகிமையே உன்னைக்காப்பாற்றியதென்றறிவாய்.

புத்தி :—ஒகோ ! கோவிந்த பண்டிதரா ! தங்களைக்கண்டு அநேக நாட்களாயின ! தாங்கள் என்று தாரையைவிட்டுச் சென்றீர்களோ, அப்பொழுதே அந்நகர் பாழடைந்து விட்டது! அதர்மம் நான்குபாதங்களோடுங் குடிகொண்டுவிட்டது! (விலாஸவதியைநோக்கி) இக்கற்பிற்கரசி விலாஸவதிதேவி ஏன் கண்ணீர்விடுகின்றனள் ?

போஜ :—அடிகாள் ! யாவற்றுக்கும் இப்பாவியே காரணம் ! அன்னியனுடைய ஆதீனத்திலிருந்த இவளை யான் எப்படி அங்கீகரிப்பேன் ?

புத்தி:—அட பேதாய்! நீ சங்கை கொள்வது ஆச்சரியமே! இப்பெண்மணியின் பாதிவ்ரத்தியமகிமையை யான் என்சொல்வேன் !

* 'மண்ணினும் நல்லள்! மலர்மகள் கலைமகள் கலையூர்
பெண்ணினும் நல்லள் பெரும்புகழுடை விலாஸவதி
கண்ணினும் நல்லள் ! கற்றவர் கற்றிலா தவரு
முண்ணுநீரினு முயிரினுமவளையே யுவப்பர்!' (கூச)

ஆகலின், தடையின்றி இவ்வநிதோத்தமையைக் கைப்பற்றி என்னையும் மற்றையோரையும் மகிழச் செய்வாய் !

* சம்பாஷணம்.

காளி :—நண்பா! ஏனிந்தச் சபலம்! ஒழிப்பாய் இவ்வீண் கவலையை! உனக்குக் குருவாயுந் தந்தையாயுமிருக்கும் நமது மந்திரியாரே யுனக்கு அநுமதி தந்தனர்! அவர் உனக்கிட்ட பிரதிஞ்யையையும் நீக்கிவிட்டனர்! இனி என்ன தாமஸம்!

போஜ :—அடிகாள்! தாங்களே சொல்லும்பொழுது, நானென்ன தடை சொல்லப்போகின்றேன்?

புத்தி:—(விலாஸவதியை நோக்கி) இராஜபுத்திரீ! இதைப்பற்றி நீ வருந்துவது தகுதியன்று! இப்படிக்கெல்லாம் நடக்கவேண்டுமென்பது ஈசனது ஸங்கல்பம் போலும்! ஆகலின், உன் பிரிய வல்லபனையடைந்து மகிழ்ந்திருப்பாய்!

விலா:—அடிகாள்! நீங்கள்தாம் எனக்குத் தந்தையார்! எல்லாந் தங்களுடைய ஆசீர்வாதமே! (புத்திசாகரரை வணங்குதல்)

புத்தி :—தீர்க்க ஸுமங்கலீ பவ!

சாரு :—அடிகாள்! புத்தி ஹீனத்தினால் நாங்கள் தங்களுக்குச் செய்த அபராதத்தை மன்னிக்கவேண்டும்! இப்பொழுதன்றோ தங்களுடைய வாஸ்தவமான எண்ணம் விளங்குகின்றது.

புத்தி :—அம்மணீ! யான் சிறிதேனும் உங்களுடைய குணகுணங்களை யோசியாமல், இவ்வநிதோத்தமை விலாஸவதிக்குப் பெருந்தவறிழைத்தேன்! வஞ்சகமே யுருவெடுத்து வந்திருக்கும் முஞ்ஜராஜனுடைய ஆதீனத்திலிருந்தபடியால், நம் கண்மணி போஜனுக்கு அவனால் ஏதாயினும் ஆபத்து நேரிடுமென்று நினைத்து, அவனை இம்மாதுசிரோமணி விலாஸவதியினிடங்கூடச் செல்லவேண்டாமென்று தடுத்தேன்! உங்களையுங் கவனியாது விடுத்தேன்! இவற்றையெல்லாம் பொறுத்து என்னை மன்னிக்கவேண்டும்!

சாரு :—அடிகாள்! தாங்களேன் வீணாய் மனவருத்தப் படவேண்டும்!

* "புகன்றிடு நன்மை தீமை
பொருந்தலூழ் வினையா மீசன்
சகந்தனி லுயிர்கட் கெல்லாந்
தானுயிர்க் குயிராய் நின்று
மகந்தைமெய்ஞ் ஞானங் கல்வி
யழித்தமைத் திடுவ னல்லாற்
பகர்ந்திடு புருட ராலே
நினைத்தவை பலித்தி டாவால்!" (௩௫)

ஆகலின், தாங்கள் செய்தனவெல்லா மெங்களுடைய நன்மைக்காகவேயன்றி வேறென்ன!

**போஜ :**—ஆம்!

'எல்லார் செயலு மிறைவ னியற்றுவதே
யல்லா தலேயா ரனுவுமசை யாதெவையு
நில்லா தருளின்றே னீயின் றவன்பாலிற்
செல்லா தெமது செயலுமவன்செய்கையதே!' ()

**விலா :**—(போசனருகிற்சென்று) ஆர்யபுத்திரா! அடியேன் செய்த அபராதங்களையெல்லாம் மனத்தில் வைக்காமல் இப்பேதையை மன்னிக்கவேண்டும்! (போசனுடைய பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்தல்)

**போஜ :**—(விலாஸவதியைத் தூக்கி எழுப்பி) ஆ! என் பிராணேசுவரீ! பாவியேன் சிறிதேனு முன்றன் நற்குணங்களையறியாமல் உனக்குப் பலவிதத்திலும் அபராதியானேன்!

குலதன ரநுரஞ்சிப் பர்களன்றோ ஜனத்தை!
ஜலஜசுபகநேத்ரீ! ஸாத்வி! என்னை க்ஷமிப்பாய்!
தலையிலணிவதே தான் லோகமெங்கும் ப்ரஸித்தம்
மலர தனையுதைத்துத் தள்ளுவாரெங்குமுண்டோ?()

* கந்தபுராணம்

விலா :—(ஸாத்வஸ ஸந்தோஷத்துடன்) ஆர்யபுத்திரா! இப்பிரியவசனங்களுக்கு யான் அர்ஹையாவேனோ? இன்றன்றோ எனது ஜன்மம் ஸபலமாயிற்று! (இருவரும் ஒருவரையொருவர் தழுவி நிற்றல்)

கோவி :—
ஸோம :— } (வாழ்த்திக்கொண்டு)

ஜய! ஜய!! ஜய!!! போஜ! ஜய! விஜயீ பவ!

சுந்தரி :—(வாழ்த்திக்கொண்டு)

ஜய! விலாஸவதீ ஸமேதனாக!

ஹரி :—
காளி:— } (வாழ்த்திக்கொண்டு)

நயமுடனி லக்ஷ்மியொடு நாராயணன்போல
நாளுமே யிவளுடன் நிலைத்துநிற்க!

புத்தி :—(வாழ்த்திக்கொண்டு)

பயமகிலத்தையும் போக்கி நீ யாவர்க்கும்
பந்துமித்திரரோடு வாழ்ந்திருக்க!

ஸாவி:—
சாரு :— } (வாழ்த்திக்கொண்டு)

தயையுடனெவரையுந் தன்போல் நினைத்து நீ
தரையொரு குடைக்குளே தாங்கியாள்க!

போஜ :—(வணக்கத்துடன்)

ஆதி தெய்வமன்றோ வெமக் கந்தணர்கள்!
ஆகுமிவையெலாம் நுங்கள் அநுக்ரஹத்தால்!

விலா :—(நமஸ்கரித்து)

எதுவன்றியு மெவரையும் பாதுகாத்தல்
ஈசனடியார்க ளெல்லோர்க்குமியற்கையன்றோ?

(நேபத்தியத்திற்குள் சங்கத்துவனி)

காளி :—(செவிகொடுத்து) அடிகாள்! கேட்டீர்களோ சங்கத்துவானத்தை! பகைவனது சைநிகர்களுக்கு யுத்தந் தொடங்க ஆஞ்ஞை கொடுக்கப்பட்டதுபோலும்! நாம் இனி ஒரு நிமிஷமேனுந் தாமதிக்காது சிபிரஞ் செல்லவேண்டும்!

ஹரி :—என்ன! முஞ்ஜன் இவ்வளவு சீக்கிரத்தில் வந்து விட்டனனோ இந்நகர்க்கு?

புத்தி—வந்து மூன்றுநாட்களாயின! அவனது வியாபாரத்தை லேசாக நினைக்கவேண்டாம்! தன்னுடன் ஐந்து பேரிருந்தாலுமஞ்சாமல் நின்று யுத்தஞ்செய்யத் துணிந்தவன்!

சாரு :—எமது சேனைகள் யாவும் பூபாளநாட்டினின்றும் வந்துவிட்டனவோ?

புத்தி :—இன்று காலைதான் வந்துசேர்ந்தன! ஆயினும் ஸ்ரீ ஆதித்தியவர்ம மஹாராஜருடைய பேருதவியால் சகலரும் யுத்தத்திற்குச் சந்நத்தராகவே யிருக்கின்றனர்! நம் போஜன் இருக்குமிடங்கூட தெரியவில்லையே யென்றுமாத்திரம் வருந்துங்கொண்டிருந்தோம்! அவ்வருத்தத்தையும் ஈசன் இப்பொழுது நீக்கிவிட்டனர்! இனிநமக்கு ஜயமுண்டாகுமென்பதைப் பற்றிச்சந்தேகமில்லை.

போஜ :—அடிகாள்! தாங்கள் எல்லோரும் இவ்வடியேனுக்குச் செய்யும் பேருதவிக்கு யான் என்னபிரதி செய்யப் போகின்றேன்! நீங்கள் செய்த நன்மை மேகம் உலகத்திற்குச் செய்வதைப்போன்றது!

(நேபத்தியத்திற்குள் மறுபடியும் சங்கத்துவனி)

காளி :—அடிகாள்! நாமினித் தாமதிக்கலாகாது! சங்கநாதம் திக்குகளெல்லாம் நடுநடுங்கும்படி வியாபித்துவிட்டது! சத்துருசைன்னியம் கிளம்பிவிட்டதுபோற் றோற்றுகின்றது

**புத்தி** :—ஆம்! அப்படித்தானிருக்கவேண்டும்! (ஹரிஹரரை நோக்கி) ஹரிஹரரே! தாங்கள் தேவிமார்களேயும் போஜனையு முடனேயழைத்துக்கொண்டு நாம் இறங்கியிருக்கும் விடுதி யரண்மனைக்குச் செல்லுங்கள்! நாங்களிருவரும் இப்படியே சேனநிவேசத்திற்குச் சென்று, தகுந்த ஏற்பாடுகளெல்லாஞ் செய்துவிட்டுச் சீக்கிரத்தில் வந்துசேருகின்றோம்!

**போஜ**:—அடிகாள்! நானுந் தங்களுடன் வருகின்றேன்! இவர்கள் மாத்திரஞ் செல்லட்டும்!

**புத்தி** :—அரசே! நீ இப்பொழுது மிகவுங்களேத்திருக்கின்றனை? அரண்மனைக்குட் சென்று சற்று விச்சிரமித்துக் கொள்! நாங்களுமதற்குள் வந்துவிடுகின்றோம்! (நிஷ்கிரமித்தல்)

**ஸாவி** :—சரி! அப்படியே செய்வோம்! (கோவிந்தபண்டிதரை நோக்கி) கோவிந்தபண்டிதரே! தாமும் இப்பிராமணோத்தமரும் செய்த இவ்வுபகாரத்திற்கு நாங்கள் என்ன பிரதி செய்யப் போகின்றோம்! ஆயினுமிச்சமயத்தில் நீவிர் இருவரும் இதை யனுக்கிரகிக்கவேண்டும்! (இருவருக்குமிரண்டுபை நிறைய நாணயங்களை யளித்தல்)

**பிராமணர்** :—தேவி! இவையெலா மெதற்கு? (பெற்றுக் கொண்டு) தங்களுடைய கிருபையிருந்தாற் போதும்? உங்கள் செல்வன் சீக்கிரத்திலேயே சக்கிரவர்த்தியாகப்போகின்றான்!

**சாரு**:—எல்லாந் தங்களுடைய ஆசிர்வாதமே!

**போஜ** :—அடிகாள்! நாங்கள் போய்வர விடையளிக்க வேண்டும்!

**பிராமணர்** :—அப்படியே சென்று வெற்றிகொண்டோங்குவாய்!

**ஹரி** :—வெகு நாழிகையாய்விட்டது! சீக்கிரமரண்மனைக்குச் செல்லுவோம் வாருங்கள்! (யாவரும் நிஷ்கிரமித்தல்.)



## இரண்டாங்களம்.

---

**இடம்:—உஜ்ஜயிநீ நகர்: சிப்ராநதிக்கரையில் முஞ்ஜராஜன் தங்கியிருக்கும் படகிருகம்.**

(*அங்கரக்ஷகர்கள் இருவர் இருபுறத்திலுமயர்ந்து நித்திரைசெய்துகொண்டிருக்க* **முஞ்ஜராஜன்** *ஒரு பயங்கரமான கனவுகண்டு மஞ்சத்தினின்றும் அலறிவிழுந்துகொண்டபடி பிரவேசித்தல்.*)

**முஞ்ஜ:—** (*அங்கங்களெல்லாம் நடுநடுங்க, கண்கள் மூடியபடி ஆழ்ந்தகுரலுடன்*) ஆ! ஆ!! (*ஆவிதருவதுபோல் அபிநயித்து*) அந்தோ! மாள்கின்றேன்! ஐயோ! சகிக்கமுடியாத துர்நாற்றம் பொருந்தியதும், நரகத்தைப்பார்க்கினு மதிபயங்கரமானதும், காளராத்திரியைப்பார்க்கினுங் காரிருள்மூடினதுமான இவ்வகாதமான மலபங்கத்தில் மூழ்கி முடிவெய்துகின்றேன்! ஆ இதனின்றுந் தப்பி எப்படிக் கரையேறுவேன்? (*கால்களையுதறிக்கொண்டு*) ஐயோ! எனதுகால்களை யொருபெரு முதலை கவ்வுகின்றதே! (*நோக்கி*) ஆ! இவன் யார்? பார்ப்பதற்கே பயமாயிருக்கின்றனனே! ஐயோ! என்னைக் கழுத்திற் கைபோட்டு யமதிக்கை நோக்கி யிழுக்கின்றனனே! ஹா! (*அலறிவிழித்துக்கொண்டு*) ஆ இஃதென்ன! யான் இருக்குமிடம் யாதோ? என் தலையை மொட்டையடித்து என்னிடையில் மலின வஸ்திரத்தையுடுத்து, மலபங்கத்திற் றள்ளின அம்மகாவீரன் சென்றனனோ? (*மெதுவாய்க் கண்களைத் துடைத்துக்கொண்டு சுற்றிலும் நோக்கி*) இஃதென்ன! சித்தப்பிரமையோ? அல்லது என் கண்கள்தாம் மாந்தியத்தை யடைந்துவிட்டனவோ? எனது அங்கரக்ஷர்களல்லவோ இவ்விடத்திற் படுத்துறங்குகின்றனர்? இது நாம் படுத்திருந்த படகிருகமல்லவா? (*யோசித்து*) ஒருவேளை யான் கண்டதெல்லாங் கனவோ? (*தலையைத்தடவிப் பார்த்துக்கொண்டு*) என்ன ஆச்சரியம்! என் சிரஸிலிருந்த மயிர்கள் அப்படியே யிருக்கின்றனவே! (*இடையைப்பார்த்து*) நான் தரித்திருக்கும்வஸ்திரமும் எனது பீதாம்பரமே! சீ! இவை

பெலாம் அப்படித்தானிருக்கவேண்டும் ! ஆ ஹா ! என்னதாருணமான ஸ்வப்னம் ! அவையெலா மின்னுமென் முன்னர்நடப்பன போற்றோன்றுகின்றனவே ! ஒருவேளை நம்கதி இப்படித்தான் முடியுமோ ? அந்தோ ! அம்மகாவீரன் யாவனோ ? அர்க்கமண்டலம்போல் ஜ்வலித்துக்கொண்டு, வெண்பட்டாடையணிந்து, வெண்மையான மாலைசூடி, சுந்தரத்திருக்கோலத்துடன் இந்நகரத்து ராஜகுமாரியின்பாணியைப்பிடித்த அம்மகாபுருஷன்யாவனோ ?—சீ ! இஃதென்ன ! வீணெண்ணங்களெல்லாங்கொள்ளுகின்றேன் ! ஒரு வேளை நம் போஜன்தான் இத்தகைய பதவியையடைவனோ ?—சீ ! என்ன பைத்தியம் ! போஜன்கொலையுண்டிறந்து எத்தனை நாட்களாயின ! அவன் திரும்பி வருவதெங்ஙனம் !—ஆஹா ! அக்காட்சியை நினைத்தமாத்திரத்தில் மயிர்க்கூச்சமுண்டாகின்றதே ! பொழுதுவிடிவதற்கு இன்னு மெவ்வளவு நாழிகையிருக்கும் ? (சோசித்.)

*"ஊழியிவெங் கதிரவனுதய முன்னறிந்
தாழியுந் திங்களுமார்ப்ப டங்கின !
கோழியு மார்த்தன ! குக்கி லார்த்தன !
சூழியிற் புள்ளெலாந் துள்ளி யார்த்தவே !" (௩௬)

அம்மோ ! அருணோதயமாகப் போகின்றதே ! இன்று காலையிலாயினும் நாம் ஜயமடைவோமா ? ஐயோ ! அதிகாலையில் ஸ்வப்னங்கண்டால் அவசியமாய்ப் பலிக்குமென்பார்களே ? நமது முடிவு எப்படி யிருக்கின்றதோ ? நாமும் ஜெயித்து நம் நாடுசெல்வோமா ? (தைரியத்துடன்) ஆகா ! நம் சேனைகள் மாத்திரம் முன்போல் நம் பக்ஷத்தில் நிற்பார்களாயின், இவ்வாதித்தியவர்மனைப்போற் பதினாயிரம் பேர்கள் வந்தெதிர்த்தபோதிலும் அஞ்சேம் ! அப்படியிருக்க, அக்கிழப்பிராமணன் வரவழைத்திருக்கும் பூபாள நாட்டுச் சேனைக்கு அஞ்சுவேனோ ?

* அரிச்சந்திரபுராணம்

ஆயினும் நேற்று மாலையில், நம் பகைவர்களை யெல்லாம் எத்திசையிலும் நிற்கவொட்டாமற் பறக்கடித்து அவ்வாதித்தியவர்மனையுங் கைப்பிடியாய்ப் பிடித்துக் கைதி செய்து விட்டோமென்று நாம்சந்தோஷத்துடன் திரும்புங்காலையில், யானைக்கூட்டத்தின் மத்தியில் ஒரு சிங்கக்குட்டி பாய்வதுபோல், திடீரென்று கிளம்பி, ஒரு க்ஷணப்பொழுதில் நமது சேனைகள் இருந்தவிடமே தெரியாமல் வெருட்டி, அவ்வாதித்தியவர்மனையும் விடுவித்துக்கொண்டு சென்ற அம்மகாவீரன் யாவனோ? அவனுக்குத் துணையாய்வந்த வீரர்கள் தாம்யாவரோ? அவனைக்கண்டது முதல் எனது சைனிகர்கள் சண்டைசெய்யப் பயப்படுகின்றார்களே!

(சேபத்தியத்திற்குள் கலகல சப்தம்)

முஞ்ஜ:—ஆ ஆ! இஃதென்ன சப்தம்! இவ்வதிகாலையில் இவ்வளவு பெருத்த சப்தம் கேட்பதற்குக் காரணமென்ன?

(பிரவேசித்து)

பைரவன்:—(பரபரப்புடன்) மகாராசா! நமது சேனைகளையெல்லாங் கூட்டிக்கிட்டு நம்ப சேனைத்தலைவர் வத்சராசர் எங்கேயோ விரைந்து செல்கின்றாங்கோ! அவங்கபோகிற வேகத்தையும் ஆடம்பரத்தையும் பார்த்தால் நம்ப பகைவங்களோடே சேர்ந்துகொள்வாங்கபோலிருக்கிறது! நம்பளைச்சேர்ந்தவங்ககூட பயந்து மூலைக்குமூலை ஓடுறாங்கோ! இனி மகாராசா அவகளின் சித்தம்

முஞ்ஜ:—(ஆன்மகதமாய்) இதுதானோ இப்பொழுது கிளம்பிய பெருங்கூச்சலுக்குக் காரணம்? நல்ல திருக்கட்டும்! (பிரகாசமாய்) பைரவா! பத்திரநாராயணரை நாம் சேனாதிபதியாய் நியமித்திருப்பதாக அவரிடந் தெரிவித்துச்சேனைகளை ஓடவொட்டாமற் சமாதானஞ் செய்யச்சொல்! நாமுமிதோ பின்னரே வருகின்றோம்.

பைர:—அப்படியே மகாராசா! (நிஷ்கிரமித்தல்)

முஞ்ஜ :—ஆ ஆ! நாம் கனவுகண்டது உண்மையாகவே முடியும்போற்றோற்றுகின்றதே! நாம் அப்பொழுதே வத்ஸராஜன் மேலுக்குமாத்திரம் நம் பட்சத்தில் இருப்பவன்போல் நடித்து வருகின்றனனென்று நினைத்தோம்! என்னவோ அவனது செயல்களை நினைத்துக்கொண்டால் வாராத எண்ணங்களெல்லாம் வருகின்றன? இப்பொழுதென் செய்வோம்?

(வெகு ஸம்ப்ரமத்துடன் பிரவேசித்து.)

நீலகண்டர் :—மஹாராஜா! அடியேங்களைக் காப்பாற்றவேண்டும்! (சாயத்துடன் ஓடிவந்து மூச்சுத்தளரக் கீழேவீழ்தல்.)

முஞ்ஜ :—நீலகண்டரே! என்ன சமாசாரம்! ஏனிப்படிப் பயப்படுகின்றீர்? எழுந்திரும்! எழுந்திரும்!

நீல :—மஹாராஜா! யான் என்சொல்வேன்! விலாஸவதி தேவியாரும் ஸாவித்திரீதேவியாரும் சிறைச்சாலையினின்று மெப்படியோ எனக்குந் தெரியாமல் தப்பித்துக்கொண்டு சென்றுவிட்டனர்?

முஞ்ஜ :—(திடுக்கிட்டு) ஆ! என்ன? விலாஸவதிகூடவா? எங்கே தப்பித்து சென்றனர்களாம்?

நீல :—சிலர் பூபாள நாட்டிற்குச் சென்றதாகச் சொல்லுகின்றனர்! சிலர் இவ்வுஜ்ஜயிநீநகருக்கே ஹரிஹரருடன் போனதாக உரைக்கின்றனர்!

முஞ்ஜ :—பிறகு இப்பொழுது நம்நகரை யார் பார்த்து வருகின்றனர்?

நீல:—மஹாராஜா! தாங்கள் நகரத்தை விட்டுக்கிளம்பினதும், ஜனங்களெல்லோரும் குழாங்கூடி, நகரத்தை யல்லோலகல்லோலம்பண்ணி, கோட்டைவாயில், அரண்மனை முதலானவற்றையும் பிடித்துக்கொண்டனர்கள்!

முஞ்ஜ :—(கோபத்துடன்) சரி! நீரும் வெளியிற் செல்லும்! நான் ஒருவனாகவே நின்று நடக்கவேண்டியதைப் பார்த்துக்

கொள்ளுகின்றேன். (சீலகண்டர் பயந்து நிஷ்கிரமிக்க) ஆ ஆ! புருஷபலத்தினால் ஆகப்பட்டது ஒன்றுமில்லை! எவ்வளவு வல்லமையுள்ளவனாயிருப்பினும் தெய்வபலமில்லாவிடில் மரிப்பனென்பது திண்ணம்.

தனபல மிருந்தென்? தைரிய மிருந்தென்?
மனவலி யிருந்தென்? மாட்சிமை யிருந்தென்?
கனமிக விருந்தென்? கட்டழ கிருந்தென்?
அனக னருளின்றே லழிவரே யாரும்! (௪0)

ஆ.ஆ! நாமொன்று நினைத்தால் தெய்வமொன்று நினைக்குமென்பார்களே: அது வாஸ்தவமாயிற்று! போஜனைக்கொன்று தாராநாட்டைக் கைப்பற்றியதுமன்றி, விலாஸவதியையும் எவ்விதத்திலாயினும் வஞ்சித்து மறுமணஞ்செய்துகொண்டு பூபாளநாட்டிற்கும் அரசனாய்ப் போய்விடலாமென்று நினைத்தோமே! அஃதினி எங்ஙனம் சாத்தியப்படப்போகின்றது? உள்ளதற்கே மோசம் வந்துவிட்டதுபோலிருக்கின்றதே!

*"மூவர்க்காகிலு முன்னவர்க் காகிலுந்
தேவர்க்காகிலுஞ் சென்னிவணங்கலான்
கோவர்க்காகக் கொடி றுடைப்பார்க்கலால்
யாவர்க்காகிலு மீங்கை விதிர்க்கலான்!" (௪௧)

ஆகா! இனி நமக்குத் தாரையாயினும் சித்திக்குமா?

§"சூழ்ல்சக டக்கால் போலுந்
தோன்றியே யழிமின் போலு
மழுன்மன வேசை போலு
மருநிதி மேவி நீங்கும்

* திருக்குற்றலத்தல புராணம் § நீதிநூல்.

பழமைபோ லதனை நம்பிப்
பழியுறச் செருக்கன் மேக
நிழலினை நம்பிக் கைக்கொ
ணெடுங்குடை நீத்த லொப்போ?" (௬௨)

(பிரவேசித்து)

**பத்திர நாராயணர்**—(பரபரப்புடன்) மஹாராஜா! நாம் போய்விட்டோம்!

**முஞ்ஜ**:—மந்திரீ! என்ன செய்தி? என்ன செய்தி?

**பத்திர**:—மஹாராஜா! தாங்கள் கவனித்துக் கேட்க வேண்டும்! நம் சேனைத்தலைவர் வத்ஸராஜர் பகைவருடன் சேர்ந்துவிட்டனர்! நமது சேனைகளெல்லாம் பகைவர்களால் நான்குபக்கங்களிலுஞ் சூழப்பட்டு ஜஞ்சாமாருதத்தினால் முறிந்துவிழப்பட்ட மரங்கள்போற் சின்னாபின்னமாய்ப் பறந்துவிட்டன! நான் பிழைத்துத் தம்மிடம் வந்ததே அசாத்தியமாய் விட்டது. தாங்களே நேரே வந்து சமாதானஞ் செய்தாற்றான் ஒருவேளை மற்றுமுள்ள சேனைகளை ஓடாமல் நிற்கச் செய்யலாம்.

(**போஜன்** மாறு வேஷத்துடன் பிரவேசித்தல்.)

**முஞ்ஜ**:—மந்திரீ! நீ சீக்கிரஞ் சென்று நாம் வருவதாகச் சொல்லி, சேனைகளை நிற்கும்படி செய்! அவ்வாதித்தியவர்மனையுமக்கிழவனையும் இனிக்கொல்லாமல் விடுவதில்லை! (பத்திர நாராயணர் நிஷ்கிரமிக்க) ஆ ஆ! என்னபுத்தி ஹீனனானேன்! வத்ஸராஜனுடைய பேச்சை நம்பி யன்றோ இவ்வாதித்தியவர்மனுடன் படையெடுத்து வரலானேன்! அவன் நம்மைச் சமயத்திற் கைவிடுவனென்று கனவிலும் நினைக்கவில்லையே! நாம் செய்த மோசம் நமக்கே வாய்த்ததுபோலும்?

*"நிலைதளர்ந்திட்டபோது நீணிலத்துறவுமில்லை
ஜலமிருந்தகன்றபோது தாமரைக்கருக்கன் கூற்றம்
பலவனமெரியும்போது பற்றுதீக்குதவாங்காற்று
மெலிவலிவிளக்கேயாகில் மீண்டுமக்காற்றே கூற்றும்."

ஆகலின், இனி நாம் பகைவரை வெல்வதெங்ஙனம் ? நாமெங்கேயாகினுஞ் சென்று—சீ ! நாமிதுகாறும், சுத்த வீரனென்று உலகெலாம் பெயர்பெற்று இப்பொழுது இவ் வழிவுடலுக்குப் பயந்து பின்வாங்குவோமாகில் நம்மை மாற்றரசர்கள் என்ன நினையார்கள் ? பின்பு, நம்சொந்த நாடாகிய தாரை தான் நமக்கு நிலைக்குமோ?—மேலும் எப்படி நாம் தப்பித்துச் செல்வது? பகைவர்கையிலகப்பட்டுத் தவிப்பதைவிட நேரேயவர்களுடன் யுத்தஞ் செய்து கையுங்கத்தியுமாய் மடிவதே மேன்மை ! எதற்கும் நாம் உடையைத் தரித்துக்கொண்டு வெளியிற் செல்வோம் ? (நான்கடிபார்க்கிரமித்துநோக்கி). அந்தோ ! இஃதென்ன என் முன்நிற்கின்றதே !

**போஜன் :**—(மறைந்துநின்றபடி) ஆஹா ! என்ன வஞ்சனை! எவ்வளவு துரோகம்!

**முஞ்ஜ :**—(உற்றுநோக்கி, அச்சங்கொண்டு) ஆ ஆ ! இஃதென்ன ? நாம் காண்பது கனவோ ? அந்தோ ! போஜனுடைய குரல் போலவேயிருக்கின்றதே ! ஒருவேளை அவனது ஆவிதான் இவ்வுருவங்கொண்டு வந்திருக்கின்றதோ ?

**போஜ :**—ஆ ! சிற்றப்பா ! என்னைக் கொல்லப்பார்த்ததுமன்றிப் பேதையான விலாஸவதியைக்கூடக் கெடுக்கப் பார்த்தனையே !

**முஞ்ஜ :**—(தலைகுனிந்தபடி நடுக்கங்கொண்டு) ஐயோ ! இஃது போஜனது உருவமே ! (பிரகாசமாய்) குமாரா ! உன்னை வேண்டிக்கொள்கின்றேன் ! என் முன்னில்லாமல் விலகிச்செல் !

* விவேகசிந்தாமணி.

**போஜ :**—'கெடுவான் கேடு நினைப்பான்' என்பதையறி யாயோ?

* "விண்குலாவுயர் விண்ணவராயினும்
பெண்கள் காமம் பிடித்தவ ருய்வரோ?
புண்களாகிப் புரந்தரன் மெய்யெலாங்
கண்களானது காமத்தினாலன்றோ?" (௪௪)

**முஞ்ஜ :**—(கைகளைக்கூப்பி) ஐயோ! உன்னை வேண்டிக்கொள் கின்றேனே! என்னைத் தொந்தரை செய்யாமல் விட்டகலேன்! (செவிகொடுத்து) ஆ! இஃதென்ன? திடீரென்று சங்கத்துவனி யொன்று கேட்கின்றது! பகைவர்களுமிச்சமயத்தில் என்னைச் சூழ்ந்துகொண்டனர்களோ?

**போஜ :**—ஆ ஆ! இதுதான் நீ யடைந்த பயன்போலும்?

§ 'காயநீர்க் குமிழி யதிலுறு மின்பங்
கானலிற் புனலிது தனக்கிங்
காயவித் துயர மளவிலை யிதைநீ
யாய்வுறா மையிலழிந் தற்றாய்
நீயினிக் கவலை நினைவெலா மொழித்து
நேயமாய் வந்தெனக் குடன்பட்
டாயநற் சொரூபற் கன்பதே யிசைந்தா
லரியதே தார்நமக் கெதிரே?' (௪௫)

(பிரவேசித்து)

**பைரவன் :**—(பரபரப்புடன்) இதோ தம்மைக் கையும் பிடியுமா கொண்டுபோவதற்கு ஆதித்தியவர்ம மஹாராசாவே பெருத்த சைன்னியத்துடன் வருகிறாங்கோ!

* திருக்குற்றாலத்தல புராணம். § குதர்திரட்டு.

முஞ்ஜ:—ஆ! இவன் கையிலும் யான் உயிருடன் அகப்படுவேனு? இவன் வருவதற்கு முன்னரே நானே இக்கரவாளத்தினுற் குத்திக்கொண்டிறக்கின்றேன்! (குத்திக்கொண்டு கீழே வீழுதல்).

போஜ:—(பரபரப்புடன்) ஆ! நில்லும்! நில்லும்!! அவசரப்படாதீர்! அவசரப்படாதீர்!! (அருகிற் சென்று, தான் போர்த்திருந்த மாறு உடையை எறிந்துவிட்டு) ஆ! சிற்றப்பா! யானிருக்கும்பொழுது தாமொன்றுக்கும் பயப்படவேண்டியதில்லை.

முஞ்ஜ:—(நோக்கி) ஆ! இஃதென்ன! நிச்சயமாய்ப் போஜனே! (கண்ணீர் சொரிய) குமாரா! குமாரா!! நீ உயிருடனிருக்கின்றனையோ?

போஜ:—எந்தாய்! யான் கொலையுண்டிறக்கவில்லை! உம்மைக்காப்பாற்றுவதற்கு யான் எப்பொழுதும் சந்நத்தனுகவேயிருக்கின்றேன்!

முஞ்ஜ:—ஆ! குமாரா! இனி என்னைக் காப்பாற்றுவது எங்ஙனம்?

*"அவரவர் வினையி னவரவர் வருவா
ரவரவர் வினையள வுக்கே,
அவரவர் போக மென்றதே யாயி
னுருக்கார் துணையதா குவர்கள்?
அவரவர் தேக முளபொழு துடனே
யாதர வாறென நாடி,
அவரவ ரடைத னெறிகன்மத் தடையு
மாதர வாதர வாமோ?" (௪௬)

இதோ யான் புரிந்த கொடுந்தொழிலின் பயனை க்ஷணத்தில் அநுபவிக்கப்போகின்றேன்! இதோ என் பிராணன் வெளியிற் புறப்பட்டுவிட்டது பார்!

* குமாரதேவர்.

*" கொலைகளவு காமாதி
கொடுநரகத் தீச்சூழ்ந்து
நிலைகலங்கி மனம்புழுங்கி
நெறியொதுங்கி நின்றேனைக்
கலைபுணர்வி ஞஞ்சாந்திக்
கடலாடச் சுகநீட
மலைவோட வைத்தவடி
மாண்பதனை மறப்பதுவே!" (சஎ)

போஜ:—(சோகித்து) ஆ! ஸாஹஸம்! ஸாஹஸம்!!

முஞ்ஜ:—குமாரா! யான் உனக்குப் பலவிதத்தினுந் தீங்குகளிழைத்தேன்! அவற்றை மறந்து என்னை மன்னிப்பாய்!

போஜ:—அதனுலென்ன! தமது கட்டளைப்படி இப்பொழுதும் நடக்கக் காத்துக்கொண்டிருக்கின்றேன்!

முஞ்ஜ:—(கண்ணீர்சொரிய, போசனை இரண்டுகைகளாலும் மார்புடனணைத்துக்கொண்டு) என் செல்வனே! இனி எனக்குவேண்டியதுமிருக்கின்றதோ? இதோ பார்! என் கண்கள் இருள் மூடிவிட்டன! இந்திரியங்கள் வலிவற்றுப்போயின! நினைவு தடுமாற்றங்கொள்கின்றது! இருதயம் சூன்யமாய்விட்டது! இதோ மாள்கின்றேன்!

* "எடுத்தமா ஜன்மம் பாழி
லேகுதற் கஞ்சா ரஞ்சி
யடுத்தவர்க் கருளா ரச்ச
மாடுவர் பொருட்கைக் கொண்டே
யுடுப்பது முண்பதும்பின்
னுறங்கலுந் தவமாய்த் தர்க்கந்

* அறப்பளாசர்த தீபிகை.

தொடுப்பதி னாட்க ழிக்குந்
துட்டருக் கஞ்சு மாறே!" (சஅ)

(கீழே வீழ்ந்து மரணபாதையை யபிநயித்தல்)

போஜ:—ஆ! கஷ்டம்! கஷ்டம்!

பைர:—ஹா! ஹா! (ஓடுதல்).

போஜ:—ஆ! ஈசா! உனது செயலை யான் என் சொல்வேன்! (கண்ணீர் சொரிய)

"தேய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற
சுடரே! தொடக்கறுத்தோர் சுற்றமே பற்றி
நீந்த வரிய நெடுங்கருணைக் கெல்லா
நிலயமே வேத நெறிமுறையி னோடி
யாய்ந்த வுணர்வி னுணர்வே பகையா
லலைப்புண் டடியே மடிபோற்ற வந்தா
ஈந்த வமுதவ வெய்தினையே யெந்தா
யிருநிலத்த வோநின் னிணையடித்தாமரைதாம்!"*

(திரை வீழ்தல்.)

## மூன்றாங்களம்.

இடம்:—உஜ்ஜயிநீ நகர்: ஆதித்தியவர்ம மஹாராஜருடைய ஆஸ்தான மண்டபம்.

(சிம்மாஸனத்தினிருபுறத்திலும் இரண்டு சேவர்கள் வெள்ளித்தடிபிடித்து நிற்க, இரண்டு யவனிகள் வெண்சாமரைவீச, மந்திரி சுதேசர் முதலிய சில ஆஸ்தானிகருடன் ஆதித்தியவர்ம மஹாராஜர் பத்மாவதீ தேவியாருடன் சிம்மாஸனத்தில் வீற்றிருந்தபடி பிரவேசித்தல்.)

* இராமாயணம்.

ஆதி :—மந்திரீ ! அன்று நம்மைப் பகைவர்கையினின்றும் போர்க்களத்திற் காப்பாற்றிய அம்மாகவீரர்களிருவரையும் அழைத்துவரச் சென்றனர்களோ ? போஜகுமாரரும் அவரைச் சேர்ந்தவர்களுடன் இப்பொழுது நம்மைக்கண்டு விடைபெற்றுச்செல்வதற்காக வருவதாய்த் தெரியப்படுத்தினர். நாம் அவர்களுக்குத் தக்கபடி மரியாதை செய்து வழியனுப்பல் வேண்டும்.

சுகேசர் :—மஹாராஜா ! அவர்களையழைத்துவருவதற்காக நம் சேனைத்தலைவர் வீரசேனரே சென்றிருக்கின்றனர் : இன்னும் சிறிது நேரத்திற்குள் அவர்கள் இங்கே வருவார்களென்று நினைக்கின்றேன். போஜகுமாரரை நானே எதிர்கொண்டு சென்று மரியாதைகள் செய்து அழைத்துவருகின்றேன் ! (நிஷ்கிரமித்தல)

ஆதி :—எல்லாம் ஈசனது கிருபையால் நன்றாய் முடிந்தன ! அக்கொலைப்பாதகன் முஞ்ஜ ராஜனுந் தான் செய்த கொடுந்தொழிலுக்குத் தக்கபடி தானே குத்திக்கொண்டு இறந்தனன் ! நமது பிரிய நண்பராகிய சிந்துல மஹாராஜருடைய புதல்வர் போஜகுமாரரும், பலவித ஆபத்துக்களினின்றுந் தப்பித் தனது பந்துமித்திரர்களுடன் சேர்ந்தனர்! ஆ ஹா ! அவருடைய பராக்கிரமத்தை யான் என் சொல்வேன் ! நானும், அவ்வீரர்கள் இருவரும், அப்பாதகன் முஞ்ஜனது கபடத்தால் திடீரென்று கையும் பிடியுமாய் அகப்பட்டுக்கொண்டு சத்துரு சிபிரத்திற்குக் கொண்டுபோகப்படும் சமயத்தில், எங்கேயிருந்தோ வேற்றுருவுங்கொண்ட தேவசேனாபதிபோல் விரைந்தோடிவந்து, என்னையும் அவ்வீரர்களையும் க்ஷணத்தில் விடுவித்து, அப்பாதகனையுந் தலைகாட்டவொட்டாமல் ஓடச்செய்தனரன்றோ அம்மகவீரர்?—ஆஹா! இச்சமயத்தில் நம்கண்மணி லீலாவதி யிருந்திருப்பாளாயின், அவனுக்கே அவளை மணஞ்செய்து

கொடுத்து, இவ்விராஜ்ஜியத்தையு மவர்களுக்குத்தந்து யான் பேரானந்தமடைவேனே !

பத்மா :—பிராணேசுவரா ! நேற்று நாம் ஸாவித்திரீ தேவியாரையும் சாருமதீ தேவியாரையுங் காண்பதற்காகப் போகும்பொழுது வழியில் இருவரைத்தாங்கள் காண்பித்தீர்களே; அவர்கள்தாமோ அம்மகாவீரர்கள் ?

ஆதி :—ஆம் ! அவர்களே !

பத்மா :—அவர்களில், அச்சிறுவனைப பார்த்தீர்களா ? அவனைக் கண்டதுமுதல் என்மனத்தில் தோன்றாத எண்ணங்களெல்லாந் தோன்றுகின்றன. அவனைப்பார்த்ததும் நம்கண்மணி லீலாவதியைக் கண்டதுபோலிருந்தது!—(கண்ணீர்சொரிய) அச்செல்வியையும் நாம் காணப்பெறப்போகின்றோமோ ?

ஆதி :—ஆம் ! எனக்கும் அவர்களைக்கண்டதுமுதல் அச்சிறுவனிடத்திற் சொந்தப் பிள்ளையினிடத்திற்போல் ஓர் அதிர்வசநீயமான அன்பு உண்டாயிருக்கின்றது. ஆயினும், நமக்கினி அப்படிப்பட்ட பெண்மணியுங் கிடைக்கப்போகின்றனளா? நெடுநாள் வரைக்கும் மக்களில்லாது வருந்திேனும் ! ஏதோ ஸ்ரீ காலப்பிரியநாதருடைய அநுக்கிரஹத்தாற் புத்திரனில்லாவிடினும் வனிதாரத்தினமாகிய லீலாவதியைப் புதல்வியாயடைந்தோம். மக்களில்லா வருத்தத்தையும் சிலநாள் மறந்தோம். பூண்டோம் இவ்வுஜ்ஜயிநீ ராஜ்யாதிபத்யத்தை. ஆண்டோம் குறைவின்றி யனேக வருஷகாலம் ! கொண்டோம் திக்கெலாம் வெற்றியை ! கண்டோம் சகல சுகங்களையும் ! இவற்றையெல்லாம் நினைப்பதிற் பயனென்னே ? நம்கண்மணியை நாம் உயிருடன் பறிகொடுத்துப் பன்னிரண்டு வருஷங்களாயினவே! இன்னுமவளது செய்தி தெரியவில்லையே ! இப்பொழுது அவள் உயிருடனிருப்பின், பதினாறுவயதுள்ள திவ்யயுவதியாய் விவாகோசிதையாய் விளங்குவளன்றோ ? அவள் கிடைப்பின் நமக்கு நிகர் யார் இருப்பர் ?

பத்மா :—பிராணநாதா ! நினைக்க நினைக்க, நம்கண்மணி உயிருடனிருப்பளென்றே தோன்றுகின்றது !

ஆதி :—ஸ்ரீதேவியே யுருவெடுத்து வந்தாற்போலிருந்த அப்பெண்மணியைக் கண்டாயினும் யாம் உயர்நலம் பெறலாமென்றெண்ணி யிருந்தோமே ! அவளைப்பறிகொடுத்தும் நாம் இவ்விராஜ்ஜியசுகத்தை யனுபவிக்கவேண்டுமோ ? மேகத்திற் றோன்றும் மின்னலைப்போற் க்ஷணபங்குரமான இகத்திற்குச் சாதனமாகிய சிற்றின்பங்களை யனுபவித்தோமேயன்றி, பரத்திற்குச் சாதனமான ஒரு நற்றவத்தையும் யாம் புரிந்திலோமே !

மக்கள் யாவரு மொக்கவே யடையும்
இறப்பெனு முண்மையை மறப்ப ராயின்,
கேடுவே றுண்டோ? வீடுபேற் றிற்குத்
துறப்பெனுந் தெப்பந் துணைசெய் யாவிடில்
பிறப்புப் பெருங்கடல் கடக்க லாகுமோ ?
ஞான நெறியிற் போனவ ரன்றியும்
செல்வம் நீக்கிய செல்வ ரன்றியும்
யாவ ருயர்ந்த தேவநா டடைந்தார் ? (௫0)

(பிரவேசித்து).

ஒருசேவகன் :—மஹாராஜா ! நமது சேனைத்தலைவர் யாரோ இரண்டு பேரை யழைத்துவந்திருக்கிறார் ! உள்ளே வரலாமோவென்று கேட்டுவரச்சொன்னார்.

ஆதி :—உடனே சென்று வரச்சொல் ! (சேவகன் நிஷ்கிரமிக்க) பிராணேசுவரீ ! இவர்கள்தாம் நம்மை முதன் முதலிற் காப்பாற்றவந்த வீரர்களாயிருத்தல்வேண்டும்.

(ஜயபாலனும், புருஷவேஷத்துடனிருக்கும் லீலாவதியும், வீரசேனனை முன்னிட்டுக்கொண்டு பிரவேசித்தல் )

ஆதி :—(எழுந்து) வாருங்கள் எமது பிரியநண்பர்காள்! இவ்வாசனத்தில் வீற்றிருங்கள்! நுங்களது உதவியாற்றான் யாம் அன்று பிழைத்தோம்! நீவிர்செய்த பேருதவிக்கு யாம் என்ன கைம்மாறு செய்யப்போகின்றோம்? இவ்விராஜ்ஜியத்தையே தங்களுக்குப் பரிசாய்க்கொடுத்தாலும் போதாதே!

ஜய :—மஹாராஜா! நாங்கள் இவ்வளவு மரியாதைக்கு அர்ஹராகுவதற்கு யாதோருதவியுஞ் செய்யவில்லையே! அப்போஜகுமாரராற்றான், நாமெல்லோரும் உயிர்தப்பினோம். அம்மகா வீரரையழைத்து, அவருக்குச் செய்யுங்கள் ம்மரியாதைகளெல்லாம்.

லீலா :—(சாந்திகமாய்) எந்தாய்! இவர்தாமோ ஆதித்தியவர்ம மஹாராஜர்?

ஜய :—(சாந்திகமாய்) ஆம்! குழந்தாய்!

லீலா :—(ஆன்மகதமாய்) ஆகா! இவரைப்பார்க்கும் பொழுதே என்மனத்தில் இவரிடத்திலோர் அதிசயமான பக்தியுண்டாகின்றதே!

ஆதி :—(ஜயபாலனை நோக்கி) இச்சிறுவன் தமக்கு என்ன உறவினனோ? இவனது செயலைக் கண்டு மிகவும் மெய்ச்சுகின்றோம்.

ஜய :—மஹாராஜா! இச்சிறுவன் நம் புதல்வரிலொருவன். தமக்கே யிவனைப் பரிசளிக்க அழைத்துவந்தேன். இவனாற்றமக்குப் பிரியமுண்டாகுமென்பதிற் சந்தேகமில்லை.

லீலா :—வந்தனம்! (ஆதித்தியவர்ம மஹாராசரை வணங்குதல்)

ஆதி :—(ஆன்மகதமாய்) ஆகா! இவனது குரல்கூட நம் கண்மணி லீலாவதியின் குரலையொத்திருக்கின்றதே! என்னவிநயம்! என்ன பொறுமை! (பிரகாசமாய்) பாலகா! நீ இன்றுமுதல் எம்மையும் ஒரு தந்தையாக நினைக்கவேண்டும்!

லீலா :—மஹாப்பிரஸாதம்!

(பிரவேசித்து)

சுகேசர் :—மஹாராஜா! அவர்களெல்லோரும் நம்மரண்மனைத் தலைவாயிலில் வந்திருக்கின்றனர்! உள்ளேயழைத்து வரலாமோ?

ஆதி :—மந்திரீ! இதற்கென்னதடை! சீக்கிரஞ்சென்று அழைத்துவாரும்.

சுகே :—அப்படியே! (நிஷ்கிரமித்தல்.)

ஆதி :—(சாந்தமாய்) எனது பிரியநாயகீ! ஜகதீசனது கிருபையாற் சகலமும் மங்களமாய் அமைந்தன! நமக்கு இந்த யுத்தத்தில் இவ்வளவுபெருமையையும் வெற்றியையும் கொணர்ந்த அம்மகா வீரனுக்கு நாம் என்ன கைம்மாறு செய்யப்போகின்றோம்?

பத்மா :— (லீலாவதியைப் பார்த்துக்கொண்டே சாந்தமாய்) இச்சமயத்தில் நம் லீலாவதி கிடைப்பளாயின், அவளையவருக்கே மணஞ்செய்துகொடுத்து இந்த நாட்டையுமவர்களுக்குக் கொடுத்துவிடலாம்.

(நேபத்தியத்திற்குள் முரசகோஷம் முழக்குதல்)

ஆதி :—இதோ அவர்களும் வருகின்றார்கள்! (எழுந்திருத்தல்)

(போஜன், காளிதாசன், புத்திசாகரர், வத்ஸராஜர், ஹரிஹரர், கோவிந்தபண்டிதரும் சுகேசரை முன்னிட்டுக்கொண்டு பிரவேசித்தல்)

சபையோர் :—(எழுந்து நின்று) ஜய! ஜய! விஜயீ பவ!

ஆதி :—(எதிர்கொண்டுசென்று) போஜகுமாரரே வாரும்! எம்முயிரைக் காப்பாற்றிய வீரசிம்மமே வாரும்! வாருங் காளிதாசரே! வாரும் எமது பிரிய நண்பராகிய புத்திசாகரரே! எல்லோரும் வரவேண்டும்! நுங்களது உதவியாற்றான் எமது கீர்த்தியும், இராஜ்ஜியமும் நிலைத்தன! யாவரும் இங்கு

விஜயஞ் செய்யவேண்டும்! (யாவரும் ஆதித்தியவர்மரை வணங்கியுட்காரு தல்)

**போஜ:**—மஹாராஜா! நாங்கள் என்ன உதவிசெய்தோம்? தம்முடைய பேருதவியினாற்றான் நாங்கள் இப்பதவியை யடைந்தோம்.

**ஆதி:**—இராஜகுமாரா! உன் விநயமே எம்மைப் பரவசப்படுத்துகின்றது. இனி இவ்விராஜ்ஜியமு முன்னுடையதே!

**போஜ:**—மஹாராஜா! யான் இவ்வளவு மரியாதைக் கர்ஹனல்லேன்! வேண்டுமாயின் பரமோபகாரியான இப்பிராமணோத்தமருக்குச் செய்யுங்கள் இம்மரியாதைகளெல்லாம்.

**கோவிந்த:**—இராஜகுமாரா! ஏழையான எம்போன்றவர்களுக்கு இம்மரியாதைகள் எதற்கு? நீ இவைகளையெல்லாம் பெற்றுச் சக்கிரவர்த்தியாகிப் பிரஜைகளைப் பாதுகாத்து வந்தால் அதுவே எனக்குச் சகல ஸாம்ராஜ்யமுங்கிடைத்தது போலாகும்.

**ஜய:**—மஹாராஜா! என்னை மன்னித்து, யான் கூறுவனவற்றைச் சிறிது கவனித்துக் கேட்கவேண்டும். யான் தமக்குமாத்திரமன்று, இவ்விராஜகுமாரநுக்கும் பெருந்தீங்கிழைத்துவிட்டேன்.

**ஆதி:**—இஃது ஆச்சரியத்தினு மாச்சரியமே!

**போஜ:**—(சபபாலனை நோக்கி ஆனந்தமாய்) ஆ! இஃதென்ன! இவனன்றோ அப்பில்லராஜன்! இச்சிறுவன் யாவனோ? இவனைப் பார்க்கும்பொழுது என்னுயிர்க்காதலி லீலாவதியின் ஞாபகம் வருகின்றதே!

**ஜய:**—இல்லை! மஹாராஜா! மதிஹீநத்தினாற்றமக்கும் இவ்விராஜகுமாரருக்கும் மகத்தான அபராதத்தைப் புரிந்துவிட்டேன்!

இரக்கமுளங் கொள்ளாம
　　லிச்சிறுவ னொடுந் தமக்கு
மரசேயான் செய்தவப
　　ராதத்தை யென்சொல்வேன்!
புரிந்தபிழை பொறுத்தெனக்குப்
　　போதித்து நல்வழியைக்
கருணைகூர்ந் தடியேனைக்
　　காப்பதினி நும்பரமே! (௫௧)

ஆதி:—நீர் கூறுவதெல்லாம் விந்தையே! ஆயினும் நுமது கருத்தை விளக்குவீர்.

ஜய:—மஹாராஜா! சொல்கின்றேன்! கவனித்துக் கேட்கவேண்டும். யான் தாரை நாட்டிற்கும் இந்நாட்டிற்கும் மத்தியிலிருக்கும் ஒரு மலைநாட்டை யாண்டுவரும் பில்லராஜன்! எனது பெயர் ஜயபாலனென்பர்! களவுசெய்தலே எங்களுக்குச் சிறந்த தொழிலாயிருந்தது!

லீலா:—(ஆச்சரியமாய்) இதையுமொரு சிறந்த தொழிலென்று சொல்லுகின்றனரே! (தலைகுனிந்து நிற்றல்)

ஆதி:—(புன்சிரிப்புடன்) அதனாலென்ன! உலகத்தில் இதுவுமொரு தொழிலே! அதனாற்றான் அன்றோ 'களவுங் கற்று மற' என்று பெரியோர்கள் சொல்லுகின்றனர்! இனியதை நீரும் மறப்பீரென்றே நம்புகின்றோம்!

ஜய:—நுங்களது அநுக்கிரஹத்தால் அக்கொடுந்தொழிலை யான்முன்னரே விட்டுவிட்டேன். அது நிற்க, தங்களுக்கு ஞாபகமிருக்குமே? சுமார் பன்னிரண்டு வருஷங்களுக்குமுன், தாமுந் தேவியாரும் நான்கு வயதுள்ள ஒரு பெண் குழந்தையுடன் எனதூர்க்கத்திற் கருகில் வேட்டையாட வந்தீர்களன்றோ?

ஆதி :—ஆ! கஷ்டம்! அஃது இன்னும் நன்ருய் ஞாபகமிருக்கின்றது.

ஜய :—அப்பொழுது திடீரென்று ஒரு பதினாறடிவேங்கைப்புலி தூரத்திவர, ஒரு மரத்தடியில் அக்குழந்தையுடன் தங்கியிருந்த தமது சிப்பந்திகள் பயந்து அவ்விடத்திலேயே அதனைப் போட்டுவிட்டு ஓடத்தலைப்பட்டனரன்ருே?

ஆதி :—ஆம்! வாஸ்தவமே! பிறகு அக்குழந்தையின் கதி என்னவாயிற்ருே?

ஜய :—நான் அச்சமயத்தில் தற்செயலாய் அவ்விடம் வந்தேன். அக்குழந்தை தனியாய் அழுதுகொண்டிருப்பதைக் கண்டு, அதனைவிட்டுப்பிரிய மனமில்லாமல் என்னுடனெடுத்துச் சென்றேன். பிறகு தாங்களும் அவ்விடத்திற்றேடிவிட்டு எங்குங்காணுமற் கருத்து நொந்து நகருக்குத்திரும்பி வந்துவிட்டீர்கள்! அதுமுதல் அக்குழந்தை தாங்களிட்ட நாமதேயத்துடனே என் சொந்தமகளைப்போல் வளர்த்து வரப்பட்டனள்!

பத்மா :—நல்லது! அவள் உயிருடனிருக்கின்றனளோ?

ஜய :—(லீலாவதியைக்காட்டி) அம்மணி! இதோ இச்சிறுவனைப்போல் உடைதரித்து நிற்பவளே தமது செல்வப்புதல்வி லீலாவதி யாவள்!

லீலா:—(ஆனந்தமாய் சந்தோஷத்துடன்) ஆ ஆ! இம்மஹாராஜாவோ என் தந்தையார்! இம்மாதரசி தானே என்னைப்பெற்றவள்! இதுவரை இப்பில்லர்களின் வயிற்றிற் பிறந்தவளென்றன்ருே நினைத்திருந்தேன்.

ஜய:—குழந்தாய்! நீ மேலே போர்த்திருக்கும் புருஷஉடையைக்கழற்றிவிட்டு உன்தாய்தந்தையருக் கடிபணிவாய்! (லேலாவதியைக்கழற்றுதல்)

ஆதி :—ஆ இதென்ன! இவ்வாநந்த பரம்பரையால் எனக்குச் சித்தப்பிரமை யுண்டாகும்போலிருக்கின்றதே! என்ன

ஆச்சரியம்! யான் இழந்துவிட்ட என்னருமைப் புதல்வியோ இவள்! (லீலாவதியைக்கட்டியணைத்து) என் கண்மணீ! உன்னையான் இச்சமயத்திற் பெற்றபாக்கியமே பாக்கியம்.

**போஜ:**—(ஆனந்தமாய்) ஆ! என்னுயிர்க்காதலி லீலாவதியே! இவள் ஆதித்தியவர்மமஹாராஜருடைய புதல்விதானோ? அன்றேல் இவ்விதகுணமும் அழகும் எங்கிருந்துவரும்!

**சபை:**—(சந்தோஷத்துடன்) ஆச்சரியம்! ஆச்சரியம்!!

**பத்மா:**—(லீலாவதியை நோக்கி) என் கண்மணீ! என்னருகில் வந்து என்னைக் கட்டியணைப்பாய்! (கண்ணீர்பெருக) உன்னைக் காணாமல் நாங்கள்பட்ட வருத்தத்தை என் சொல்வோம்!

**லீலா:**—(அப்படியே செய்து) என்னருமைத்தாயே! எல்லாம் ஈசனது அருளே!

**ஆதி:**—ஜயபாலரே! இப்பேருதவிக்கு யாம் உமக்கு என்ன பிரதி செய்யப்போகின்றோம்!

**ஜய:**—மஹாராஜா! தாங்கள் என்னை மன்னிப்பதே எனக்குச் சிறந்த கைம்மாறு செய்ததாகும். ஆயினும் யான் இப்பெண்மணியைப்பற்றி ஒருசிறிய விண்ணப்பஞ் செய்யவேண்டியிருக்கின்றது.

**ஆதி:**—என்ன! இவளை யாருக்காயினும் மணஞ்செய்துவிட்டீரோ?

**ஜய:**—மஹாராஜா! அதைப்பற்றியே யான் சொல்லவந்தேன்! இதோ நிற்கின்றனரே போஜகுமாரர், இவர் இன்னாரென்றறியாமல், இவரை யோர் கடுங் காட்டிற்கண்டு இவரைக்கொண்டே இவரது அரண்மனையைக் கொள்ளையடித்தேன்! பிறகு இவரது பராக்கிரமத்தைக் கண்டு, இவரை என் துர்க்கத்திற்கழைத்துச் சென்று, இப்பெண்மணியையும்

இவருக்கு மணஞ்செய்து கொடுக்கலாமென்று நினைத்திருந்தேன்! இப்பெண்மணியும் இவர்மீது காதல் கொண்டனள்! அவருக்கும் இவள்மீது காதலுண்டாயிருக்கின்றதென்றறிந்து ஆநந்தங்கொண்டேன்! பிறகு கொலைபாவங்களுக்கஞ்சாதவளான என் மனைவியின் சொல்லுக்குப் பத்தப்பட்டு இவரைக்கொல்ல ஒப்புக்கொண்டேன். இதையறிந்து இப்பெண்மணியே அவரை எங்கள் கையினின்றுங் காப்பாற்றினள்! அவரது மெய்க்காதலையும் பெற்றனள்! ஆகலின் இச்சமயத்தில் இப்பெண்மணியை அம்மகா வீரருக்கே முறைப்படி மணஞ்செய்துகொடுப்பீர்களென்று பிரார்த்திக்கின்றேன்!

ஆதி:—சர்க்கரைப் பந்தலிற் றேன்மாரிபொழிந்தாற்போலாயிற்று!

ஜய:—(போஜனைநோக்கி) இராஜகுமாரரே! யான்செய்த பிழைகளைப் பொறுத்தருளவேண்டும்!

போஜ:—தாம்செய்தன வெல்லாமெனக்குபகாரமே!

ஆதி:—புத்திசாகரரே! தமக்கிந்தச்சம்பந்தம் சம்மதமோ?

புத்தி:—மஹாராஜா! இக்காட்சியையும் காண்பேனோவென்றிருக்க, இப்படித் தாங்கள் கேட்பது விந்தையே! இப்பெண்மணி பிறந்த உடனே இச்சம்பந்தத்தைத் தாமும் தமது நண்பர் சிந்துலராஜரும் ஏற்படுத்தி விட்டீர்களன்றோ? ஈசனது அருளால், இதற்கு விரோதமாய் நின்ற அப்பாதகன் முஞ்ஜனும் தற்கொலைபுரிந்து மாண்டனன்! அக்கற்பிற்கரசி விலாஸவதியும் தன்பிராணபந்துவை யடைந்தனள்! தாமும் வெகுநாளாய்க் காணாதிருந்த தம்புதல்வியைப் பெற்றீர்கள்! இனி இவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து மனமகிழ்ந்திருப்பதைக் காண்பதைவிட எனக்கு வேறென்ன வேண்டியது?

ஆதி:—இராஜகுமாரா! எம்புதல்வியைத்தாம் முன்னரே காந்தர்வத்தினால் மணந்தவராயினும், மறுபடியு மிப்பொ

மூது நாங்கள் கண்டு களிக்க இவளைப் பாணிக்கிரகணஞ் செய்து எங்களை யனுக்கிரஹிக்கவேண்டும். (போசனுக்கும் லீலாவதிக்கும் பாணிக்கிரகணஞ்செய்வித்தல்)

போஜ :—இவையெலாம் ஈசனது திருவருளே ?

*"உலகொடுயிர் பரமாகி யொளிருமொரு பொருளை
யுவமைகடந் தப்பாலுக் கப்பாலாம் பொருளைக்
கலகமிடுங் காமாதி பகைஞர்வலைப் பட்டுக்
கலக்கமுறு முயிர்ப்பறவை களைக்களையும்பொருளைப்
பலகலையின் முடிவின்முடி வாயிலகு பொருளைப்
பாவாபா வங்கடந்தோர் பங்கிலுறை பொருளை
யலகறுமா நந்தநிறை வேவடிவாம் பொருளை
யருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே!"

ஆதி :—சபையோர்காள் ! யான் கருதியதொன்றுளது ! அதை நீங்கள் நிறைவேற்றி வைக்கவேண்டும்.

§"ஐய சாலவு மலசின னரும்பெரு மூப்பும்
வெய்ய தாயது வியலிடப் பெரும்பரம் விசித்த
தொய்யின் மாநிலச் சுமையுறு சிறைதுறந் தினியா
னுய்ய லாவதோர் நெறிபுக வுதவிட வேண்டும் !"

ஆகலின், இப்பொழுதே இவர்களுக்கு முடிசூட்ட விடைதந்தருளவேண்டும்.

சபை :—அப்படியே ! மிகவுஞ்சந்தோஷம் !

ஆதி :— (போஜனையும் லீலாவதியையும் சிம்மாசனத்தில் வீற்றிருக்கச்செய்து, தனது மகுடத்தை போசனுக்குச் சூட்டி போஜகுமாரரே !

†"மன்னவன் வலிசெங் கோலினு லன்றி
வாளினுற் சேனையா லில்லை,

* அநுபவாநந்ததீபிகை § கம்பராமாயணம் † நீதிநூல்.

நன்னெறி வழுவா மன்னவன் றனக்கு
நாடெல்லாம் பேரர ஹுலகின்
மன்னுயி ரெல்லா மவன்படை யன்னோன்
மனமெலா மவனுறை பீடம்
இன்னதன் மையினு லரசளிப் பவனை
யிகல்செயுந் தெறுநரு முளரோ?" .(௫௪)

ஆதலால், நீவிர் இருவரும் நுமது பந்துமித்திரகளத்திரர்களுடன் நீடூழிகாலம் இச்சிம்மாசனத்தின்மீதுவீற்றிருந்து, ராஜாதிராஜராய், தாராராஜ்ஜியத்தையும் பூபாளராஜ்ஜியத்தையும் ஒப்படிப்பரிபாலித்து வருவீரோ, அப்படியே இவ்விராஜ்ஜியத்தையும் இரண்டாவது விக்கிரமாதித்யனென்று சொல்லும்படி பரிபாலித்து வருவீரெனப் பிரார்த்திக்கின்றேன்!

சபை:—மன்னர்திலகா! அப்படியே செய்து எங்களை விக்கிரமாதித்திய மஹாராஜாவைப்போற் களிக்கச் செய்வீரென்று பிரார்த்திக்கின்றோம்!

போஜ:—சபையோர்காள்! ஏதோ எம்மாலியன்றமட்டும் நீதிநெறிவழுவாமல் அரசுபுரிகின்றோம்.

புத்தி:—இராஜகுமாரா! நீ எல்லா முணர்ந்தவனாயினும், இச்சமயத்தில் யாமுனக்கு ஒன்று சொல்லவேண்டியதிருக்கின்றது! அதனைக் கவனித்துக்கேண்மோ!

* "கரிய மாலினுங் கண்ணுத லானினு
முரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்தினும் மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்!" ( )

போஜ:—எல்லாம் அவர்களுடைய அநுக்கிரகமேயன்றி வேறென்ன!

* கம்பராமாயணம்.

ஹரி :—அதற்கென்ன சந்தேகம் !

வத்ஸ :—அரசே ! யாமுனக்கு அதிகமாய்க் கூறவேண்டியதொன்றுமில்லை.

* ‘ சூது முந்துறச் சொல்லிய யாவையு
நீதி மன்ன நினைக்கிலை யாயினு
மேதமென்பன யாவையு மெய்துதற்
கேது மூல மவையென வோர்தியே!’ (௫௬)

போஜ :—அப்படியே !

கோவி :—ராஜசத்தமா ! சகலத்தையுமறிந்த உனக்கு யான் நீதியெடுத்துரைப்பது விந்தையே ! ஆயினும்,

*“ யாரொ டும்பகை கொள்கில னென்றபின்
போரொ டுங்கும் புகழொடுங் காதுதன்
தாரொ டுங்கல்செல் லாதது தந்தபின்
வேரொ டுங்கெடல் வேண்டலுண் டாகுமோ?”

போஜ :—அடிகாள் ! ஒருநாளுமில்லை !

காளி :—நண்பா ! அரசுரிமையில் யாவருந்துதிக்கத்தக்கவனான உனக்கு யான் கூறலும் வேண்டுமோ ?

* “உமைக்கு நாதற்கு மோங்குபுள் ளூர்திக்கு
மிமைப்பி லுட்டமொ ரெட்டுடை யானுக்குஞ்
சமைத்த தோள்வலி தாங்கின ராயினு
மமைச்சர் சொல்வழி யாற்றுத லாற்றலே !”( )

போஜ —நண்பா ! இதனைமறப்பின், அரசுபுரிதலுங் கூடுமோ ?

* கம்பராமயணம்.

**சுகேசர்** :—இதுதான் நீதிமன்னர்களுக்கிலக்கணம்!

* "வைய மன்னுயி ராகவும் மன்னுயி
ருய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்
கைய மின்றி யறங்கட வாதருண்
மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ?"

**வீர** :—வாஸ்தவம்!

"இனிய சொல்லின னீகைய னெண்ணினன்
வினையன் றூயன் விழுமியன் வென்றியன்
நினையு நீதி நெறிகட வானெனி
லனைய மன்னற் கழிவுமுண் டாங்கொலோ!"

**போஜ** :—தங்களது அநுக்கிரமிருக்குமளவும் எமக்கென்னகுறை?

நன்றினைத் தாய்போலு மருளுடன் மக்களைக்
கருத்துள மிருத்தி வேந்தர்
கடலினாற் சூழுமிப் புவனமண்ட லத்தையுங்
காப்பதே கடமை யாகும்!
மன்றுபுகழ் மாளவ மென்றென்று மோங்குமா
வளமுடன் பாது காத்து
மனஞ்சாட்சி யாகவுந் நிரவத்ய மாகவுமவ்
வண்கடமை நிறைவேற்றுவாம்!
நன்றுமதி சொலியெமக் குறுதியொடு வல்லமையு
நல்கியொரு தவறுமின்றி
நாட்டினிற் சாதிமத பேதங்கள் பாராது
நாட்டி நற்றன்ம நிலையை

* கம்பராமாயணம்.

என்றனுள மேவிநின் றெங்கணு நிறைந்துளோ
னீசுரன் தேவ தேவன்

என்னுடை விருப்பத்தை நிறைவேற் றுவாராக
வேமமா மெம்பிரானே! (சுக)

ஆதி :—அவ்வியாஜகருணா மூர்த்தியான எம்பிரான் அப்படியே நிறைவேற்றுவர்!

போஜ :—சான்றோர்காள்! யான் இவ்வளவு சுகத்தையும் நலத்தையும் பெறத்தக்கவனல்லேன! என் பிதாவுக்குப்பிராண நேசரும் எனக்கு ஆசிரியருமான புத்திசாகரரையே எனது முதன்மந்திரியா யடையப்பெற்றேன்! சகல நீதிகளையுமறிந்த ஹரிஹரரையும் சுகேசரையும் எமது முக்கிய சசிவர்களாகக் கொண்டேன்! எனக்குப் பரமோபகாரஞ் செய்த வத்ஸராஜரை யும் வீரசேனரையும் எனது மகாராஜ்ஜியத்திற்குச் சேனாதிபதிகளாகக் கொண்டேன்! என்னைக் கோரமான ஸர்ப்பத்தின் வாயினின்றும் காப்பாற்றிய கோவிந்த பண்டிதரை எனது ஆஸ்தான பண்டிதராகப் பெற்றேன்! பசிதாகத்தினாற் காட்டில்வருந்திக் கஷ்டப்பட்ட என்னைக் கருணையுடன் காப்பாற்றிய பில்லராஜர் ஜயபாலரையே எனது தனபாலகராகவடைந்தேன்! என் பிராணனைப் பலமுறைக் காப்பாற்றின என் பிராணநேசன் காளிதாசனையும் அந்திரதேசத்தையாண்டவர எனக்குப் பிரதிநிதியாகக்கொண்டேன்! ஆதித்திய வர்ம மகாராஜரது நல்லபிப்பிராயத்தையுங்கொண்டேன்! கற்பிற்கரசி விலாஸவதியையும் அடைந்தேன்! என்னுயிர்க்காதலி லீலாவதியையும் மணம்புரிந்தேன்! நுங்களது அநுக்கிரகத்தால் இம்மத்தியதேசம் முழுதிற்கும் சக்கிரவர்த்தியானேன்! இவ்வுலகில் யான் விரும்பத் தக்கனவெல்லா மெய்தினேன்! இனி எனக்கென்னோ குறை? எல்லாம் ஈசனது திருவருளே!

*"தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை
மூவர் கோனாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்மையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம்
மேவினோ மவனடியா ரடியா ரோடு
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே!" ()

(மலர்மாரிபெய்து யாவரும்நிஷ்கிரமித்தல்.)

* திருவாசகம்.



# செய்யுண் முதற் குறிப் பகராதி.

(* இக்குறியுற்றன மேற்கோட்பாக்களாம்; † இக்குறியுற்றன மாறுதலடையப்பெற்ற மேற்கோட்பாக்களாம்.)

# கீர்த்தன முதற் குறிப் பகராதி.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கூ | கரு | நிலகண்ட | நீலகண்ட |
| கரு | கஉ | தன் | தான் |
| கரு | உஅ | கரத்தை | கரத்தை |
| ககூ | ககூ | தம்மை | தங்களை |
| உக | உச | செய்ய | செய்தல் |
| ருரு | கஉ | நம்மருமை | நம் அருமை |
| சஎ | க | நலிழ்தா | நலிந்தா |
| ருக | உஅ | என்ன | எவ்வளவு |
| ருச | உஎ | இன்றைய | இன்றைத் |
| எஉ | கரு | மூமியில் | பூமியில் |
| எரு | ரு | போஜனுக்கு | போஜனுக்குப் |
| அ0 | கக | காந்தி | கார்த்தி |
| அஉ | உரு | மெய்மறந்து | மெய்ம்மறந்து |
| கூசு | ககூ | வன் | வன்நம் |
| கூஅ | கூ | கல்வி | கலவி |
| க0க0 | உ | நாமொ | நாமொரு |
| ககரு | உஅ | தோட்டிய சின்னன் | தொட்டிச் சின்ஞன் |
| ககஎ | ரு | ராஜனு | ராஜாவு |
| ககஅ | க0 | மாதர் | மனைவி |
| ,, | உ0 | இரகக் | இரக்க |
| கஉரு | ரு | விஷம் | விஷயம் |
| கஉஎ | கஉ | ஒபிப்க்க | ஒப்பிக்க |
| ககூஉ | உ0 | கொலைபா | கொலைப்பா |
| ககூரு | உ0 | சோல்வேன் | சொல்வேன் |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கச0 | உ0 | னேமேடா | னுமேடா |
| கருஅ | உக | கொலேபா | கொலேப்பா |
| கஎரு | உச | பிரஜைகனின் | பிரஜைகளின் |
| கஎஅ | க0 | யாண | யாணு |
| கஎகூ | உ | குற்றி | குர்ரி |
| ,, | கரு | கெள்ள | கென்ன |
| கஅஉ | ரு | யில்லாமல் | இல்லாமல் |
| கஅஅ | கஎ | கிட்டெ | கிட்ட |
| கஅகூ | அ | பொருமே | பொறுமே |
| ககூ0 | கச | வருந்தியிரு | வருந்தி |
| ககூஅ | கஉ | தில் | த்தில் |
| உ00 | உ0 | மலிந் | மெலிந் |
| உஉரு | எ | கிடையா | கிடையாதே |
| உஉசா | க0 | ஏனில்வா | ஏனிவ்வா |
| உருக | உக | ஆகாரத்தை | ஆகிருதியை |
| உருரு | உ | இறதட்டு | இருதட்டு |
| உருஎ | உஎ | முள்ளைத | முள்ளைதக்க |
| உசச | உஅ | மேற்கு | மேற்குத் |
| உசரு | உ | ராஜக்கு | ராஜா அவர்களுக்கு |
| உசஅ | உசா | தெரிஞ்சாலென்று | தெரிஞ்சான்று |
| உசகூ | உஅ | அரிச்சந்திர | * அரிச்சந்திர |
| உரு0 | கக | சுறிற் | சுற்றி |
| உருக | எ | மூச்சு | மூச்சு |
| உசாஉ | கக | முகிலிசை | மூவ்விசை |
| ,, | உஎ | அல்லலநா | அந்தலலநா |
| ,, | உகூ | திருடஞ் | திடஞ் |
| உசாச | உக | இக்ஷணமே | இந்தக்ஷணமோ |
| உசாகூ | உசா | லீலாவதி | லீலாவதி |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| ௨௬௯ | ௨௮ | பெருமையாக.ா | பெருமையாகா. |
| ௨௭௦ | ௪ | இவ்லகில | இவ்வுலகில் |
| ,, | ௧௧ | உன்ணை | உன்னை |
| ௨௭௨ | ௧௨ | மறவா | மரவா |
| ௨௭௪ | ௨௦ | மேற் கூறியபடி | கையிற் கத்தி கொண்டு |
| ௨௭௮ | ௧௩ | தனது | தமது |
| ௨௮௧ | ௩ | தாலத்தில் | தாதலத்தில் |
| ௨௮௨ | ௬ | சோல்வே | செல்வே |
| ,, | ௨௫ | பெசி | பேசி |
| ௨௮௩ | ௧௯ | லினை | வினை |
| ௨௮௫ | ௬ | அக்கொலை | அக்கொலைப் |
| ௨௮௭ | ௧௯ | இவ்வித | இவ்விதத் |
| ௨௯௧ | ௧௭ | புரிய | புரிந்து இவனை யுமப்புரத்திற்கனுப்ப |
| ௨௯௩ | ௧௨ | வெண்டும் | வேண்டும் |
| ௩௦௭ | ௨௨ | வருந்த | வருக்த |
| ௩௧௩ | ௨௬ | விவ்லையே | வில்லையே |
| ௩௨௦ | ௨௨ | இவளுலடய | இவளுடைய |
| ௩௨௭ | ௨௮ | கின்றது | கின்றது. |
| ௩௨௯ | ௯ | தருவது | தளருவது |
| ,, | ௧௧ | நரத்தை | நரகத்தை |
| ௩௩௨ | ௧௭ | தப்பித்து | தப்பித்துச் |
| ௩௪௦ | ௨௭ | மகவீரர் | மகாவீரர் |
| ௩௪௩ | ௨ | வீற்றீ | விற்றி |
| ௩௪௮ | ௨௪ | யோர் | யொரு |
| ௩௫௪ | ௧௪ | ஸப்ப | ஸர்ப்ப |

---

# DRAMATIC WORKS

BY

## The Members of the Vidvan Mano Ranjani.

---

## TAMIL.

### Mr. V. G. Suryanarayana Sastriar, B.A.

| | | | RS. | A. | P. |
|---|---|---|---|---|---|
| 1. | Rûpâvati or The Missing Daughter. | (Calico)... | 1 | 0 | 0 |
| 2. | Kalâvati. | (Board)... | 1 | 8 | 0 |
| | | (Calico)... | 1 | 12 | 0 |
| 3. | Nâtakaviyal (on Dramaturgy) | (Paper)... | 0 | 8 | 0 |

### Mr. T. S. Narayana Sastriar, B.A., B.L.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | Bhoja Charitram. | (Board)... | 1 | 0 | 0 |
| | | (Calico)... | 1 | 4 | 0 |
| 2. | Sâvitri. | | *(In Press.)* | | |

### Mr. H. Venkoba Row.

The Heir-apparent's Resolve. *(In Press.)*

# TELUGU.

## Mr. V. Venkataraya Sastriar.

| | | | RS. | A. | P. |
|---|---|---|---|---|---|
| 1. | Nâgânandamu. | ... | 1 | 0 | 0 |
| 2. | Abhijnâna Sâkuntalamu. | ... | 1 | 0 | 0 |
| 3. | Pratâparudrîyamu. | (Paper)... | 1 | 0 | 0 |
| | | (Calico)... | 1 | 4 | 0 |

# ENGLISH.

## Mr. M. Krishnamachariar, B.A.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | Kumudâ. | (Paper)... | 0 | 8 | 0 |
| 2. | Dasaratha or The Fatal Promise. | *(In Press.)* | | | |

# SANSKRIT.

## Mr. T. S. Narayana Sastriar, B.A., B.L.

Satya Vijayam or Harischandra. *(In Press.)*